339

Madras & Andhra Universities

# THE TAMIL TEXT BOOK

FOR

## The S.S.L.C. Public Examination

AND FOR

## The Matriculation Examination

1948




TB
O-,6(5)
N47
146207

Price Rs. 1-4-0

MADRAS AND ANDHRA UNIVERSITIES

# THE TAMIL TEXT BOOK

FOR

THE S. S. L. C. PUBLIC EXAMINATION

and for

THE MATRICULATION EXAMINATION

1948




PRINTED AT

HADDON & CO., 49, BADRIAN ST, MADRAS.

1947

# மனப்பாடம் பண்ணவேண்டிய பகுதிகள்

| பகுதி | செய்யுள் எண் | | வரிகள் |
| --- | --- | --- | --- |
| 1. | பரம்பொருள் வாழ்த்து. | ... | ... 10 |
| 2. | தமிழ்த்தாய் வாழ்த்து. | ... | ... 8 |
| 3. | திருக்குறள். கல்வி. 1-10 | ... | ... 20 |
| 4. | நாலடியார். 1, 3, 5 | ... | ... 12 |
| 5. | சிலப்பதிகாரம். (வரிகள் 25) 44 | ... | ... 20 |
| 6. | பெரியபுராணம். 2-5 ; 13-16 ; 43-44 ; | ... | ... 40 |
| 7. | இராமாயணம். 14, 15, 23, 24, 32, 33, 41, 44, 47, 48 | | ... 40 |
| 8. | புறநானூறு. 1. | ... | ... 9 |
| 9. | மீனுட்சி அம்மை பிள்ளைத்தமிழ். | ... | ... 8 |
| 10. | தேசிக விநாயகம் பிள்ளை. 4, 5 | ... | ... 8 |
| 11. | சோமசுந்தர பாரதியார். மாரிவாயில். 1-3 | ... | ... 12 |
| 12. | நாமக்கல். வெ. இராமலிங்கம் பிள்ளை. | ... | ... 8 |
| 13. | பாரதிதாசன். 1, 2 | ... | ... 8 |
| | | ஆக மொத்தம். | 203 |




TB
O-,6(S)
N47

# பொருளடக்கம்

## செய்யுட்பகுதி

---

# I. வாழ்த்துப் பகுதி

## * 1. பரம்பொருள் வாழ்த்து. பாரதியார்.

ஆத்தி சூடி யிளம்பிறை யணிந்து
மோனத் திருக்கு முழுவெண் மேனியான்
கருநிறங் கொண்டுபாற் கடல்மிசை கிடப்போன்
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்
ஏசுவின் தந்தை யெனப்பல மதத்தினர்

உருவகத் தாலே உணர்ந்துண ராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே ; அதனியல் ஒளியுறு மறிவாம் ;
அதனிலை கண்டார் அல்லலை அகற்றினர் ;
அதனருள் வாழ்த்தி அமரவாழ் வெய்துவோம்.

OFFICE OF THE REGISTRAR
1947
MADRAS

* 'மாரிவாயில் !

## 2: தமிழ்த்தாய் வாழ்த்து. சோமசுந்தர பாரதியார்

தமிழினிய தெய்வதமே மொழிகள்குலத் தனிவிளக்கே
தகவெழில்மெய் சீர்த்த சொல்லின்
அமிழ்துவிழைந் தடுத்தபல புலவரெலாம் அசையலையைக்
கடைந்தபொழு தழகி ஞெங்கும்
துமியினிடை யெழுந்தொளிருஞ் செல்விஅறி வெனுமலவன்
துணிவியருண் முதல்வி தூய்மை
கமழ்கவிதை உலகுபடை கவிஞருளங் கனிவிக்குங்
காதல்வளர் கன்னி வாழி.

---

* பாரதி பிரசுராலயத்தாரின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

* திரு. சோமசுந்தர பாரதியார் அவர்களின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

# II. அறவுரைப் பகுதி

## 1. திருக்குறள்

### 1. புறங்கூறாமை

1. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது

2. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

3. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும்.

4. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

5. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

6. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்
திறன்றெரிந்து கூறப் படும்.

7. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பார் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

8. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினர்
என்னைகொ லேதிலார் மாட்டு.

9. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

10. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ வாழுமுயிர்க்கு.

### 2. கல்வி

1. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

2 எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

3. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

4. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

5. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

6. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

7. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

8. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

9. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

10. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

## 2. நாலடியார்

### கல்வி

1. இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கு மருந்து.

2. களர்நிலத் துப்பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

3. வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வார்
எச்ச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சை மற்றல்ல பிற.

4. கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்

ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து.

5. தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையா
ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்பர் உறைவார் பதி.

## * 3. புறத்திரட்டு

### பொய்யாமை

1. தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணூர்கைத் துண்ணற்க—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்

—நாலடியார்.

2. இம்மை நலனழிக்கும் எச்சங் குறைபடுக்கும்
அம்மை அருநரகத் தாழ்விக்கும்—மெய்ம்மை
அறந்தேயும் பின்னு மலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய்.

—சிறுபஞ்சமூலம்

3. பொய்யின் நீங்குமின் பொய்யின்மை பூண்டுகொண்
டைய மின்றி அறநெறி ஆற்றுமின்
வைகல் வேதனை வந்துற வொன்றின்றிக்
கௌவை யில்லுல கெய்துதல் கண்டதே.

—வளையாபதி.

4. கல்வி யின்மையும் கைப்பொருள் போகலும்
நல்லில் செல்லல்க ளால்நலி வுண்மையும்
பொய்யில் பொய்யொடு கூடுதற் காகுதல்
ஐயமில்லை அதுகடிந் தோம்புமின்.

—வளையாபதி.

5. மலங்கிமதி•யின்றியயர் வெய்திமயல் கூர
நலங்கியறி யாததுயர் எய்திநனி வாடும்
விலங்குறு கடுந்துயர் விலக்குதல் விரும்பிற்
புலன்கொள்வழி-பொய்யுரை புறத்திடுமின் என்றான்.

—சிந்தாமணி.

---

* சென்னைப் பல்கலைக் கழகத்தாரின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

# III. தொடர்நிலைச் செய்யுட்பகுதி

## 1. மணிமேகலை

### ஆதிரை பிச்சையிட்ட காதை

#### சாதுவன் நாகர்களின் ஆசிரியனுக்குக் கொலையும் புலையும் தவிர்க என அறவுரைபகர்தல்

மயக்குங் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துன்மையின்
நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலும்
அல்லறஞ் செய்வோர் அருநர கடைதலும்

உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர்
கண்டனை யாகெனக் கடுநகை எய்தி
உடம்புவிட் டோடும் உயிருருக் கொண்டோர்
இடம்புகும் என்றே எமக்கீங் குரைத்தாய்
அவ்வுயிர் எவ்வணம் போய்ப்புகும் அவ்வகை
செவ்வனம் உரையெனச் சினவா திதுகேள்

#### உடலுக்குள் உயிர் இருப்பதைச் சாதுவன் விளக்கிக் காட்டல்

உற்றதை உணரும் உடலுயிர் வாழ்வுழி
மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடில்
தடிந்தெறி ஊட்டினுந் தானுண ராதெனின்
உடம்பிடைப் போனதொன் றுண்டென உணர்நீ

போனோர் தமக்கோர் புக்கிலுண் டென்பது
யானோ வல்லேன் யாவரும் உணர்குவர்
உடம்பீண் டொழிய உயிர்பல காவதம்
கடந்துசேண் சேறல் கனவினுங் காண்குவை
ஆங்ஙனம் போகி அவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையின் புகுவது தெளிநீ

#### கொலையும் புலையும் தவிராமல் தான் செய்யக்கூடிய அறம் யாதென சாதுவன் அறிவுறுத்தல்

என்றவன் உரைத்தலும் எரிவிழி நாகனும்
நன்றறி செட்டி நல்லடி வீழ்ந்து
கள்ளும் ஊனும் கைவிடின் இவ்வுடம்பு
உள்ளுறை வாழுயிர் ஓம்புதல் ஆற்றேன்

தமக்கொழி மரபின் சாவுறு காறும்
எமக்கா நல்லறம் எடுத்துரை யென்றலும்
நன்று சொன்னாய் நன்னெறிப் படர்குவை
உன்றனக் கொல்லும் நெறியறம் உரைக்கேன்
உடைகல மாக்கள் உயிருய்ந் தீங்குறின்

அடுதொழில் ஒழிந்தவர் ஆருயிர்ஓம்பி
மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்
தீத்திறம் ஒழிகெனச் சிறுமகன் உரைப்போன்
ஈங்கெமக் காகும் இவ்வறம் செய்கேம்
ஆங்குனக் காகும் அரும்பொருள் கொள்கெனப்

பண்டும் பண்டும் கலங்கவிழ் மாக்களை
உண்டேம் அவர்தம் உறுபொருள் ஈங்கிவை
விரைமரம் மென்றுகில் விழுநிதிக் குப்பையோ
டிவையிவை கொள்கென எடுத்தனன் கொணர்ந்து
சந்திர தத்தன் என்னும் வாணிகன்

வங்கஞ் சேர்ந்ததில் வந்துடன் ஏறி
இந்நகர் புகுந்திங் கிவளொடு வாழ்ந்து
தன்மனை நன்பல தானமும் செய்தனன்
ஆங்கனம் ஆகிய ஆதிரை கையால்
பூங்கொடி நல்லாய் பிச்சை பெறுகென

மனையகம் புகுந்து மணிமேகலை தான்
புனையா ஓவியம் போல நிற்றலும்
தொழுதுவலங் கொண்டு துயரறு கிளவியோ
டமுத சுரபியின் அகன்சுரை நிறைதரப்
பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென
ஆதிரை யிட்டனள் ஆருயிர் மருந்தென்.

---

## 2. சிலப்பதிகாரம்-அடைக்கலக் காதை

**புறஞ்சேரியில் நின்றும் நீங்கி மதுரை (அக) நகருக்குள் போயிருக்கும்படி மாடலனும் காவுந்தியடிகளும் கோவலனை வேண்டல்**

அறத்துறை மாக்கட் கல்ல திந்தப்
புறச்சிறை யிருக்கை பொருந்தா தாகலின்
அரைசர் பின்னோ ரகநகர் மருங்கினின்

உரையிற் கொள்வரிங் கொழிகநின் னிருப்பக்
காதலி தன்னொடு கதிர்செல் வதன்முன்
மாட மதுரை மாநகர் புகுகென
மாதவத் தாட்டியு மாமறை முதல்வனுங்
கோவலன் றனக்குக் கூறுங் காலை

## மாதரி ஆங்குவரல்

அறம்புரி நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பூங்க ணியக்கிக்குப்
பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோள்
ஆயர் முதுமகண் மாதரி யென்போள்
காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்
ஆகாத் தோம்பி யாப்பய னளிக்குங்
கோவலர் வாழ்க்கையோர் கொடும் பாடில்லை
தீதிலண் முதுமகள் செவ்வியள ளளியள்
மாதரி தன்னுடன் மடந்தையை யிருத்துதற்
கேத மின்றென வெண்ணின ளாகி

## மாதரியிடம் கண்ணகியை அடைக்கலமாகத் தந்து, காவுந்தி அடிகள் அடைக்கலப் பொருளாகிய கண்ணகியின் கற்பு மேம்பாட்டுச் சிறப்பைத் தெரிவித்தல்

மாதரி கேளிம் மடந்தைதன் கணவன்
தாதையைக் கேட்கில் தன்குல வாணர்
அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்
உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவும்
இடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்
மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனந் தீட்டித்
தேமென் கூந்தற் சின்மலர் பெய்து
தூமடி உடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமுங் காவலு மாயிழை தனக்குத்
தாயும் நீயே யாகித் தாங்கிங்
கென்னொடு போந்த விளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மக ளறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி

இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்

### கற்புடைப் பெண்டிர் வசிக்கும் நாட்டின் சிறப்பை அடிகள் கூறல்

வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது

பத்தினிப் பெண்டி ரிருந்த நாடென்னும்
அத்தகு நல்லுரை யறியா யோநீ
தவத்தோ ரடைக்கலந்தான் சிறிதாயினும்
மிகப்பே ரின்பம் தருமது கேளாய் (என்று)
கவுந்தி கூற உவந்தனள் ஏத்தி

### அதைக்கேட்ட மாதரி உவந்து அவர்களை அழைத்துக்கொண்டு மதுரை புகல்

முளையிள வெண்பன் முதுக்குறை நங்கையொடு
சென்ற ஞாயிற்றுச் செல்சுட ரமயத்துக்
கன்றுதே ராவின் கனைகுரலியம்ப
மறித்தோ ணவியத் துறிக்கா வாளரொடு
செறிவளை யாய்ச்சியர் சிலர்புறஞ் சூழ

### மாதரி மதுரை நகரும், காவற்காடும், கிடங்கும், மதிலும் கழிந்து தன் மனைபுகல்

மிளையும் கிடங்கும் வளைவிற் பொறியும்
கருவிரல் ஊகமும் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்,
காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும்
தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை யடுப்பும்

கவையுங் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமும் கைபெய லூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவும் சீப்பும் உழுவிறற் கணையமும்
கோலும் குந்தமும் வேலும் பிறவும்

ஞாயிறுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும்
வாயில் கழிந்துதன் மனைபுக் கனளால்
கோவலர் மடந்தை கொள்கையிற் புணர்ந்தென்.

---

# 3. பெரியபுராணம்.

## தடுத்தாட்கொண்ட புராணம்

### நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருமணப் பந்தருக்குச் சிவபெருமான் ஒரு முதுமறையோர் வடிவில் வருதல்

1. வருமணக் கோலத் தெங்கள் வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு சென்றுவெண் சங்கம் எங்கும்
பெருமறைக் குலத்தின் ஆர்ப்பப் பரிமிசை இழிந்து பேணும்
ஒருமணத் திறத்தின் ஆங்கு நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்.

வேறு.

### முதுமறையோரின் தோற்றப் பொலிவு.

2. கண்ணிடை கரந்தகதிர் வெண்படம் எனச்சூழ்
புண்ணிய நுதல்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதிர் சாய்வதென மீதே
வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க.

3. காதிலணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பின்அசை நூலினொடு தோளின்
மீதுபுனை உத்தரிய வெண்துகில் நுடங்க
ஆதபம் மறைக்குடை அணிக்கரம் விளங்க.

4. பண்டிசரி கோவண உடைப்பழைமை கூரக்
கொண்டதோர் சழங்கலுடை ஆர்ந்தழகு கொள்ள
வெண்துகில் உடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழல் தள்ளுநடை கொள்ள.

5. மொய்த்துவளர் பேர்அழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனும் அதன்படிவ மேயோ
மெய்த்த நெறி வைதிகம் விளைந்தமுத லேயோ
இத்தகைய வேடம்என ஐயமுற எய்தி.

6. வந்துதிரு மாமறை மணத்தொழில் தொடங்கும்
பந்தரிடை நம்பிஎதிர் பன்னுசபை முன்னின்று
"இந்தமொழி கேண்மின்எதிர் யாவர்களும்" என்றான்
முந்தைமறை ஆயிரம் மொழிந்ததிரு வாயான்.

## மறையவர், தமக்குள் இருக்கும் வழக்கினைத் தீர்த்தபின் மணம் நடக்கட்டும் என்று நம்பியாரூரரைத் தடுத்தல்.

7. என்றுரைசெய் அந்தணனை எண்ணில்மறை யோரும்
மன்றல்வினை மங்கலம டங்கலனை யானும்
" நன்றுமது நல்வரவு நங்கள்தவம் என்றே
நின்றதிவண் நீர்மொழிமின் நீர்மொழிவ " தென்றார்

8. பின்னுகனும் நாவலர் பெருந்தகையை நோக்கி
" என்னிடையும் நின்னிடையும் நின்றஇசை வல்யான்
முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயல்தி " என்றான்

9. நெற்றிவிழி யான்மொழிய நின்றநிகர் இல்லான்
" உற்றதொர் வழக்கெனிடை நீயுடைய துண்டேல்
மற்றது முடித்தலது யான்வதுவை செய்யேன்
முற்றஇது சொல்லு " கென எல்லைமுடி வில்லான்

10. " ஆவதிது கேண்மின்மறை யோர்என்அடி யான்இந்
நாவல்நகர் ஊரன் இது நான்மொழிவ " தென்றான்
தேவரையும் மால்அயன் முதல்திருவின் மிக்கோர்
யாவரையும் வேறடிமை யாவுடைய எம்மான்.

## நம்பியாரூர்அடிமை என்றது கேட்டு எல்லோரும் வெகுண்டு சிரித்தல்.

வேறு.

11. என்றான் இறையோன் அதுகேட்டவர் எம்ம ருங்கும்
நின்றார் இருந்தார் இவன் என்நினைந் தான்கொல்" என்று
சென்றார் வெகுண்டார் சிரித்தார் திருநாவ லூரர்
" நன்றால் மறையோன்மொழி " என்றெதிர் நோக்கி நக்கார்.

12. நக்கார் முகம்நோக்கி நடுங்கி நுடங்கி யார்க்கும்
மிக்கான் மிசையுத் தரிகத்துகில் தாங்கி மேற்சென்று
" அக்காலம் உன்தந்தை தன்தந்தை ஆள்ஓலை ஈதால்
இக்கா ரியத்தை இன்றுநீ சிரித்ததென் ஏடா?" என்ன.

## மறையவருக்கும் நம்பிஆரூரருக்கும் வாதம்.

வேறு.

13. மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி
நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியால் சிரிப்பு நீங்கி
" ஆசில்அந் தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை ஆதல்
பேசஇன் றுன்னைக் கேட்டோம் பித்தனோ மறையோய் " என்றார்.

14. " பித்தனும் ஆகப் பின்னும் பேயனும் ஆக நீயின்
றெத்தனை தீங்கு சொன்னால் யாதும்மற் றவற்றால் நாணேன்
அத்தனைக் கென்னை ஒன்றும் அறிந்திலை யாகில் நின்று
வித்தகம் பேச வேண்டாம் பணிசெய வேண்டும்" என்றான்.

15. " கண்டதோர் வடிவால் உள்ளங் காதல்செய் துருகா நிற்கும்
கொண்டதோர் பித்த வார்த்தை கோபமும் உடனே ஆக்கும்
உண்டொராள் ஓலை என்னும் அதன்உண்மை அறிவேன்" என்று
தொண்டனர் " ஓலை காட்டு"கென்றனர் துணைவனாரை.

16. "ஓலைகாட் "டென்றுநம்பி உரைக்க" நீ ஓலை காணற்
பாலையோ அவைமுன் காட்டப் பணிசெயற் பாலை" என்ற
வேலையில் நாவ லூரர் வெகுண்டுமேல் விரைந்து சென்று
மாலயன் தொடரா தானை வலிந்துபின் தொடர லுற்றார்.

## அடிமை ஓலையைப்பற்றி ஆரூரர் கிழித்தலும் மறையவர் முறையீடும்.

17. ஆவணம் பறிக்கச் சென்ற அளவினில் அந்த ணாளன்
காவணத் திடையே ஓடக் கடிதுபின் தொடர்ந்து நம்பி
பூவணத் தவரை உற்றார் அவரலால் புரங்கள் செற்ற
ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார்.

18. மறைகளா யினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற
இறைவனைத் தொடர்ந்து பற்றி எழுதும் ஆள்ஓலை வாங்கி
அறைகழல் அண்ணல் " ஆளாய் அந்தணர் செய்தல் என்ன
முறை" எனக் கீறியிட்டார் முறையிட்டான் முடிவி லாதான்.

19. அருமறை முறையிட் டின்னும் அறிவதற் கரியான் பற்றி
ஒருமுறை முறையோ என்ன உழைநின்றார் விலக்கி" இந்தப்
பெருமுறை உலகில் இல்லா நெறிகொண்டு பிணங்கு கின்ற
திருமறை முனிவ ரேநீர் எங்குளீர் செப்பும் என்றார்.

20. என்றலும் நின்ற ஐயர் " இங்குளேன் இருப்புஞ் சேய
தன்றிந்த வெண்ணெய் நல்லூர் அதுநிற்க அறத்தா றின்றி
வன்திறல் செய்தென் கையில் ஆவணம் வலிய வாங்கி
நின்றிவன் கிழித்துத் தானே நிரப்பினான் அடிமை" என்றான்.

21. குழைமறை காதி னானைக் கோதில்ஆ ரூரர் நோக்கிப்
" பழையமன் றாடிபோலும் இவன்" என்று பண்பில் மிக்க
விழைவுறு மனமும் பொங்க " வெண்ணெய்நல் லூரா யேல்உன்
பிழைநெறி வழக்கை ஆங்கே பேசநீ போதாய்" என்றார்.

## எல்லோரும் வெண்ணெய்நல்லூர்ச் சபைக்குப் போதல்.

22. வேதியன் அதனைக் கேட்டு "வெண்ணெய்நல் லூரி லேநீ
போதினும் நன்று மற்றப் புனிதநான் மறையோர் முன்னர்
ஆதியில் மூல வோலை காட்டிநீ அடிமை யாதல்
சாதிப்பன்" என்று முன்னே தண்டுமுன் தாங்கிச் சென்றான்.

23. செல்லுமா மறையோன் தன்பின் திரிமுகக் காந்தஞ் சேர்ந்த
வல்லிரும் பணையு மாபோல் வள்ளலுங் கடிது சென்றார்
எல்லையில் சுற்றத் தாரும் "இது என்னும்" என்று செல்ல
நல்லஅந் தணர்கள் வாழும் வெண்ணெய்நல் லூரை நண்ணி.

24. வேதபா ரகரில் மிக்கார் விளங்குபேர் அவைமுன் சென்று
நாதனும் மறையோன் சொல்லும் "நாவலூர் ஆரூ ரன்தான்
காதலென் அடியான் என்னக் காட்டிய ஓலை கிறி
மூதறி வீர்முன் போந்தான் இதுஎன்றன் முறைப்பா"டென்றான்.

## மறையவர் ஓலைகாட்டி வழக்காடுதல்

26. அந்தணர் அவையில் மிக்கார் "மறையவர் அடிமை ஆதல்
இந்தமா நிலத்தில் இல்லை என்சொன்னாய் ஐயா" என்றார்
வந்தவா றிசைவே அன்றோ வழக்கிவன் கிழித்த ஓலை
தந்தைதன் தந்தை நேர்ந்தது" என்றனன் தனியாய் நின்றான்.

27. "இசைவினால் எழுதும் ஓலை காட்டினான் ஆகில் இன்று
விசையினால் வலிய வாங்கிக் கிழிப்பது வெற்றி ஆமோ
தசையெலாம் ஒடுங்க மூத்தான் வழக்கினை சாரச் சொன்னான்
அசைவில் ஆரூரர் எண்ணம் என்" என்றார் அவையில் மிக்கார்.

28. "அனைத்துநூல் உணர்ந்தீர்! ஆதி சைவனென் றறிவீர் என்னைத்
தனக்குவே றடிமை என்றிவ் அந்தணன் சாதித் தானேல்
மனத்தினால் உணர்தற் கெட்டா மாயைஎன் சொல்லு கேன்யான்
எனக்கிது தெளிய வொண்ணா தென்றனன்" எண்ணம் மிக்கான்

29. அவ்வுரை அவையின் முன்பு நம்பியா ரூரர் சொல்லச்
செவ்விய மறையோர், நின்ற திருமறை முனியை நோக்கி
"இவ்வுல கின்கண் நீரின் றிவரைநும் அடிமை என்ற
வெவ்வுரை எம்முன் பேற்ற வேண்டும்" என் றுரைத்து மீண்டும்.

30. "ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற் றயலார் தங்கள்
காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்" என்ன "முன்னே
மூட்சியில் கிழித்த ஓலை படியோலை மூல ஓலை
மாட்சியில் காட்ட வைத்தேன்" என்றனன் மாயை வல்லான்.

31. "வல்லையேல் காட்டிங்" கென்ன மறையவன் "வலிசெய் யாமல்
சொல்லநீர் வல்லீ ராகில் காட்டுவேன்" என்று சொல்லச்

"செல்வநான், மறையோய்! நாங்கள் நீங்கற ஒட்டோம்" என்றார்
அல்லல்தீர்த் தாள நின்றான் ஆவணங் கொண்டு சென்றான்.

## கரணத்தான் ஓலையைப் படித்துக் காட்டல்

32. இருமறை மிடற்றோன் கையில் ஓலைகண் டவையோர் ஏவ
அருள்பெறு கரணத்தானும் ஆவணம் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி விரித்தனன் தொன்மை நோக்கித்
தெருள்பெறு சவையோர் கேட்ப வாசகம் செப்பு கின்றான்.

33. "அருமறை நாவல் ஆதி சைவன்ஆ ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னெ ழுத்து."

## எழுதியவர் கையெழுத்தை ஒத்துப் பார்த்தல்

34. வாசகங் கேட்ட பின்னர் மற்றுமேல் எழுத்திட் டார்கள்
ஆசிலா எழுத்தை நோக்கி "அவையொக்கும்" என்ற பின்னர்
மாசிலா மறையோர் "ஐயா! மற்றுங்கள் பேரனார்தம்
தேசுடை எழுத்தே ஆகில் தெளியப்பார்த் தறிமின்" என்றார்.

35. அந்தணர் கூற "இன்னும் ஆள்ஓலை இவனே காண்பான்
தந்தைதன் தந்தை தான்வே றெழுதுகைச் சாத்துண்டாகில்
இந்தஆ வணத்தி னோடும் எழுத்துநீர் ஒப்பு நோக்கி
வந்தது மொழிமின்" என்றான் வலியஆட் கொள்ளும் வள்ளல்.

36. திரண்டமா மறையோர் தாமும் திருநாவ லூரர் கோமுன்
மருண்டது தெளிய மற்ற மறையவன் எழுத்தால் ஓலை
அரண்தரு காப்பில் வேறொன் றழைத்துடன் ஒப்பு நோக்கி
"இரண்டும்ஒத் திருந்த தென்னே! இனிச்செய்ய இல்லை" என்றார்

## சபையோர் தீர்ப்பு

37. "நான்மறை முனிவ னார்க்கு நம்பியா ரூரர்! தோற்றீர்
பான்மையின் ஏவல் செய்தல் கடன்"என்று பண்பில் மிக்க
மேன்மையோர் விளம்ப, நம்பி "விதிமுறை இதுவே ஆகில்
யான்இதற் கிசையேன் என்ன இசையுமோ" என்று நின்றான்.

## மறையவர் தமதிருப்பிடம் காட்டி மறைதல்

38. திருமிகு மறையோர் நின்ற செழுமறை முனியை நோக்கி
"அருமுனி! நீர்முன் காட்டும் ஆவணம் அதனில் எங்கள்
பெருமைசேர் பதியே யாகப் பேசிய துமக்கிவ் வூரில்
வருமுறை மனையும் நீடு வாழ்க்கையும் காட்டு" கென்றார்.

39. பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவர் "என்னை
ஒருவரும் அறியீராகில் 'போதும்' "என் றுரைத்துச் சூழ்ந்த
பெருமறை யவர்கு ழாமும் நம்பியும் பின்பு செல்லத்
திருவருட் டுறையே புக்கார், கண்டிலர் திகைத்து நின்றார்.

40. எம்பிரான் கோயில் நண்ண இலங்குநூல் மார்பர் " எங்கள்
நம்பர்தங் கோயில் புக்க தென்கொலோ " என்று நம்பி
தம்பெரு விருப்பி னோடு தனித்தொடர்ந் தழைப்ப மாதோ
டும்பரின் விடைமேல் தோன்றி அவர்தமக் குணர்த்தல் உற்றார்.

## விண்ணில் காட்சியளித்த இறைவனார் கூற்று

41. " முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் ஏவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னோர் நாம்தடுத் தாண்டோம்" என்றார்

## ஓசை கேட்ட ஆரூரர் உற்ற மெய்ப்பாடு

42. என்றெழும் ஓசை கேளா ஈன்றஆன் கனைப்புக் கேட்ட
கன்று போல் கதறி நம்பி கரசர ணாதி அங்கம்
துன்றிய புளகம் ஆகத் தொழுதகை தலைமேல் ஆக
" மன்றுளீர்! செயலோ வந்து வலியஆட் கொண்ட" தென்றார்.

## இறைவன் அருளிச் செய்தல்

43. எண்ணிய ஓசை ஐந்தும் விசும்பிடை நிறைய எங்கும்
விண்ணவர் பொழிபூ மாரி மேதினி நிறைந்து விம்ம
மண்ணவர் மகிழ்ச்சி பொங்க மறைகளும் முழங்கி ஆர்ப்ப
அண்ணலை ஒலை காட்டி ஆண்டவர் அருளிச் செய்வான்.

44. " மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பில் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு" கென்றார் தூமறை பாடும் வாயார்.

45. தேடிய அயனும் மாலும் தெளிவுறா ஐந்தெழுத்தும்
பாடிய பொருளாய் உள்ளான் "பாடுவாய் நம்மை" என்ன
நாடிய மனத்த ராகி நம்பியா ரூரர் மன்றுள்
ஆடிய செய்ய தாளை அஞ்சலி கூப்பி நின்று.

46. " வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
கோதிலா அமுதே! இன்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை அறிந்தென் சொல்லிப் பாடுகேன்" எனமொ ழிந்தான்.

### இறைவனுர் ஆரூரருக்குப் பாட அடியெடுத்துக் கொடுத்தல்

47. அன்பனை அருளின் நோக்கி அங்கணர் அருளிச் செய்வார்
"முன்பெனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆதலாலே
என்பெயர் பித்தன் என்றே பாடுவாய்" என்றார், நின்ற
வன்பெருந் தொண்டர் ஆண்ட வள்ளலைப் பாடல் உற்ருர்.

வேறு

48. கொத்தார்மலர்க் குழலாளொடு கூருய்அடி யவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ் வியன்நாவலர் பெருமான்
பித்தாபிறை சூடீஎனப் பெரிதாந் திருப்பதிகம்
இத்தாரணி முதலாம்உல கெல்லாம்உய எடுத்தார்.

49. சொல்லார்தமிழ் இசைபாடிய தொண்டன்தனை இன்னும்
பல்லாறுல கினில்நம்புகழ் பாடென்றுறு பரிவில்
நல்லார் வெண்ணெய் நல்லூரருட் டுறைமேவிய நம்பன்
எல்லாவுல குய்யப்புரம் எய்தான் அருள் செய்தான்.

### மணமகளும் சிவபதம் எய்துதல்

50. அயலோர்தவம் முயல்வார்பிறர் அன்றேமணம் அழியும்
செயலால்நிகழ் புத்தூர்வரு சிவவேதியன் மகளும்
உயர்நாவலர் தனிநாதனை ஒழியாதுணர் வழியில்
பெயராதுயர் சிவலோகமும் எளிதாம் வகைபெற்ருள்.

---

## 4. கம்பராமாயணம்

### நகர்நீங்கு படலம்

### இராமன் தான் வனஞ்செல்லப்போவதைக் கோசலைக்கு அறிவுறுத்தல்

1. குழைக்கின்ற கவரி யின்றிக் கொற்றவெண் குடையு மின்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம்பின் னிரங்கி யேக
மழைக்குன்ற மனையான் மௌலி கவித்தனன் வருமென் றென்று
தழைக்கின்ற வுள்ளத் தன்னாள் முன்னொரு தமியன் சென்றான்.

2. புனைந்திலன் மௌலி குஞ்சி மஞ்சனப் புனித நீரால்
நனைந்தில னென்கொ லென்னு மையத்தா ளளின பாதம்
வனைந்தபொற் கழற்கால் வீரன் வணங்கலுங் குழைந்து வாழ்த்தி
நினைந்ததென் னிடையூ றுண்டோ நெடுமுடி புனைதற் கென்றாள்

வேறு

3. மங்கை யம்மொழி கூறனு மானவன்
செங்கை கூப்பிநின் காதற் றிருமகன்
பங்க மில்குணத் தெம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின் றானென்றான்.

4. முறைமை யன்றென்ப தொன்றுண் டதல்லது
நிறைகு ணத்தவ னின்னினு நல்லனாற்
குறைவி லன்னெனக் கூறின னல்வர்க்கு
மறுவி லன்பினில் வேற்றுமை மாற்றினாள்.

5. என்று பின்னரு மன்னவ னேவிய
தன்றெ னாமை மகனே யுனக்கறன்
நன்று நும்பிக்கு நானில நீகொடுத்
தொன்றி வாழுதி யூழி பலவென்றாள்.

6. தாயு ரைத்தசொற் கேட்டுத் தழைக்கின்ற
தூய சிந்தையத் தோமில் குணத்தினன்
நாய கன்னெனை நன்னெறி யுய்ப்பதற்
கேய துண்டொர் பணியென் றியம்பினான்.

7. ஈண்டு ரைத்தப ணியென்னை யென்றலும்
ஆண்டொ ரேழிரெ டேழகன் கானிடை
மாண்ட மாதவ ரோடுடன் வைகிப்பின்
மீண்டு நீவரல் வேண்டுமென் றானென்றான்.

## கோசலையின் வருத்தம்

8. ஆங்கவ் வாசக மென்னு மனல்குழை
தூக்கு தன்செவி யிற்றொட ராமுன
மேங்கி னாளிளைத் தாடிகைத் தாண்மனம்
வீங்கி னாள்விம்மி னாள்விழுந் தாளரோ.

9. வஞ்ச மோமக னேயுனை மாநிலந்
தஞ்ச மாகநீ தாங்கென்ற வாசகம்
நஞ்ச மோவினி நானுயிர் வாழ்வனோ
வஞ்சு மஞ்சுமென் றாருயி ரஞ்சுமால்

10. கையைக் கையினெரிக் குந்தன் காதலன்
வைகு மாலிலை யன்ன வயிற்றினைப்
பெய்வ ளைத்தளி ராற்பிசை யும்வகை
வெய்து யிர்க்கும் விழுங்கும் புழுங்குமால்.

11. அன்பி ழைத்த மனத்தர சற்குநீ
யென்பி ழைத்தனை யென்றுநின் றேங்குமால்
முன்பி ழைத்த வறுமையின் முற்றினோர்
பொன்பி ழைக்கப் பொதிந்தனர் போலவே.

12. அறமெனக் கிலேயோ வென்னு மாவினைந்
திறவி டுத்ததென் றெய்வதங் காளெனும்
பிறவு ரைப்பதென் கன்று பிரிந்துழிக்
கறவை யொப்பக் கரைந்து கலங்கினள்.

## இராமன் தாயைத் தேற்றல்

13. இத்தி றத்தி னிடருறு வாடனைக்
கைத்த லத்தி னெடுத்தருங் கற்பினேய்
பொய்த்தி றத்தின னுக்குதி யோபுகல்
மெய்த்தி றத்துநம் வேந்தனை நீயெனு.

14. பொற்பு றுத்தன மெய்ம்மை பொதிந்தன
சொற்பு றுத்தற் குரியன சொல்லினன்
கற்பு றுத்திய கற்புடை யாடனை
வற்பு றுத்தி மனங்கொளத் தேற்றுவான்.

15. சிறந்த தம்பி திருவுற வெந்தையை
மறந்தும் பொய்யில னுக்கி வனத்திடை
யுறைந்து தீரு முறுதிபெற் றேனிதிற்
பிறந்தி யான்பெறும் பேறென்ப தியாவதோ.

16. விண்ணு மண்ணு மவ்வேலேயு மற்றும்வே
றெண்ணும் பூத மெலா மழிந் தேகினு
மண்ண லேவன் மறுக்க வடியனேற்
கொண்ணு மோவிதற் குள்ளழி யேலென்றான்.

17. ஆகி லைய வரசன்ற னுணையா
லேக லென்பதி யானுமு ரைக்கிலேன்
சாக லாவுயிர் தாங்கவல் லேனையும்
போகி னின்னெடுங் கொண்டனை போகென்றாள்.

18. என்னை நீங்கி யிடர்க்கடல் வைகுறு
மன்னர் மன்னனை வற்புறுத் தாதுடன்
றுன்னு கானம் படரத் துணிவதே
யன்னை யேயறம் பார்க்கில யாமென்றான்.

19. வரிவி லெம்பியிம் மண்ணர சாயவற்
குரிமை மாநில முற்றபின் கொற்றவன்
திருவி னீங்கித் தவஞ் செயு நாளுட
னருமை நோன்புக ளாற்றுதி யாமன்றே.

20. சித்த நீதிகைக் கின்றதென் றேவரு
மொத்த மாதவஞ் செய்துயர்ந் தாரன்றே
யெத்த னேக்குள வாண்டுக ளீண்டவை
பத்து நாலும் பகலல வோவென்றான்.

## இராமன் வனஞ்செல்வதைக் கேள்வியுற்ற நகரத்தவரின் வருத்தம்.

21. புண்ணுற்ற தீயிற் புகையி னுரைபதைப்ப
மண்ணுற் றயர்ந்து மறுகிற் றுடம்பெல்லாங்
கண்ணுற்ற வாரி கடலுற்ற தந்நிலையே
விண்ணுற்ற தெம்மருங்கும் விட்டழுத பேரோசை

22. மாத ரருங்கலமு மங்கலமுஞ் சிந்தித்தங்
கோதை புடைபெயரக் கூற்றனைய கண்சிவப்பப்
பாத மலர்சிவப்பத் தாம்பதைத்துப் பார்சேர்ந்தார்
ஊதை யெறிய வொசிபூங் கொடியொப்பார்.

23. ஆவா வரச னருளிலனே யாமென்பார்
காவா வறத்தையினிக் கைவிடுவேம் யாமென்பார்
தாவாத மன்னர் தலத்தலைவீழ்ந் தேங்கினர்
மாவாதஞ் சாய்த்த மராமரமே போல்கின்றார்.

24. கிள்ளையொடு பூவை யழுத கிளர்மாடத்
துள்ளுறையும் பூசை யழுத வுருவறியாப்
பிள்ளை யழுத பெரியோரை யென் சொல்ல
வள்ளல் வனம்புகுவா னென்றுரைத்த மாற்றத்தால்.

25. ஆவு மழுதவதன் கன்றழுத வன்றலர்ந்த
பூவு மழுதபுனற் புள்ளழுத கள்ளொழுகுங்
காவு மழுத களிறழுத கால் வயப்போர்
மாவு மழுதனவம் மன்னவனை மானவே.

26. மண்செய்த பாவ முளதென்பார் மாமலர்மேற்
பெண்செய்த பாவ மதனிற் பெரிதென்பார்
புண்செய்த நெஞ்சை விதியென்பார் பூதலத்தோர்
கண்செய்த பாவங் கடலிற் பெரிதென்பார்

27. ஆதி யரச னருங்கே கயன்மகண்மேற்
காதன் முதிரக் கருத்தழிந்தா னாமென்பார்
சீதை மணவாளன் றன்னோடுந் தீக்கானம்
போது மதுவன்றேற் புகுது மெரியென்பார்.

28. கையா னிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார்
உய்யாள்பொற் கோசலையென் றோவாது வெய்துயிர்ப்பார்.

ஐயா விளங்கோவே யாற்றுதியோ நீயென்பார்
நெய்யா ரழலுற்ற துற்முரந் நீணகரார்.

29. நின்று தவமியற்றித் தான்பீர நேர்ந்ததோ
வன்றிவ் வுலகத்து ளாருயிராய் வாழ்வாரைக்
கொன்று களையக் குறித்த பொருளொன்றோ
நன்று வரங்கொடுத்த நாயகற்கு நன்றென்பார்.

30. என்னே நிருப னியற்கை யிருந்தவா
தன்னே ரிலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து முறை திறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தார் பிழையாதோ மெய்யென்பார்.

## கைகேயியின் சூழ்ச்சியைக் கேள்வியுற்ற இலக்குவன் சினங்கொள்ளல்

31. கேட்டா னிளையோன் கிளர்ஞாலம் வரத்தி னாலே
மீட்டா ளளித்தாள் வனந்தம்முனை வெம்மை முற்றத்
தீட்டாத வேற்கட் சிறுதாயென யாவ ராலு
மூட்டாத காலக் கடைத்தீ யெனமூண் டெழுந்தான்.

32. சிங்கக் குருளைக் கிடுதீஞ்சுவை யூனை நாயின்
வெங்கட் சிறுகுட்டனை யூட்ட விரும்பி னாளால்
நங்கைக் கறிவின்றிற நன்றிது நன்றி தென்னாக்
கங்கைக் கிறைவன் கமலக்கை புடைத்து நக்கான்.

33. புவிப்பாவை பரங்கெடப் போரில்வந் தோரை யெல்லாம்
அவிப்பானு மின்றே யவித்தாக்கையை யண்ட முற்றக்
குவிப்பானு மின்றே யெனகோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானு நின்றே னிதுகாக்குநர் காமி னென்றான்.

34. விண்ணாட்டவர் மண்ணவர் விஞ்சையர் நாகர் மற்றும்
எண்ணாட்டவர் யாவரு நிற்கவொர் மூவ ராகி
மண்ணாட்டுநர் காட்டுநர் வீட்டுநர் வந்த போதும்
பெண்ணாட்ட மொட்டே னினிப்பே ருலகத்து ளென்னா.

35. வேற்றுக் கொடியாள் விளைவித்த வினைக்கு விம்மித்
தேற்றத் தெளியாதயர் சிற்றவை பாலி ருந்தான்
ஆற்றற் றுணைத்தம்பிதன் விற்புய லண்ட கோளங்
கிற்றுத் துடையப்படு நாணுரு மேறு கேட்டான்

## போர்க்கோலம் பூணக் காரணம் என்ன என்று இராமன் கேட்டல்

36. மின்னொத்த சீற்றக் கனல்விட்டு விளங்க நின்ற
பொன்னொத்த மேனிப் புயலொத்த தடக்கை யானை
யென்னத்த வென்னீ யிறையேனு முனிந்தி லாதாய்
சன்னத்த னாகித் தனுவேந்துதற் கேது வென்றான்.

## இலக்குமணன் இறுத்த விடை

37. மெய்யைச் சிதைவித்துநின் மேன்முறை நீத்த நெஞ்ச
மையிற் கரியாளெதிர் நின்னையம் மௌலி சூட்டல்
செய்யக் கருதித் தடைசெய்குநர் தேவ ரேனுந்
துய்யைச் சுடுவெங் கனலிற் சுடுவான் றுணிந்தேன்

38. வலக்கார் முகமென்கைய தாகவவ் வானு ளோரும்
விலக்கா ரவர்வந்து விலக்கினு மென்கை வாளிக்
கிலக்கா வெரிவித் துலகேழினொ டேழு மன்னர்
குலக்கா வலுமின் றுனக்கியான் றரக்கோடி யென்றான்

## பின்னும் இராமன் கேட்டல்

39. இளையா னிது கூற விராம னியைந்த நீதி
வளையாவரு நன்னெறி நின்னறி வாகு மன்றோ
யுளையா வறம் வற்றிட வூழ்வழு வுற்ற சீற்றம்
விளையாத நிலத்துனக் கெங்ஙன் விளைந்த தென்றான்.

## இலக்குமணன் கூறல்

40. நீண்டான துரைத்தனு நித்திலந் தோன்ற நக்குச்
சேண்டான் றொடர்மாநில நின்னதென் றுந்தை செப்ப
பூண்டாய் பகையா லிழந்தேவனம் போதி யென்றால்
யாண்டோ வடியேற் கினிச்சீற்ற மடுப்ப தென்றான்

## மீட்டும் இராமன் கூறலும் இலக்குமணன் விடையும்

41. பின்குற்ற மன்னும் பயக்கும்மர சென்றல் பேணேன்
முன்கொற்ற மன்னன் முடிகொள்கெனக் கொள்ள மூண்ட
தென்குற்ற மன்றோ விகன்மன்னவன் குற்றம் யாதோ
மின்குற் றொளிரும் வெயிரீக்கொ டமைந்த வேலோய்

42. நதியின் பிழையன்று நறும்புன லின்மை யற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப்பு ரந்தாள்
மதியின் பிழையன்று மகன்பிழை யன்று மைந்த
விதியின் பிழைநீ யிதற்கென்னை வெகுண்ட தென்றான்.

43. உதிக்கும்உலே யுள்ளூறு தீயென வூதை பொங்கக்
கொதிக்கும் மனமெங்ஙன மாற்றுவென் கோளிழைத்தாள்
மதிக்கும் மதியாய்முதல் வானவர்க் கும்வ லீஇதாம்
விதிக்கும் விதியாகுமென் விற்றொழில் காண்டி யென்றான்.

44. ஆய்தந்தவ னவ்வுரை கூறலு மைய நின்றன்
வாய்தந் தனகூறு தியோமறை தந்த நாவால்
நீதந்த தன்றே நெறியோர்க ணிலாத தீன்ற
தாய் தந்தை யென்று லவர்மேற் சலிக்கின்ற தென்னே.

45. நற்றா தையுநீ தனிநாயக னீவ யிற்றிற்
பெற்றாயு நீயே பிறரில்லை பிறர்க்கு நல்கக்
கற்றா யிதுகாணுதி யின்றெனக் கைம்ம றித்தான்
முற்றா மதியம் மிலேந்தான் முனிந்தானை யன்னான்.

## இலக்குமணன் சீற்றம் தணியாமையால் இராமன் இன்னும் கூறல்

46. வரதன் பகர்வான் வரம்பெற்றவ டானிவ் வையஞ்
சரதம் முடையா ளவளென்றனித் தாதை செப்பப்
பரதன் பெறுவா னினியான் படைக்கின்ற செல்வம்
விரதம் மிதினல்லது வேறினி யாவ தென்றான்.

47. ஆன்றான் பகர்வான் பினுமைய விவ்வைய மையல்
தோன்றா நெறிவாழ் துணைத்தம் பியைப்போர் தொலேத்தோ
சான்றோர் புகழுந் தவத்தாதையை வாகை கொண்டோ
ஈன்றாளை வென்றோ வினியிக்கதந் தீர்வ தென்றான்.

## இலக்குமணன் வெறுத்துக்கொண்டு, சீற்றம் தணிதல்

48. செல்லுஞ்சொல் வல்லானெதிர் தம்பியுந் தெவ்வர் சொல்லுஞ்
சொல்லுஞ் சுமந்தே னிருதோளெனச் சோம்பி யோங்குங்
கல்லுஞ் சுமந்தேன் கணைப்புட்டிலுங் கட்ட மைந்த
வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன் வெகுண்டென்னை யென்றான்.

49. நன்சொற் கடந்தாண் டெனைநாளும் வளர்த்த தாதை
தன்சொற் கடந்தெற் கரசாள்வது தக்க தன்றா
லென்சொற் கடந்தாலுனக் கியாதுள தீன மென்றான்
றென்சொற் கடந்தான் வடசொற்கலைக் கெல்லை தேர்ந்தான்.

---

# 5. வில்லி பாரதம்

## அபிமன்யுவின் போர்

### அபிமன்னேடு போர் புரிந்து சிவபெருமான் கதைகொண்டு உயிர் கவருமாறு துரியோதனன் சயத்திரனை அழைத்து ஏவுதல்

1. ஒருவ னம்படைத் தலைவர்க ளெவரையு
மொருகை கொண்டடற் றிகிரியின் விழவெதிர்
பொருவ தென்கொலிச் சிறுவனெ டொருபடி
பொழுது சென்றதெப் பொழுதமர் முடிவது
வெருவ ருந்திறற் றரணிபர் களிலிவன்
விளிய வென்றிடத் தகுமவ ரிலரினி
அருளு டன்சயத் திரதனை யழையென
அவனும் வந்துபுக் கனனெரு நொடியிலே

2. அருகு நின்றகொற் றவர்களு மவரவ
ரரிய திண்டிறற் குமரரு மமரினுன்
மருக னும்படப் பொருத னன்மக
பதிமகன் மகன்றனைப் பசுபதி யருளிய
உருகெ ழுங்கதைப் படைகொடு கவருதி
உயிரை யென்றெடுத் துரைசெய அரசனை
இருகை யுங்குவித் தருளுடன் விடைகொளும்
எழில்கொள் சிந்துவுக் கொருதனி முதல்வனே.

### சயத்திரனும் அபிமனும் கதைகொண்டு பொருதல்

3. உரக வெங்கொடித் தரணிப னலமரும்
உளம கிழ்ந்திடக் கதிபல படவரு
துரக தம்பிணித் தணிகொளி ரதமிசை
துவச முந்தொடுத் தடலுடை வலவனை
விரைவு டன்செலுத் துகவென வுரைசெய்து
விழிசிவந் துசிற் றிளமதி புனைதரு
கரக வண்புனற் சடைமுடி யவனடி
கருதி நின்றெடுத் தனனெரு கதையுமே.

4. மறலி தண்டெனக் கொலைபுரி தொழின்மிக
வலிய தண்டுகைக் கொளுமள வினிலிவன்
விறல்பு னைந்தகைத் திகிரியை யொழியமுன்
வினைய முந்துபற் றலர்முது கிடவிழு

திறல்வி ளங்குபொற் கதைகொடு விரைவொடு
திருகி நின்கதைக் கிதுகதை யெனவுரை
யுறவி ளம்பியப் பொருகள முழுவதும்
உருமெ றிந்ததொத் துவகையொ டதிரவே.

5. சினவு சிங்கமொத் திருவரு முறைமுறை
திருகி வெஞ்செருப் புரிதலி னெழுமொலி
கனல்வ ளைந்துசுட் டனிலமு மெறிதரு
கடல திர்ந்தெனக் கனமதிர் வனவென
மினல்ப ரந்தெழத் திசைகளின் முடிவுற
வெடிகொ டண்டபித் தியுமுடை தரவெழ
மனம மூன்றுபொற் கிரிநிகர் தமபுய
வலிமை கொண்டுடற் றினர்வய மலியவே.

6. உரிய சிந்துவுக் கரசன திருபுய
மொடிய வென்புநெக் குடன்முரி தரவுடல்
நெரிய வெங்குடர்க் கொடிநெடு வளையமும்
நிமிர வன்றொடைப் புடைமிடை நடையுற
அரிய கண்கனற் பொறியெழ மணிமுடி
அழக ழிந்துபொற் பிதிர்பட வுதிர்பட
எரியெ ழுஞ்சினத் தொடுதன தொருகையின்
இலகு தண்டமிட் டிகலுட னெறியவே

7. வசைய றும்புகழ்க் குருகுல திலகனை
மருதி ரண்டொடித் தவர்திரு மருகனை
விசயன் மைந்தனைப் பணைமுகில் மிசைவரு
விபுதர் தங்குலத் ததிபதி பெயரனை
அசைவில் வன்திறற் பகைமுனை நிருபரை
அடைய வென்றகட் டழகுடை யபிமனை
இசைகொள் சிந்துவுக் கரசனு மொருகதை
இருகை கொண்டெடுத் திகலுட னெறியவே.

8. கரமி ழந்துமற் றொருகர மிசையொரு
கதைகொள் வெஞ்சினக் களிறனை யவனிவன்
இரத முந்தகர்த் துறுகதி யுடன்வரும்
இவுளி யுந்துணித் தெதிர்முனை வலவனை
முரணு டன்புடைத் தணிதுவ சமும்விழ
முதுகு கண்டபிற் சரபம தெனும்வகை
அரன்வ ழங்குபொற் கதையுட னவனியில்
அவனு முன்குதித் தடலுடன் முனையவே.

## இருவரும் தரையிற் கைகலந்து பொருதல்

9. பதயு கங்களொத் தியவலி பலகண
பணபு யங்கர்பற் பலமுடி சிதறின
எதிர்கொ டண்டமொத் தியவலி திசைகளில்
இபமு நின்றுமெய்ப் பிடியொடு சிதறின
கதியில் வந்தசித் திரமென முறைமுறை
கதுவி மண்டலித் தொருபகல் முழுவதும்
அதிச யப்படப் பொருதன ரெதிரெதிர்
அபிம னுஞ்சயத் திரதனு மமரிலே.

## அபிமன் புயவலியை அனைவரும் புகழல்

10. உலைவி றண்டினிற் பரிசனன் மதலையும்
உவ்மை யின்றெனப் பகழியின் மழைபொழி
சிலையின் வன்றொழிற் றிறனுடை மகபதி
சிறுவ னுந்தனக் கெதிரில னினியென
மலையும் வெஞ்சமத் தொருதனி முதுபுய
வலிமை கண்டுபொற் புறுகழ லபிமனை
அலைநெ டுங்கடற் றரணிப ரனைவரும்
அமர ருந்துதித் தனர்முக டதிரவே.

## போர்க்களத் தோற்றம்

11. கழுகு பந்தரிட் டனமிசை விசையொடு
கழுதி னங்களிட் டனபல கரணமும்
எழுக வந்தமிட் டனபல பவுரிக
ளிருபு றங்களிட் டனவெதி ரழிபடை
ஒழுகு செம்புனற் குருதியின் வருநதி
உததி யுஞ்சிவப் புறும்வகை பெருகலின்
முழுகி யெஞ்சியிட் டனசுழி யிடையிடை
முகிலின் வெங்குரற் கசரத துரகமே.

## போரில் அபிமன் இளைக்க சிவபிரான் அளித்த கதைகொண்டு அவன் தலையைச் சயத்திரதன் துணித்தல்

12. முறைமை யின்றியெத் தரணிபர் களுமெதிர்
முடுக வந்துமுற் றெறுதலி னவரவர்
பொறைய ழிந்துகெட் டனைவரும் வெருவொடு
புறமி டும்படிக் கொருதனி பொருதபின்

நிறைவ லம்புரித் தொடைகமழ் புயகிரி
நிருப துங்கன்மைத் துனனுளம் வெருவர
அறைபெ ருங்கதைப் படைகொடு வலியுற
அமர்பு ரிந்திளைத் தனனட லபிமனே

13. இவன்ம யங்கிமெய்த் தளர்வுடன் மெலிவுறும்
இறுதி கண்டினித் தெறுவது கடனென
அவனி கொண்டபற் குனன்மத லையையவன்
அருகு வந்தடுத் தணிபுய வலிகொடு
சிவனை யஞ்செழுத் துரைசெய்து தொழுதொரு
சிகர தண்டம்விட் டெறிதலி னெறிதரு
பவன னன்றுகுத் தினகிரி யெனவிசை
படவி ழுந்ததப் பருமணி மகுடமே.

14. தலைது ணிந்துதத் திடவிழ விவனொரு
தனது திண்கையிற் கதைகொடு தரியலன்
நிலைய றிந்துபுக் குரனுற வெறிதலின்
நெரிநெ ரிந்தத் தரணிப னுடலமும்
மலைம றிந்ததொத் தபிமன துடலமும்
மகித லந்தனிற் றிரியற விழுதலின்
அலையெ றிந்துமைக் கடல்புர ளுவதென
அரவம் விஞ்சியிட் டதுகள மடையவே.

## மைந்தனிறந்தது கேட்ட அருச்சுனன் புலம்பல்

வேறு

15. போரினிற் றுணைவ ரோடும் புயங்கமே தனனை வென்று
பாரெனக் களித்தி நீயே யென்றுளம் பரிவு கூர்ந்தேன்
நேருனக் கொருவர் இல்லாய் நீகளம் பட்டா யாகில்
ஆரினிச் செருக்க வல்லார் ஐவருக் குரிய கோவே.

16. சக்கரம் பிளந்த வாறும் தரியலர் உடைந்த வாறும்
துக்கரமான கொன்றைத் தொடையலால் வளைத்த வாறும்
மெய்க்கரந் துணிந்தவாறும் மீண்டுருத் தடர்த்த வாறும்
உக்கரமுடனென் முன்னே ஓடிவந் துரைசெய் யாயோ.

17. பன்னக வரசன் பெற்ற பாவைமா மதலை தன்னை
முன்னுற முனையில் தோற்றேன் மூர்க்கனேன் முடியா துண்டோ
உன்னையு மின்று தோற்றே னுன்னுடன் றொடர்ந்து வாராது
இன்னமு மிருந்த தையா வென்னுயிர்க் கிறுதி யுண்டோ.

18. கதிரவ னுதிக்கு முன்னே கண்துயில் உணர்த்தி யென்னை
அதிரமர்க் கோலங் கொள்வான் அறிவுறுத் துரைக்க வல்லாய்
முதிரமர் முருக்கி மீண்டேன் இத்தனைப் போது முன்போல்
எதிர்வரக் காண்கி லேனிங் கில்லையோவென் செய்தாயோ.

19. தந்திரம் யாவு மின்றித் தனித்துநீ தானே போர்செய்து
அந்தரம் அமையு மென்றிவ் வகலிடந் துறந்த ஐயா
மைந்துடன் நம்மைக் காண மகன்மகன் வருகின் றானென்று
இந்திரன் ஏவஉன்னை இமையவர் எதிர்கொண் டாரோ.

20. தேரழிந் தெடுத்த வில்லுஞ் செங்கதிர் வாளு மின்றி
ஒருத வியும்பெ றாம லொழிந்துயி ரழிந்த மைந்தா
போரம ருடற்றி நீயப் பொன்னக ரடைந்த போதுன்
பேரம ராண்மை கேட்டுப் பிதாமகன் என்சொன்னானே.

21. மற்புயக் குன்றி லொன்று வாளுடன் வீழப் பின்னும்
பொற்புறப் பொருத நீயப் பொன்னுல கடைந்த காலை
அற்புதப் படைகள் வல்லாய் அபிமனே யமரருரும்
கற்பகக் காவும் வானிற் கங்கையுங் காட்டினாரோ

22. வளைத்தவில் நிமிரா வண்ணம் வாளியால் மாவுந் தேரும்
துளைத்துமுன் காலா ளாகத் துரோணனைத் துரந்த வீரா
திளைத்தவெஞ் சமரி னொந்து தனஞ்செயன் சிறுவன்மேனி
இளைத் ததென் றிந்திராணி யின்னமு தூட்டி னாளோ.

# IV. பல்சுவைப் பகுதி

## 1. புறநானூறு

### 1. திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக் காஞ்சி.

### கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி பாட்டு

உண்டா லம்மாவிவ் வுலக மிந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.

### 2. திணை - வாகை; துறை - மூதின் முல்லை.

### ஒக்கூர் மாசாத்தியார் பாட்டு

கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளி ராதல் தகுமே.
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே

நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.

## 2. நந்திக் கலம்பகம்

### மறம்

1. அம்பொன்று வில்லொடிதத ஞணறுத ஞன்கிழவ னசைந்தே னென்றே
வம்பொன்று குழலாளை மணம்பேசி வரவிடுத்தார் மன்னர் தூதா
செம்பொன்செய் மணிமாடத் தெள்ளாற்றி னந்திபதஞ் சேரா ரானைக்
கொம்பன்றே நங்குடிலிற் குறுங்காலு நெடுவளையுங் குனிந்து பாரே.

### ஊசல்

2. ஓடரிக்கண் மடநல்லீர் ஆடாமோ ஊசல்
உத்தரிகப் பட்டாட ஆடாமோ ஊசல்
ஆடகப்பூண் மின்னாட ஆடாமோ ஊசல்
அம்மென்மலர்க் குழல்சரிய ஆடாமோ ஊசல்
கூடலர்க்குத் தெள்ளாற்றில் விண்ணருளிச் செய்த
கோமுற்றப் படைநந்தி குவலயமார்த் தாண்டன்
காடவற்கு முற்றோன்றல் கைவேலைப் பாடிக்
காஞ்சிபுர மும்பாடி யாடாமோ ஊசல்.

## 3. காளமேகப் புலவர்

1. நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாது—விஞ்சுமலர்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம்.

## 4. குமரகுருபர சுவாமிகள்
## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

1. தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே யகத்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய

இமயப் பொருப்பில் விளையாடு
மிளமென் பிடியே யெறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே மதுகரம்வாய்
மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

## 5. தேசிக விநாயகம் பிள்ளை. மலரும் மாலையும்.

### * செல்வமும் சிறுமையும்

### செல்வச் சிறுமியர் களிப்பு

1. பாகமாகச் செய்த பண்டமுண்போம்—நன்றாய்ப்
பக்குவம் வந்த பழங்களுண்போம்
தாகமா றல்பல பானகமும்—தாயார்
தந்திட உண்டு மகிழ்ந்திடுவோம்.

2. காலத்துக் கேற்ற உடையணிவோம்—வாசம்
கட்டிய சந்தனம் பூசிடுவோம்
கோலமாய்ச் சீவிச் சிணுக்கெடுத்து—மலர்
கூந்தலிற் சூட்டி அழகு செய்வோம்.

3. பந்துகள் ஆடிப் பழகிடுவோம்—கழல்
பாங்கியர் தம்மொடும் ஆடிடுவோம்
சந்தமெழக் கும்மி பாடிடுவோம்—சுற்றிச்
சப்பாணி கொட்டிச் சிரித்திடுவோம்.

### ஏழைச் சிறுமியர் மனப்புழுக்கம்

4. நல்லபண் டங்களைக் கண்டறியோம்—ஒரு
நாளும் வயிறார உண்டறியோம்
அல்லும் பகலும் அலைந்திடுவோம்—பசி
ஆற வழியின்றி வாடிடுவோம்.

5. அன்னப்பால் காணாத ஏழைகட்கு—நல்ல
ஆவின்பால் எங்கே கிடைக்குமம்மா
என்னப்பா யாம்படும் பாட்டையெல்லாம்—சென்று
யாரிடம் சொல்லி அழுவோமம்மா.

6. இட்டெலி ஐந்தாறு தின்றோமென்பீர்—நீங்கள்
ஏதும் கருணை யிலீரோஅம்மா
பட்டினி யாக இறந்திடினும்—நாங்கள்
பாவம் பழிசெய்ய மாட்டோமம்மா.

---

* புதுமைப் பதிப்பகத்தாரின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## * 6. சோமசுந்தர பாரதியார் — மாரிவாயில்.

### விந்திய மலைச்சிறப்பு

1. இலங்குமிவ் வளாகம் நிற்க
இயங்குதி வடபால்; ஆங்கே
கலங்குபு கயிறுய் முன்பாற்
கடல்கடைந் தயர்வாற் றாங்கித்
துலங்குவான் கங்கைக் கோட்டம்
தொல்கங்கைப் பொழிலி னீங்க
விலங்குமா சுணம்போல் நீண்ட
விந்திய மலைவந் தோங்கும்.

2. நிலத்தியலும் மொழிவழக்கும் நெறிபலவும்
கலையுணர்வும் நீண்ட நாளாய்க்
குலத்தியலும் தொழிலறமும் கொள்கைகளும்
வெவ்வேறாக் குலவக் கொண்டு
நலத்தியலும் அறத்தொல்லை நாகரிகம்
இரண்டுமிந்த நல்ல நாட்டில்
கலத்தியலும் நீரென்னக் கலவாமற்
காக்குமிடை விந்தம் காண்பை.

3. தன்காதல் தென்புலத்தைத் தழுவுமிரு
கரமென்னத் தக்க வாறு
மின்காதல் புரிமஞ்சு தவழுமிரு
மலைத்தொடரு மிண்டிக் கன்னி
நன்காதல் துறையிறைஞ்சிக் கூப்பஇடை
வளம்வளரும் நாடு காத்துப்
பொன்காதல் புரிவிந்தம் குடகுணக்காய்
நிலப்பரப்பைப் புரந்து நிற்கும்.

—மாரிவாயில்

---

* திரு. சோமசுந்தர பாரதியார் அவர்களின் இசைவுபெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## * 7. நாமக்கல் கவிஞர், இராமலிங்கம் பிள்ளை.

## இளந்தமிழனுக்கு

1. தமிழனென்ற பெருமையோடு
தலைநிமிர்ந்து நில்லடா
தரணியெங்கும் இணையிலாஉன்
சரிதைகொண்டு சொல்லடா
அமிழ்தமென்ற தமிழினோசை
அண்டமுட்ட உலகெலாம்
அகிலதேச மக்களுங்கண்
டாசைகொள்ளச் செய்துமேல்
கமழ்மணத்தின் தமிழில்மற்ற
நாட்டிலுள்ள கலையெலாம்
கட்டிவந்து தமிழர்வீட்டில்
கதவிடித்துக் கொட்டியே
நமதுசொந்தம் இந்தநாடு
நானிலத்தில் மீளவும்
நல்லவாழ்வு கொள்ளச்சேவை
செய்துவாழ்க நீண்டநாள்.

* தமிழ்ப் பண்ணையாரின் இசைவுபெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## * 8. பாரதிதாசன். அழகின் சிரிப்பு

### கிளி

1. தென்னை தான் ஊஞ்சல்! விண்தான்
திருவுலா வீதி! வாரித்
தின்னத்தான் பழம், கொட்டைகள்!
திருநாடு வையம் போதும்!
புன்னைக்காய்த் தலையில் செம்மைப்
புதுமுடி புனைந்தி ருப்பாய்!
உன்னைத்தான் காணு கின்றேன்
கிள்ளாய்நீ ஆட்சி உள்ளாய்!

2. கொஞ்சுவாய் அழகு தன்னைக்
கொழிப்பாய் நீ, அரசர் வீட்டு
வஞ்சியர் தமையும், மற்ற
வறியவர் தமையும், ஒக்க
நெஞ்சினில் மகிழ்ச்சி வெள்ளம்
நிரப்புவாய், அவர் அளிக்கும்
நைஞ்சநற் பழத்தை உண்பாய்
கூழேனும் நன்றே என்பாய்!

---

* புலவர் பாரதிதாசன், பாரி அகத்தார் ஆகியவர்களின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

# உரைநடைப் பகுதி

## *1. நமது தாய்மொழி. (தமிழ் கற்பிக்கும் முறைகள்)

வித்துவான் ச. ஆறுமுக முதலியார், எம். ஏ., பி. ஓ. எல்., எல். டி;

“ ஓங்கலிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
தன்னேர் இலாத தமிழ் ”

உயிர் இனங்கள் எல்லாம்—ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை—அவ்வவ் வினத்தின் வளர்ச்சிக்கேற்றவாறு உணர்ச்சிகளைப் பல வழிகளில் வெளிப் படுத்துகின்றன. இதுவும், இயற்கையிலேயே அவற்றில் அமைந்து கிடக் கின்ற பசி, நீர் வேட்கை முதலியன போல இன்றியமையாத ஓர் இயல் பாகும். ஆறறிவு படைத்து, முழுமையான உள உடல் வளர்ச்சிகளைப் பெற்றுள்ள மக்கள் இனத்தில், எண்ணங்களைப் பிறருக்குத் தெரிவித்துப் பிறர் நினைக்கும் கருத்துகளை அறிந்து கொள்வதற்கு மொழியே சிறந்த கருவியாய் அமைந்துள்ளது. மனிதன் தோன்றிய அன்றே மொழி யும் தோன்றிவிடவில்லை. முதல் மனிதன் விலங்குகளைப்போலவே ஒலிக் குறிகளாலும் முகக்குறி கைக்குறிகளாலும் தன் உள்ளக் கருத்தைத் தெரிவித்திருக்க வேண்டும். நாளடைவில் தனித்து அலைந்து திரிந்து வாழ்ந்து வந்த மனிதன், பலருடன் ஒன்றுகூடி வாழத் தலைப் படவே, மொழி தோன்றலாயிற்று. ஒன்றுபட்ட மக்களின் பொது வாழ்க் கைக்கு மொழி இன்றியமையாதது. பல்வேறுபட்ட கொள்கைகள், சமயங் கள், ஏற்றத்தாழ்வுகள், குலங்கள், நிலைகள், தொழில்களால் வேற்றுமை யுற்ற பல பிரிவினர்களும், பேசும் தாய்மொழியால் ஒன்றுபடுகின்றார்கள். மனிதர்களுக்குப் பேசும் திறமை கைவந்திருக்கிறது. அதனால், மக்களை மாக்களினின்றும் வேறு பிரித்தறியும் பல சிறப்பியல்களுள் மொழியும் ஒன்றும். மொழியினாலேதான் எண்ணம் வெளிப்படுகிறது. எண்ணமும், அதை வெளியிடும் மொழியும் ஒன்றைவிட்டொன்றைப் பிரிக்க முடியாத தொடர்பைப் பெற்றிருப்பதனால், ஒன்றைவிட்டு மற்றொன்றை வளர்க்க இயலாது. இன்னும், பேசப்படும் சொல்லுக்கும் அது குறிக்கும் பொரு ளுக்கும், பேசுபவனுக்கும் கேட்பவனுக்கும், நேரான தொடர்பையும் அஃது ஏற்படுத்தி விடுகிறது.

உலகில் பல மொழிகள் இருப்பினும், பிறந்தது முதல் இறக்கும் வரை, தொட்டிலிலிருந்து சுடுகாடு வரை, ஒருவர் கேட்டும் பேசியும் வரும் மொழியே ‘ தாய்மொழி ’ எனப்படும். அதுவே, குழந்தைக்கு இயல்பான மொழியாகும். குழந்தை பிறந்து மொழி பயிலுங்கால் அதன் தாயால் முதற்கண் பாலூட்டிச் சீராட்டித் தாலாட்டிப் பாராட்டிப் பயிற்றப்படும்

* உரிமையாளரின் இசைவுபெற்றது.

மொழியே, தாய்மொழி எனப்படும். இச் சிறப்புக்கருதியே நம்மொழி 'பால்வாய்ப் பசுந்தமிழ்' எனப்படுகிறது.

அன்னை வாயிலாகக் கேட்டு மழலை மொழிந்து தேறிய பின்னரே, அப்பனுனும், ஆசிரியனுனும் வரிவடிவிற் பயிற்றப் பெற்று அறிவு விரிவெய்தப்பெறும். ஒருவர் இறைவனை அடைந்து பேரின்ப நுகர்ச்சியில் தலைப்படவிழையுங்கால் அங்கும் அருள் உருவாகிய தாயே முதற்கண் அவரைப் பண்படுத்தி, அப்பனுகிய இறைவனை அறிவித்து, அவன்பால் உய்ப்பவளாவள். இதனை,

'மெய்யருளாம்
தாயுடன் சென்றபின் தாதையைக்
கூடிப்பின் தாயைமறந்
தேயும தேநிட்டை'

என்னும் முற்றத் துறந்த முனிவர் பெருமானுகிய பட்டினத்தடிகள் அருள் மொழியாலும் உணர்க.

தாய் வழியாகத் தந்தைக்கு ஆளாதலை உணர்ந்தே முதற்கண் தாயைக் குறிப்பிட்டு, மணிவாசகப் பெருந்தகையாரும், 'அம்மையே, அப்பா, ஒப்பிலா மணியே,' என்று திருவாய் மலர்ந்தருளினர். எனவே, மாணவன், முதன் முதல் கற்க வேண்டுவது தாய்மொழி எனக் கொள்ளப்படுகிறது. மாணவன் இதை நன்கு கற்றுத் தேறும் வரையில் அயல் மொழிகளை அவனுக்குக் கற்பிக்க முயலுதல் முறையன்று:

நமது தாய்மொழியாகிய தமிழ் மொழி அமிழ்தினும் இனியதென இமிழ்கடல் வரைப்பில் எல்லோராலும் போற்றப்படுகிறது. இது,'கல் தோன்றி மண்தோன்ருக் காலத்தே'யும் 'முன் தோன்றி மூத்து'ப் 'படைப்புக்காலம் தொடங்கி. மேம்பட்டு வருவது'. பழைமையும் பெருமையும் வாய்ந்த இது, புதுமையும் பொருந்தி, இன்றும் உலக வழக்கழியாது, என்றும் நின்று நிலவுதற்குரிய 'உயர் தனிச் செம்மொழி' எனற்பாலது. தமிழ்த்தெய்வ வணக்கம் கூறப்போந்த பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழ் மொழிக்குப் பரம்பொருளை உவமை கூறினர். ஓர் எல்லையறு பரம்பொருள், பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும், யாதொரு மாறுபாடுமின்றி அன்றும் இன்றும் என்றும் இருப்பது போல, நமது தமிழும், முன்னைப் பழமொழிக்கும் முன்னைப்பழமொழியாயும், பின்னைப் புதுமொழிக்கும் பின்னைப் புதுமொழியாயும் பொலிகின்றது.

வடமொழி, எபிரேயம், லத்தீன் போன்ற இறந்துபட்ட பழைய மொழிகள் 'உயர் தனிச் செம்மொழி' களென வழங்கப்பெற்று வருவது

போக, பழமையிலும், பெருமையிலும், இலக்கிய இலக்கண விரிவிலும், அமைதியிலும் அவற்றிற்குப் பின் வாங்காதிருப்பதோடு, இன்னும் 'உலக வழக்கழிந்து ஒழிந்து சிதையா'த 'சீரிளமைத்திறம்' வாய்ந்த நந்தம் செந்தமிழை ஏனை மொழி நூலறிஞரும் பிறரும் உயர்தனிச் செம்மொழி யெனப் பேணிப் போற்றவில்லை! 'தான் வழங்கும் நாட்டின் கண்ணுள்ள பல மொழிகட்கும் தலைமையும் அவற்றினும் மிகவே தகவுடைமையும் உள்ள மொழியே உயர் மொழி'. தான் வழங்கும் நாட்டிற் பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்க வல்ல ஆற்றல் சான்றதே 'தனிமொழி' எனப்படும். 'திருந்திய பண்பும் சீர்த்த நாகரிகமும், பொருந்திய தூய்மொழி புகல்செம் மொழியாம்.' இம் மூன்றிலக்கணங் களையும் தன்னகத்தே கொண்ட தமிழ் மொழியும் உயர்தனிச் செம்மொழி ஆகாதோ?

பரந்த நோக்கம் கொண்டு சிறந்த நம் தமிழ் மொழி, பிற மொழிகளின் கூட்டுறவால் வரும் தீமைகளை ஒழித்து, நன்மைகளை ஏற்றுக் கொண்டு, அம்மொழிகளிலிருந்து வரும் கருத்துக்களையும் சொற்களையும் தன்னியல்பாக்கும் தனிப்பேராற்றல் வாய்ந்ததாயிருக்கிறது. எவ்வகைக் கலையையும் எடுத்துரைக்க வல்ல சொல் வளம் பெற்றது. தங்குமிடமற்றுத் தன்னை நாடி வந்தார்க்குத் தங்குமிடமளித்து, நாளடைவில் தன் ஆட்சிப் பரப்பையும் செல்வாக்கையும் குறைத்துக்கொண்டது. கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளுவம் போன்ற கிளைமொழிகள் பிரிந்து போனதாலும், தமிழ்நாட்டைப் பன்முறை கடல் கொண்டு போனதாலும், பண்டைத் தமிழகமாகிய இரு நிலவுலகின் பெருநிலப் பரப்பில், அதாவது, 'வட வேங்கடம் தென் குமரி ஆயிடை'த் தனியரசு செலுத்தி வந்தது போக, இன்று தமிழகம் பதினொரு கோட்ட அளவில் குறுகி நிற்கின்றது. தன் சேய்களாகிய தமிழ் மக்களும் பண்டு போலல்லாது இன்று தாயாகிய தன்னைப் பேணாது, பிறரைப் பேணித் திரியும் பேதைமை கண்டு ஏங்கி நிற்பதோடு, தன்னைப் பேணித் தன் புகழ் பரப்ப முன் வரும் சில பல தமிழாசிரியர்களும் மாணவர்களும் தாழ்ச்சி உறுவதைக் கண்டு உளம் கன்றி உருகுகின்றது. பண்டு போலத் தனது வீட்டில் பெருமையோடு தனியரசு செலுத்துவதற்குரிய வழி வகைகளை எதிர்பார்த்து நிற்கின்றது.

முடியுடை வேந்தர்களாலும், குறுநில மன்னர்களாலும், வள்ளல் களாலும் போற்றப் பெற்றுச் சிறந்தோங்கிய நந்தம் செந்தமிழ், இன்று ஆங்கிலமொழியின் நெருக்கலினாலும், அயல்மொழிகளின் கலப்பாலும், ஆர்வத்துடன் கற்பாரும் கற்பிப்பாரும் இன்றி, வாடி வதங்கி நிற்கின்றது. கட்டாயமாக ஒருமொழி படிக்கவேண்டுமே என்று பெரும்பாலாரும், வருவாயும் வயிற்றுப் பிழைப்பும் கருதும் சிலரும், விருப்புற்று ஒரு சிலரும், இம் மொழியைப் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் பயின்று வருகின்றனர். ஆங்கிலம் கற்றார்க்கு அரசியல் துறைகளிலும் பிற இடங்களிலும் உயர்ந்த வேலைகளும், மிக்க வருவாயும்

நன்மதிப்பும் கிடைத்தனவாதலால், பெற்றோரும் மாணவரும் அம்மொழித் தேர்ச்சியில் மிகவும் ஊக்கம் செலுத்துவாராயினர். அதற்கேற்பப் பள்ளிக் கூடங்களிலும் தாய்மொழிப் பயிற்சி புறக்கணிக்கப்பட்டு, ஆங்கில மொழிப் பயிற்சியே கண்ணும் கருத்துமாய்ப் போற்றப்பட்டு வந்தது. தாய்மொழிப் புறக்கணிப்பால் தாய்மொழிப் பற்றும் தாய்நாட்டுப் பற்றும் குன்றி, அம் மொழியின் இலக்கியச் சுவைகளையும், இலக்கண அமைதிகளையும், முன்னோர் பெருமைகளையும் உணர இடமில்லாமற் போய்விட்டது.

சில ஆண்டுகளாக அரசியலும், பள்ளிக்கூடங்களும், இலக்கியக் கழகங்களும், பல்கலைக் கழகங்களும், திருமடங்களும் தாய்மொழிப் பயிற்சியிலும் ஊக்கம் காட்டி வருகின்றன. இதுவரை உள்ள இடைநிலைப் பள்ளி நீக்கத் தகுதிச் சீட்டுத் தேர்வில் (S. S. L. C. Examination) தாய் மொழிக்கு முதலிடம் கொடுக்கப்படாவிடினும், ஆங்கிலத்தின் தகுதியும் இன்றியமையாமையும் கொடுக்கப்பட்டிருப்பதோடு, ஆங்கிலந் தவிர்ந்த ஏனைய பாடங்களும், நடுநிலை ஆசிரியர் பயிற்சிப் பள்ளி நீக்கத் தகுதிச் சீட்டுத் தேர்விலும் (T. S. L. C. Exmination, Secondary Grade) ஆங்கிலம் தவிர்ந்த ஏனைய பாடங்களும் தாய்மொழியின் வாயிலாகவே கற்பிக்கப்பட வேண்டும் என்னும் விதியும் ஏற்பட்டுள்ளது. உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கும், தமிழ் கற்பிக்கும் முறைகளில், ஆசிரியர் கல்லூரியிலும், லேடி வில்லிங்டன் கல்லூரியிலும் பயிற்சி அளிக்கப்படுகிறது. அண்ணாமலை, சென்னை, திருவாங்கூர்ப் பல்கலைக் கழகங்களில் தமிழுக்கெனத் தேர்வுகள் ஏற்பட்டுத் தகுதிச் சீட்டுக்களும், பட்டங்களும் கொடுக்கப்படுகின்றன. (B. A., B. A. (Hons)., M. A., B. O. L., B. O. L. (Hons); Vidvan, Certificate of proficiency in oriental learning.) தமிழ் ஆராய்ச்சிக்கும் பட்டங்கள் ஏற்பட்டுள்ளன. (M. O. L., M. litt; ph. D., D.litt.,)

எனினும், தாய்மொழிப் புறக்கணிப்பு இன்னும் முற்றிலும் அகலவில்லை. இதனை முற்றிலும் களைவதற்கு அரசியலாரும், மாணவர்களும், ஆசிரியர்களும், பெற்றோர்களும், பொதுமக்களும், பல்கலைக் கழகங்களும் ஒருங்கே முன் வரவேண்டும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், ஆராய்ச்சிப் பட்டங்களுக்கும், தொழிற் கல்லூரிகளிலும், உயர் நிலைப்பள்ளி ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளிலுங் கூடத் தாய்மொழியின் வாயிலாகவே பல கலைகளையும் கற்பிப்பதற்கான வழிகளைச் செய்யவேண்டும். கல்வி புகட்டும் வாயிலாய் ஆங்கிலம் இருந்தபோது உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் பயிற்சி பெற்ற ஒவ்வொருவரும் கட்டாயமாக ஆங்கில மொழியைக் கற்பிக்கும் முறைகளிலும் பயிற்சி பெற்றனர். அதுபோல, தாய்மொழி வாயிலாக வந்திருக்கும் இக்காலத்தில் ஒவ்வொருவரும் தாய்மொழியிலும் கட்டாயமாகப் பயிற்சி பெறுவது முறையாகுமன்றோ?

இவற்றுக்கெல்லாம்வேண்டிய பாட நூல்களும், கலைச் சொற்களும் (technical terms) தக்க அறிஞர்களால் தமிழில் ஆக்கப்படவேண்டும்.

தமிழ் ஆசிரியர்களும் தாய்மொழியில் பற்றும், ஆர்வமும் தமிழ் மாணவர்களுக்கு உண்டாகும் வண்ணம் கற்பிக்கவேண்டும். இதற்கு, இவ்வாசிரியர் அனைவரும், ஏனைய பாட ஆசிரியர்களைப்போல, தமிழ்க்கல்லூரிகளில் சேர்ந்து படித்துப் பட்டம் பெற்று, தமிழ் ஆசிரியர் பயிற்சியும் பெற்றவர்களாய் இருக்கவேண்டும். இதுவரை தமிழாசிரியர்களுட் பெரும்பாலார் ஆங்கிலம் தெரியாதவராய் இருந்தமையின் அயல் நாடுகளில் மேற்கொண்டுள்ள தாய்மொழிக்கல்வி முறைகளைப்பற்றி ஒன்றும் படித்தறிய இயலாதவராய், ஆங்கிலத்தில் உள்ள மொழி, ஆராய்ச்சி, மொழி நூல், இலக்கிய வரலாறு, தாய்மொழிகற்பிக்கும் முறைகள் ஆகியவற்றைப்பற்றிய நூல்களையும், இதழ்களையும், வெளியீடுகளையும் கற்க இயலாதவராய் இருந்தனர்; இருந்தும் வருகின்றனர். தாய்மொழிகளில் முறை பற்றிய நூல்கள் மிகமிகக் குறைவு; இல்லையென்றே கூறலாம். எனவே, தாய்மொழியைக் கற்பிப்பதில் அயல் நாடுகளில் மேற்கொள்ளப்பட்டு நல்லவை யென்று காணப்பட்ட முறைகளை நாமும் மேற்கொள்ளவேண்டும். புதிய புதிய முறைகளில் தாய்மொழியைக் கற்பிக்கும் பயிற்சியை ஒவ்வொருவரும் பெறவேண்டும். கல்வியின் உண்மையைப்பற்றிய, புதிய வரலாறுகளும், புதிய நோக்கங்களும் அயல் நாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்டுத் தமிழ் நாட்டு நிலைகளுக்கு ஏற்றவாறு மாற்றியும், திருத்தியும், பெருக்கியும், சுருக்கியும் அமைத்துக்கொள்ளப்பட வேண்டும். இப்படிச் செய்தால், தாய்மொழிக் கல்வியில் ஈடுபட்ட எல்லோரும், ஊக்கமும், பற்றும், தன்னம்பிக்கையும், மனவுறுதியும், மகிழ்ச்சியும் எய்துவர்.

இப்படிச் செய்தால், பள்ளிக்கூடத்தின் வாழ்வே புதிய வாழ்வாக மாறிவிடும்; நமது தாய்மொழியும் ஒரு புதிய நிலையை எய்தும். பள்ளிக்கூடம் புத்தியிரளிக்கும் இடமாக மாறுவதற்குரிய அளவற்ற வாய்ப்புக்களை இப் புதுமுறை, ஆசிரியர்களுக்களிக்கும். இப்புதிய இடத்தில் தம்முடைய நாட்டின் பண்டைப் பெருமையை மாணவர் முதல் முதல் உணர்ந்து கொண்டு, தம் எதிர்கால வாழ்வில் தாம் ஆற்றுவதற்கென இருக்கும் நாட்டுத் தொண்டை மேற்கொள்ளுவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யும் நேரிய வழியில் செல்லா நிற்பர்.

'தாய்மொழிப் பயிற்சியில் தமிழாசிரியர்க்கு மட்டுந்தான் பொறுப்புள்ளது; ஏதோ, வாரத்தில் நான்கு அல்லது ஐந்து மணிநேர மட்டும் கற்பித்தல் போதும்,' என்னும் இப்போதுள்ள மனநிலை முற்றிலும் மாற வேண்டும். தாய்மொழிப் பயிற்சியே, சிறப்பாகத் தாய்மொழி வாயிலாகக் கல்வி கற்பிக்கப்படும் பள்ளிகளில், எல்லாவகை வேலைக்கும் அடிப்படையாகும். இதையும் ஏனைய பாடங்களுள் ஒன்று என்று நினைக்கும் நினைப்பு அறவே ஒழியவேண்டும். அதற்கு மாறாகக் கலைத்திட்டத்தின் உயிர்நிலையாக இதைக் கருதவேண்டும். கலைத் திட்டத்தினுள் அடங்கிய ஒவ்வொரு பிரிவிலும் அதனைக் கற்பிக்கும் ஒவ்வோர் ஆசிரியரும் தாய்மொழியிலேயே அவ்வப்பாடத்தைப் பிழையற எடுத்துச் சொல்லவும் எழுதவும், மாணவர்

களும் அங்ஙனமே செய்யவும் நன்கு பயிற்றப்படவேண்டும். தமிழ்மொழி பிறபாட ஆசிரியர்களால் எங்ஙனம் பேசவும் எழுதவும் படுகிறது என்பதைத் தலைமையாசிரியர்களும் அரசியற் கண்காணிப்பாளர்களும், பிறரும் நன்றாகக் கவனிக்கவேண்டும். முடியுமானால், இம் மேற்பார்வைப் பொறுப்பைத் தமிழாசிரியர்க்குக் கொடுக்கலாம். எனவே, தாய்மொழி, பள்ளியின் வாழ்விற்கே இன்றியமையாதது; அதிலிருந்து அதைப் பிரிக்க இயலாது. பள்ளியாகிய உடலுக்கு உயிராயிருப்பது. ஒவ்வொருவருடைய வாழ்விலும் இது, தொட்டிலிலிருந்து சுடுகாடுமட்டும், புறக்கணிக்க முடியாத ஒரு நிலையைப் பெற்றிருக்கிறது. அறிவை வளர்த்துக் கொள்வதற்குரிய ஒரு கருவியாயிருப்பது மட்டுமின்றிக் குழந்தையை வாழ்க்கையில் ஈடுபடுத்தும் இன்றியமையாத உறுப்பாகவும் இருக்கிறது.

எனவே, ஆங்கிலத்துக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் முதலிடம் தாய்மொழிக்குக் கொடுக்கப்படவேண்டும். மேலும், பிறரைக்காட்டிலும் தாங்கள் தாழ்ந்தவர்கள் என்று தாய்மொழி ஆசிரியர்களிடை நிலவி வேரூன்றியிருக்கும் தாழ்வுணர்ச்சியை அவர்களிடமிருந்து நீக்கவும், அதற்கு மாறாகத் தாய்மொழியே கலைத்திட்டத்தில்மிகவும் சிறந்த இன்றியமையாத பாடம்என்னும் உணர்ச்சியைப் பரப்பவும், தமிழாசிரியரே ஏனைய ஆசிரியர்களைவிடச் சிறந்தவர் என்பதை அறிவுறுத்தவும், ஆங்கிலம் கணக்கு முதலியபாடங்களும் அவற்றின் ஆசிரியர்களும் தமிழிடமிருந்தும் தமிழாசிரியர்களிடமிருந்தும் பறித்துக்கொண்ட தனியிடத்தைத் திரும்பப் பெறவும்நல்ல கடுமையான விளம்பரம் வேண்டியிருக்கின்றது.

இன்னும், தாய் மொழி அரசியல் மொழியானால் தான், தமிழுக்கு உண்மையான உயர்வு உண்டாகும். எனவே, நம் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும், தாய்மொழிக் குரிய முதலிடம் கொடுக்கப்படாத வரையில் உண்மையான கல்வி கற்பிக்கப்படுவதில்லை என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

---

## 2. * செங்குட்டுவன் அரசியல் (சேரன் செங்குட்டுவன்)

இராவ் சாஹிப். மு. இராகவ ஐயங்கார்.

சேரன் செங்குட்டுவனது அரசாங்க முறைகளை நோக்குவோம். பொதுவாகச் சொல்லுமிடத்து, செங்குட்டுவன் காலத்தனவாகிய சங்க நூல்களிலே அரசியன் முறைகளாக அமைந்தவையாவும் நம் வேந்தனுக்கும் உரியவையென்றே சொல்லலாம். அவ்வாறு கூறப்பட்ட அரசியல்களை விடாது இங்கு விவரிப்பதாயின் அளவு கடந்துவிடும். அதனால்,

* ஆசிரியர் இசைவுபெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

வேற்று நூல்களுட் புகாமல், செங்குட்டுவனைப் பற்றிய செய்யுட்களி லிருந்து தெரியவரும் சிறப்புச் செய்திகளை மட்டும் இங்கு விளக்கு வோம்.

நம் சேரர் பெருந்தகை, சங்ககாலத்துத் தமிழ் வேந்தருள்ளே சிறந்து விளங்கியவன். இவன் தந்தை நெடுஞ் சேரலாதனும், இவன் முன்னோரும் வடவாரியருடனும் அயலரசருடனும் அடுத்தடுத்துப் போர்புரிந்து வந்தவ ரென்று தெரிதலால், அவரது பகைமையெல்லாம் இவனுக்கும் இருந்தன என்றே தெரிகின்றது. அதனால், கடல் வழியாகவும் தரை வழியாகவும் பகைவர் தன்னெல்லையினுட் புகுவதைத் தடுப்பதற்கேற்ற கப்பற்படையும் தரைப்படையும் இவன் உடையனாகவே யிருந்தான்.

"சினமிகு தானை வானவன் குடகடற்
பொலந்தரு நாவா யோட்டிய வான்றைப்
பிறர்கலஞ் செல்கலா தனையேம்" (புறநா. 126.)

என, மரக் கலப்படையின் மாட்சியால் கடற்றலைமையை அக்காலத்தே செங்குட்டுவன் வகித்திருந்த சிறப்பை இவன் பெயர்கூறாது வியந்தனர், மாறோகத்து நப்பசலையார் என்ற புலவர். கடற் படையைக்கொண்டு இவன் ஒரு காலத்துச் செய்த வீரச் செயலையும், அதுபற்றி இவன் "கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன்" என வழங்கப்பட்டதனையும் இவனது போர்ச் செயல்களிலிருந்து அறியலாம். இவ் வேந்தனது தரைப்படையும் அங்ஙனமே அளவாலும் ஆற்றலாலும் மேம்பட்டிருந்தது. பத்தினிக்குப் படிமச்சிலை எடுத்தற்கும், ஆரியவரசரை வெற்றி கோடற்குமாக இவன் வடக்கே சென்றுவந்த முப்பத்திரண்டு மாதம்வரை இவனாட்டிற் குழப்ப மொன்றும் இல்லாதிருந்ததோடு, குடிகளெல்லாம் இவனாட்சியில் மகிழ்ச்சி மிக்கவர்களாய்த் தம் அரசன் வெற்றியைத் தமக்குரிய பெருமையாகவே கொண்டு மகிழ்ந்தனர் என்றுந் தெரிகிறது.

செங்குட்டுவனது அரசியலில், முற்கால முறைப்படி அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர் என்ற ஐவருமே சிறந்திருந்த வர்கள். இவர்களை அரசர்க்குரிய 'ஐம்பெருங்குழு' என்பர் முன்னோர். இவர்களன்றிக் கரும வினைஞர், கணக்கியல் வினைஞர், தரும வினைஞர், தந்திர வினைஞர், பெருங்கணி என்ற அரசியல் நிர்வகிக்குந் தலைவரும் இருந்தனர். கரும வினைஞர் என்போர் தேசத்தின் ஆட்சியை நடத்துவோ ரென்றும், கணக்கியல் வினைஞர் என்போர் தேசத்தின் அரசிறை வருவாய் களைக் கவனிக்கும் அதிகாரிகளென்றும், தரும வினைஞர் நாட்டினறங்களைப் பாதுகாப்போரென்றும், தந்திர வினைஞர் படைகளின் தலைமை வகிப்போர் என்றும், பெருங்கணி அரசனது காரியங்கட் குரிய காலங்களையும் நிமித்தங் களையும் கணித்துரைப்போன் என்றும் அறியத்தக்கன. இவரெல்லாம் அரசனது மந்திராலோசனைக்கு உரியவராவர். செங்குட்டுவனது தரைப்

படைக்குத் தலைமைவகித்த வீரன் வில்லவன் கோதை என்பான். இவனே செங்குட்டுவனது வட யாத்திரையில் அவனுடைய சேனைகளை நடத்திச் சென்று ஆரியவரசருடன் நிகழ்ந்த பெரும்போரில் வெற்றி பெற்றவன். "வில்லவன் கோதையோடு வென்று வினைமுடித்த பல்வேற் றானைப்படை" என்றார், இளங்கோவடிகளும். இவனைப் போலவே தேசவருவாயின் தலைமையை வகித்த அமைச்சன், அழும்பில்வேள் என்பவன். இவன் அழும்பில் எனப்படும் வளம் படைத்த நாட்டின் தலைவன். இவனுக்கு 'வானவிறல்வேள்' என்ற பெயரும் வழங்கியது. இவ்வமைச்சன் செங் குட்டுவதற்குச் சமயோசிதமாகச் சூழ்ச்சி யுரைக்க வல்லவனாயிருந்தவன். இனி, நம் வேந்தனது தூதுவருள்ளே தலைமை வகித்தவன் சஞ்சயன் என்றும், இவனுக்கு அடுத்தபடியிலிருந்தவன் நீலனென்றும் தெரிகின்றன. இவர்களின் கீழடங்கிய தூதுவரெல்லாம் தம்மரசனிடமிருந்து வேற்றரச ரிடம் அரசியற் செய்திகளை அறிவித்து வருவதற்குரியர்; அன்றியும் யுத்தத் திற்கு அரசனுடன் சென்று அதற்கு வேண்டிய காரியங்களை நிர்வகிக்கவும் வல்லவர். இன்னோர் அரசன் திரு முன்பு அடுத்தடுத்துச் சென்று வருவோராதலால், சட்டையும் தலைப்பாகையுந் தவறாது தரித்திருப்பர். இவரைக் கஞ்சுக முதல்வர் எனவும் வழங்குவர்; "சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற கஞ்சுக முதல்வ ரீரைஞ்ஞூற்றுவர்" எனத் தம் தமைய னுக்கிருந்த தூதுவரின் தொகையளவை இளங்கோவடிகள் குறித்தல் காண்க. இனிச் சாரணரென்போர் ஒற்றர்களாவர். இன்னோர், இக் காலத்துப்போலவே, முற்காலத்தும் அரசர்க்குக் கண்போன்று விளங் கினவர். செங்குட்டுவனுடைய ஒற்றர்கள் அந்நிய நாடெங்கும் சஞ்சரித்து வந்தனரென்றும், அவ்வாறே வேற்றரச ரொற்றர்களும் பெருவீரனான நம் சேரனது நாட்டுச்செய்திகளைத் தெரிதற் பொருட்டு வஞ்சிமாநகரில் மறைந்து வாழ்ந்து வந்தனரென்றும் சொல்லப்பட்டுள்ளன. மேற்கூறியவர்களன்றிக் கரணத்தியலவர் (கணக்கர்), கரும விதிகள் (ஆணை நிறைவேற்றும் அதி காரிகள்), கனகச் சுற்றம் (பண்டாரம் காப்போர்), கடைக் காப்பாளர் (அரண்மனைக் காவலர்), நகர மாந்தர், படைத் தலைவர், யானைவீரர், குதிரை வீரர் எனப்பட்ட எண்பேராயத்தாரும் செங்குட்டுவன் அரசியலில் தலைமை பூண்டிருந்தனர்.

செங்குட்டுவனது அரசியல் முத்திரையானது வில், கயல், புலி என் னும் மூன்றும் அமைந்ததோர் இலாஞ்சனையாகும். இதனைத் "தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் கயற் புலி, மண்டலை யேற்ற வரைக" என்பதனால் அறிக. சோழபாண்டியர் அடையாளங்களாகிய புலியையும் மீனையும் தனக் குரிய வில்லோடு சேர்த்து நம் சேரன் இலச்சினையாகக் கொண்டிருந்ததை நோக்குமிடத்து, அக்காலத்துத் தமிழ் வேந்தருள் இவனே தலைமை வகித்தவ னென்பது புலப்படுகின்றது. இவ்வாறே, இவ்வேந்தன் சோழ பாண்டியர்க் கும் மேம்பட்டவன் என இளங்கோவடிகள் வேறிடங்களினும் கூறுவர்.

செங்குட்டுவனது தலைமையதிகாரிகளும், அந்தணர் புலவர் குடிகளும் அவனிடம் வந்து ஒன்று கூறும்போது, பேச்சின் தொடக்கத்தும் முடிவிலும் "அரசே! வாழ்க" என்று அவனை வாழ்த்துதல் பழைய முறையாக இருந்ததென்பது இளங்கோவடிகள் வாக்கால் நெடுக உணரலாகும்.

செங்குட்டுவன் அத்தாணி மண்டபத்தை அடைந்து அமைச்சர் முதலியவருடன் மந்திராலோசனை புரியும்போது, அவனுடைய கோப்பெருந் தேவியும் (இளங்கோ வேண்மாள்) உடன் வீற்றிருந்து தன்னபிப்பிராயத்தைத் தடையின்றி வெளியிடுதற்கு உரியவளாயிருந்தனள். அரசன் தன் பெருந்தேவியுடன் அத்தாணிக்கு வருமிடையிலே அரண்மனையிலுள்ள அரங்குகளிற் கூத்தர்கள் நிகழ்த்தும் அழகிய ஆட்டங்களைக் கண்டு மகிழ்வது வழக்கம். செங்குட்டுவனது அவைக்களக் கூத்தரிற் சாக்கையர் என்போர் சிறந்தவராகக் காணப்படுகின்றனர். இச்சாக்கையர் என்ற கூத்த வகுப்பார் பிற்காலத்தும் சோழர் காலங்களில் விளங்கியதோடு மலைநாடுகளில் தம் பழைய தொழிலையே இன்றும் கைக்கொண்டு நடத்தி வருதலும் அறியத்தக்கது. அரசனது தலைமைக் கூத்தன் 'கூத்துள் படுவோன்' எனப்படுவன்.

நம் சேரர்பெருமானுக்கு அடங்கியிருந்த அரசர்கள் தத்தம் திறைகளைங் கொண்டுவந்து தலைநகர்ப் பெரிய பண்டாரத்திற் சேர்க்குங் காலம் விடியற்காலையாகும். அங்ஙனம் திறை கொணரும்படி அரண்மனையுள் முரசம் அறையப்பட்டு வந்ததென்று தெரிகின்றது. "ஞாலங் காவலர் நாட்டிறை பயிருங், காலை முரசங் கடைமுகத் தெழுதலும்" என்பது காண்க.

அரசனது பிறந்த நாளானது நகரத்தாரால் ஆண்டுதோறும் ஒரு புண்ணிய தினமாகக் கருதிக் கொண்டாடப்படும். இப் பிறந்த நாள் பெருநாள் எனவும் பெருமங்கலம் எனவும் வழங்கும். இக்காலத்தே, அரசன் உயிர்களிடங் காட்டுங் கருணைக் குறிகுறியாக மங்கல வண்ணமாகிய வெள்ளணி அணிந்து சிறைப்பட்டவரையெல்லாம் விடுவிப்பதும், இரவலர்க்கும் புலவர்க்கும் வேண்டியவாறு அளிப்பதும், தன் தானை வீரர்களைத் தக்கபடி கௌரவிப்பதும் மரபாகும். இதனையே தொல்காப்பியனாரும் "சிறந்த நாளணி செற்ற நீக்கிப் பிறந்த நாள்வயிற் பெருமங்கலமும்" என்று கூறிச் சிறப்பிப்பர். இக்காலத்தே, நகரத்தாரெல்லாம் உற்சாக மிக்கவர்களாய்த் துருத்தி முதலியவற்றால் நீர்கொண்டு இறைத்து விளையாடி மகிழ்வர். செங்குட்டுவன் செயசீலனாய் வடநாட்டினின்று திரும்பி வஞ்சிமாநகர் புக்க மறுநாளினும், மணிமேகலை மணி பல்லவத்தினின்று திரும்பி வஞ்சிமாநகர் புகுந்தபோதும், இச் சேரவேந்தனது பிறந்நாள் கொண்டாடப்பட்டதென்பது தெரிகின்றது. சேரவேந்தரது பெருநாள் தமிழகமுழுதும் புகழத்தக்க சிறப்புடன் நடைபெற்று வந்ததென்றும், அக்காலத்துப் பெரியோரும் பல சமயவாதியரும் அரசவையிற் குழுமித் தத்தங் கல்வித் திறமையைக்

காட்டும் ஆரவாரம் பெருகியிருந்ததென்றும் மாங்குடி மருதனர் மதுரைக் காஞ்சியிற் கூறுதல் அறியத் தக்கது. இக்காலத்தும் திருவனந்தபுர அரசர்க்குள் பிறந்த நாட் கொண்டாட்டம் சிறப்பாகவே நடைபெறு தலோடு, அவ்வரசர் 'மூலங் திருநாள், விசாகத் திருநாள்' எனத் தங்கள் பிறந்த நாட்களேயே பெயர்களாகக் கொண்டு விளங்குதலும் ஒப்பிடற் பாலது.

அரசன் மலைப் பிரதேசங்கட்குச் செல்லும்போது மலைவாணராகிய குன்றக்குறவர் தம் நாட்டிற் கிடைக்கக்கூடிய அரும் பொருள்களைத் திரட்டி அவற்றைத் தலைமேற் சுமந்துகொண்டு கூட்டமாக வந்து அரசனை அடிபணிந்து அவன் திருமுன்பு காணிக்கையாக வைப்பர். இம் மரியாதை திருவனந்தபுரம், கொச்சி முதலிய நாட்டரசர்களுக்கு இன்றும் நடந்து வருவ தொன்றாகும். அப்போது மலைநாட்டுக் கூத்தர்கள் வந்து தங்க ளாட்டத்தால் அரசனை மகிழ்விப்பதும் அவர்கட்செல்லாம் தலைமைக் கூத்தனுன கூத்துள் படுவோன் கூறியமுறையே அரசன் பரிசளிப்பதும் பண்டை வழக்கங்களாம்.

அரசன் போருக்குப் புறப்படு முன்னர் தன் படைத்தலைவர்க் கும் சேனைகட்கும் பெருவிருந்து செய்து அவர்களை மகிழ்விப்பதும் மரபாகும்; இதனைப் 'பெருஞ் சோற்றுநிலை' என்பர் தொல்காப்பியர். "வேந்தன் போர்தலைக்கொண்ட பிற்றை ஞான்று போர்குறித்த படை யாளருந் தானும் உடனுண்பான்போல வந்து ஒரு முகமன் செய்தற்குத் தானே பிண்டித்து வைத்த உண்டியைக் கொடுத்தல்' என்பர் நச்சினார்க் கினியர்.

---

## 3. * புதைந்த நகரங்கள்

[வித்துவான், மா. இராசமாணிக்கம், M.O.L., L.T;]

பஞ்சாப் மாகாணத்தில் லாஹுர், முல்டான் என்னும் இடங்கட்கு இடையே தோண்டி எடுக்கப்பட்ட நகரம் 'ஹரப்பா' என்பது. சிந்து மாகாணத்தில் லர்க்கானு ஜில்லாவில் புதைந்து கிடந்த நகரம் 'மொஹெஞ் சொதரோ' என்பது. இவ்விரு நகரங்களும் அமைந்துள்ள இடம் ஒரு காலத்தில் செழிப்புற்ற இடமாக இருந்தது. அப்பகுதியில் அக்காலத்தில் மழை மிகுதியாக இருந்திருந்தல் வேண்டும் என்பது, இரு நகரங்களிலும் காணப்படும் பெரிய கழிநீர்ப் பாதையால் விளக்கமாகிறது. சிந்து நதியுடன் கி. பி. 14-ஆம் நூற்றாண்டு வரை 'மஹாமிஹ்ரான்' என்னும் யாறும் அப் பகுதியில் ஓடிக்கொண்டிருந்தது. இவ்விரண்டுடன் சிந்துவின் உபநதிகளும் சேர்ந்து பாய்ந்த நீர்வளப்பம் இவ்விரு நகரங்களையும் உயர் நாகரிகத்தில் உய்த்ததெனல் மிகையாகாது. வெள்ளப் பிரதேசமாதலின் அப்பகுதியில்

* ஆசிரியரின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

கட்டப்பட்ட கட்டிடங்கள் வன்மையுடையனவாகவும் மேற்கூரை உயர்ந்தவையாகவும் அமைக்கப்பட்டிருந்தன.

மொஹெஞ்சொதரோ நகரம் உள்ள இடம் (70 அடி முதல் 20 அடி வரை) மண்ணால் மூடப்பட்டிருந்தது. ஏழு அடுக்குகள் தோண்டி எடுக்கப்பட்டன. அடி முதல் மூன்று அடுக்குகள் பழையன; இடைப்பட்ட மூன்று இடைக்காலத்தன; மேலுள்ள 7-ம் அடுக்குப் பிற்பட்டகாலத்தது. இவற்றிற்கும் கீழே சுமார் 40 அடி ஆழத்தில் சில அடுக்குகள் காணப்படுகின்றன. அவை பின்னும் பழையனவாக இருக்கக்கூடும் என்பர் ஆராய்ச்சியாளர். முதலில் எடுக்கப்பட்ட ஏழு அடுக்குகளும் உயரிய நாகரிகத்தை வெளிப்படுத்துகின்றன என்பது அறியத்தக்கது.

**கட்டிடங்கள் :—** கட்டிடங்கள் பலவகைப்பட்டவை. இரண்டு அறைகளைக்கொண்ட வீடுகள் முதல் பெரிய மாளிகை ஈறாகக் காணப்படுகின்றன. மாளிகையின் முன்புற வெளி 85 அடி; 97 அடி பின்புறம். பெரிய கூடம், செங்கல் பதித்த மேன்மாடம், மேலிருந்து கழிநீர் இறங்கச் சிறிய வழிகள், கழிநீரைத் தேக்கிக்கொள்ள ஆங்காங்குப் பெரிய சால்கள், சுற்றிலும் அறைகளைக்கொண்ட 32 சதுர அடியுள்ள வீட்டு முற்றம் முதலியன ஒவ்வொரு மாளிகையிலும் காணலாம். பல பெரிய கட்டிடங்களும் காணப்படுகின்றன. அவை கோயில்களாக இருந்திருக்கலாம் என்பர் ஆராய்ச்சியாளர்.

இவற்றினும் கவனிக்கத் தக்கது 'பெரிய நீராடு குட்டை' ஆகும். நாற்புறமும் படிக்கட்டுகள், அறைகள்; 39 அடி நீளம், 23 அடி அகலம், 8 அடி ஆழம் உள்ள நீராடும் இடம்; நாற்புறமும் நீர் நிலைக்கு நீர் உதவும் கிணறுகள். இக்குட்டைக்கு, 'மேல் மூடி' மரத்தால் ஆயது. இந்நீராடு குட்டையைக் கட்டியவர் சிறந்த விற்பன்னராக இருத்தல் வேண்டும் எனக் கூறி வியக்கின்றனர் ஆராய்ச்சியாளர். இக்குட்டையைச் சுற்றியுள்ள சுவர் 4 அடி கனமுள்ளது. அதைச் சுற்றிலும் வேறொரு சுவரும் உண்டு. அஃது, இங்ஙனம் உயர்ந்த முறையில் கட்டப்பட்டதாற்றான் 5000 ஆண்டுகள் ஆகியும் இன்றும் நன்னிலையில் இருக்கின்றது.

**பயிர், உணவு :—** இப்பெரிய நகரங்களில் வாழ்ந்த மக்கள் கோதுமை, பார்லி இவற்றைப் பயிரிட்டவர் என்பது தெரிகிறது; இப்போழ்தைய, இயந்திரம் இன்றி, வேறொரு கற்கருவியால் கோதுமையையும் பார்லியையும் அரைத்து வந்தனர்; மாட்டு இறைச்சி, ஆட்டு இறைச்சி, பன்றி இறைச்சி, பறவைகளின் இறைச்சி, ஆமை இறைச்சி, மீன் இவற்றை உண்டு வந்தனர் என்பதற்குரிய அடையாளங்கள் காணப்படுகின்றன.

**விலங்குகள் :—** எருது, எருமை, ஆடு, யானை, ஒட்டகம், பன்றி, கோழி, நாய், குதிரை இவற்றை வளர்த்து வந்தனர். இந்நகரங்களில் கீரி,

கறுப்பு எலி, மான், பைசன், காண்டா மிருகம், புலி, குரங்கு, கரடி, முயல் முதலியவற்றின் எலும்புகளும் அகப்பட்டன.

**கனிப்பொருள்கள் :**—பொன், வெள்ளி, செம்பு, தகரம், ஈயம் (இரும்பு இல்லை) இவற்றை அப்பண்டை மக்கள் பயன்படுத்தி வந்தனர். பொன், வெள்ளி கலந்ததாக இருத்தலின் அப்பொன் கோலார், அனந்தபூர் இவ்விடங்களிலிருந்து வந்திருத்தல் வேண்டும் என்பர் ஆராய்ச்சியாளர். நகைகட்கே பொன் பயன்பட்டது. செம்பு, ஈயத்தோடு கலந்திருத்தலின் அது இராஜபுதனம், பலுசிஸ்தான் அல்லது பாரசீகம் ஆகிய இடங்களி லிருந்து வந்திருத்தல் வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து; அது வளையல், கத்தி, ஈட்டி, உடைவாள் முதலியன செய்யப் பயன்பட்டது வெள்ளீயம், (தகரம்) செம்போடு கலந்து பித்தளையாகிப் பலவற்றிற்குப் பயன்படுவது அடித்தட்டில் கிடைத்ததால், தகரம் கி. மு. 3000-க்கு முன்னரே இந்தியாவில் பயன்பட்டதென்பது ஒருதலை. இத்தகரம் அல்லது பித்தளை, இப்புதைந்த நகரங்களில் காணப்படலால், 'இந்தியாவில் பித்தளைக் காலம் இல்லை' எனக் கூறிவந்தது பொய்த்துவிட்டது.

**கற்கள் :**—பலவகைப்பட்ட கற்கள் கட்டிடங்கட்குப் பயன்பட்டன. 'சுக்கூர் சுண்ணாம்புக் கற்கள்' கழிநீர்ப் பாதையை மூடப் பயன்பட்டன: 'கீர்தர்' மலைக்கற்கள் பாத்திரங்கள், சிமென்ட், சிலைகள் இவற்றுக்குப் பயன் பட்டன. வேறு கற்கள் நிறை முதலியவற்றுக்குப் பயன்பட்டன. ஒருவகை மஞ்சட்கல் லிங்கம் முதலியவற்றுக்குப் பயன்பட்டது. பல உயர்தரக் கற்கள் அணிகட்கும் பிறவற்றுக்கும் பயன்பட்டன. அழகிய பச்சை 'அமெஸான்கல்' என்பது, நீலகிரியில் உள்ள 'தொட்ட பெட்டா' விலிருந்து கொண்டு வரப்பட்டது. இந்தியாவில் இக்கல் உள்ள இடம் இஃது ஒன்றே. எலும்பு, தந்தம், சங்கு முதலியவையும் பயன்பட்டன.

**பஞ்சு :**—மொஹெஞ்சொதரோவில் உள்ள வீடுகளில் எல்லாம் நெய்தற்றொழில் நடந்து வந்தது என்பதற்கு உரிய அடையாளப் பொருள் கள் காணப்படுகின்றன. கம்பளியும் பஞ்சுமே நெய்யப்பட்டு வந்தவை. அங்கு அகப்பட்ட பஞ்சு, இப்போதைய இந்தியப் பஞ்சுபோன்றே இருக் கிறது. இப் பழைய பஞ்சே பாபிலோனியர்க்குச் 'சிந்து' ஆகவும், கிரேக் கருக்கு 'சின்டன்' ஆகவும் தெரிந்திருந்தது. இப்பஞ்சு பருத்திச் செடியி னதே அன்றி, இலவம் பஞ்சு அன்று! அன்று!

**மயிர் முடிப்பு :**—அக்கால உடைகளுள் நீண்ட 'போர்வை'யும் அடங்கியிருந்தது. இவ்வுண்மை அங்கு அகப்பட்டுள்ள சிலைகள் மீதுள்ள போர்வை வேலைப்பாட்டால் நன்கறியலாம். அக்கால மக்கள் சிறிய தாடியும் மீசையும் வைத்திருந்தனர்; சிலர் மீசையின்றித் தாடிமட்டுமே வைத்திருந் தனர். இப்பழக்கம் சுமேரியர் பழக்கமாகும். தலைமயிர் பின்னல் முடி யிடப்பட்டது. பெண்கள், மயிரைச் சுற்றிலும் சுருட்டி இடப்பக்கம்

கொண்டைபோல் போட்டிருந்தனர். அங்கு அகப்பட்ட மூன்று பித்தளைப் பெண் உருவங்கள் இவ்வாறே தலைமுடி உடையவாயுள.

**அணிகள்:**—கழுத்தணி, கங்கணம், மோதிரம், காப்பு, ஒட்டியாணம், காதணி முதலியன அக்கால மக்கள் பயன் படுத்தியவை. இவற்றைப் பணக்காரர் பொன், வெள்ளி, தந்தம், உயர் கற்கள் இவற்றால் செய்து வந்தனர்; ஏழைகள் சங்கு, பித்தளை, செம்பு ஒருவகைக் கல் இவற்றால் செய்து வந்தனர்.

**கருவிகள்:**—போர்க் கருவிகள் கல்லாலும் பித்தளை அல்லது செம்பாலும் செய்யப்பட்டவை. கோடரி, இரம்பம், சிரைக்கும் கத்தி முதலியவை செம்பாலும் பித்தளையாலும் செய்யப்பட்டவை. கல்லால் ஆய தட்டுகள், பாத்திரங்கள் முதலியன, மொஹெஞ்சோதரோவில் வாழ்ந்த மக்கள் காலம் 'மாக்கல் காலம்' என்று நினைக்கவே இடந்தருகின்றன. போர்க் கருவிகள் இருந்த நிலைமையை நோக்குகையில், அக்கால மக்கள் எதிர்ப்பை நோக்கி வாழ்ந்தவராகத் தெரியவில்லை.

**நிறைகள்:**—சிறியவை கற்பலகையால் ஆனவை; முச்சதுர உருவில் அமைந்தவை. பெரியவை சர்க்கரைப் பொட்டணம் போன்ற உருவில் அமைந்தவை. இவை 'ஏலம்' 'மெசபொட்டோமியா' முதலிய இடங்களில் அகப்பட்ட நிறைகளைவிட, நிறையில் சரியானவை; பின்ன அளவையும் குறிக்கத்தக்கவை; 1, 2, 4, 8, 16, 32, 64, 160, 200, 320, 640, 1600 வரை பின்ன அளவை உடையவை.

**பாத்திரங்கள்:**—வீட்டுக்கு உரிய பாத்திரங்களுள் பெரும்பாலன மட்பாண்டங்களே. கோப்பைகள் மிகுதியாகப் பயன்பட்டன; நீர்ச் சாடிகளும் அங்ஙனமே. மட்பாண்டங்கள் சக்கரத்தின் உதவிகொண்டு செய்யப்பட்டவை; கருமை, செம்மை நிறங்கள் கொண்டவை; 'இப்பாண்டங்களே உலகில் மிகப் பழமையானவை' என்பர் ஆராய்ச்சியாளர்.

**பொம்மைகள்:**—களிமண் பொம்மைகள் பெருவாரியாகக் காணப்பட்டன எலிகள், ஊதுகுழல், (பறவைகள் உருவில்) மனித உருவங்கள், பறவைகள், வண்டிகள், முதலியன. இவ்வண்டிகள் 'ஊர்' (Ur) நகரத்தில் (கி. மு. 3200) அகப்பட்ட கல்லில் செதுக்கப்பட்ட தேரைப்போல இருத்தல் கவனிக்கத் தக்கது.

**எழுத்துக் குறிகள்:**—சிந்துப் பிரதேச மக்கள் எழுதக் கற்றவர். அவர் தம் எழுத்துக்கள் சித்திரக் குறிகள். அக்குறிகள் பழைய எலமைட், சுமேரிய, எகிப்திய எழுத்துக்களைப் போன்றவையே. அவற்றில் 396 குறிகள் அகப்பட்டுள்ளன. அவை பாத்திரங்களின் மீதும், காப்புகளின் மீதும், முத்திரைகளின் மீதும், பிறவற்றின் மீதும் காணப்படுகின்றன. எழுத்துக்

கள் சேர்ந்தும் காணப்படுகின்றன. அவை வலப்புறமிருந்து இடப்புறம் நோக்கி எழுதப்பட்டுள்ளன. 'அவை சித்திர சங்கேதக் குறிகளே தவிர எழுத்துக்கள் அல்ல' என்பர் ஆராய்ச்சியாளர் சிலர்.

**சிலைகள் :—** இச் சிந்துப் பிரதேச மக்கள் சிற்பத்திறமை ஓரளவு வாய்ந்தவர்கள். இதைத் திமில்கொண்ட எருது, எருமை, பைசன் முதலியவை தீட்டப்பெற்ற முத்திரைகளைக் கொண்டும்; வேட்டை நாய், செம்மறியாடு, அணில், குரங்கு இவற்றின் பொம்மைகளைக் கொண்டும் அறியலாம். கற்சிலைகள் மூன்றில், ஒன்று யோகியின் உருவத்தில் அமைந்துள்ளது; யோகியின் பார்வை மூக்கின் நுனிமீது படிந்துள்ளது. இரண்டாவது, தலைமட்டுமே உள்ள சிலை. அது எழும்பிய கன்ன எலும்புகள், பெரிய மெல்லிய உதடுகொண்ட வாய், அகண்ட விகாரமான காதுகள் முதலியவற்றை உடையது. மூன்றாவது சிலை, போர்வை போர்த்து அமைந்துள்ள உருவம். இவற்றோடு நடனமாது ஒருத்தியின் சிலையும் காணப்படுகிறது. அச் சிலையின் கால்கள் மிக நீண்டவையாய் இசைக்கு ஏற்பத் தாளம்போடும் நிலையில் அமைந்துள்ளன. கைகளும் மிக்க நீளமானவை. ஹரப்பாவில் காணப்பட்ட சிலைகள் இரண்டு. அவற்றுள் ஒன்று சிவந்த கல்லில் செய்யப்பட்டது; தடித்த மனிதன் உருவைக்காட்டுவது. மற்றொன்று பழுப்பு நிறம் அமைந்த சற்பலகையால் ஆயது; இடக்கால் வலக்கால் மீது நின்று நடனம் ஆடுவதுபோல அவ் வுருவம் (ஆண்) அமைந்துள்ளது. இது 'சிவ—நடராசரது பழைய உருவம்' என்பர் ஆராய்ச்சியாளர்; இச் சிலைகளில் அமைந்த வேலைப்பாடு கிரேக்கருடையது என்பர்.

**நெறி (மதம்) :—** பெருவாரியான பெண் உருவங்கள் பலுசிஸ்தானத்திலும், சிந்துப் பிரதேசத்திலும் கிடைத்துள்ளன. இவை போன்றவை பல மேற்கு ஆசிய நாடுகளில் (ஏலம், மெசபெட்டோமியா, சிரியா, பாலஸ்தீனம், சிறிய ஆசியா, சைப்ரஸ், க்ரீட், பால்கன் நாடுகள், எகிப்து) கிடைத்துள்ளன. இவை தாயின் (இயற்கைத்தாயின்) உருவச்சிலைகள் என்பதை ஆராய்ச்சியாளர் ஒப்புக்கொண்டுள்ளனர். ஹரப்பாவில் கிடைத்துள்ள முத்திரை ஒன்றில் தாயின் வயிற்றிலிருந்து ஒரு செடி தோன்றுகிறது; ஒருவன் கத்தியை வைத்துக்கொண்டு நிற்கின்றான். பெண் ஒருத்தி தூக்கிய கைகளோடு (பலியிடப்படுபவள் போலும்) நின்றுகொண்டு இருக்கிறாள்.

**சிவ வணக்கம்:—** வேறொரு முத்திரையில் முக்கண்களையும், மூன்று முகங்களையும் உடைய சிவன் உருவம் யோகத்தில் இருப்பதுபோல் காணப்படுகிறது. அவ்வுருவினைச் சுற்றிலும் யானை, புலி, காண்டாமிருகம் முதலிய விலங்குகள் முத்திரையில் செதுக்கப்பட்டுள்ளன. ஆசனத்தின் கீழ் இரு கொம்புள்ள மான் நிற்கிறது; 'இவற்றை நோக்குகையில், சிவன் பசுபதி (விலங்குகளின் தலைவன்) என்பது குறிக்கவே இம்முத்திரை என்பது பயன்படுகிறது, என்பர் ஆராய்ச்சியாளர். சிவனது தலையில் இரண்டு

கொம்புகள் இருக்கின்றன. அவை சைவர் தம் திரிசூலத்தைக் குறிப்பன வாக இருக்கலாம் என்பர். மொஹெஞ்சொதரோவில் உள்ள வேறொரு முத்திரையில் 'யோகி' உருவத்தின்முன் 'நாகன்' ஒருவன் பிரார்த்தனை புரிவதாகக் காணப்படுகிறது. வேறொன்றில் அதே யோகி (ஒரே தலையுடன்) தனியாக இருப்பதாக உள்ளது.

'சிந்துப்பிரதேசக் குறியீடுகளில் காணப்படும் நான்கு கைகளையுடைய சித்திரங்கள் பிற்கால இந்துக் கடவுளராய (நாற்கைகளையுடைய) பிரமன், விஷ்ணு, சிவனைக் குறிப்பனவாகலாம்,' என்பர் R. P. சண்டா என்னும் பேராசிரியர். அவரே, "நிற்கின்ற நிலையில் ஆறு உருவங்கள் சில முத்திரை களில் காணப்படுகின்றன; அவை சமண யோகிகளைப் போல உள்ளன; 'மட்ரா' கண்காட்சிச் சாலையில் உள்ள கி. பி. 2-ம் நூற்றாண்டினதாகவுள்ள ரிஷபதேவர் நிலையில் உள்ளவாறே மேற்கூறியவை காணப்படுகின்றன; நின்று யோகத்தில் இருப்பது சமண யோகிகட்கே சிறப்பானது; 'ரிஷபம்'- எருது; இது சமணரது அடையாளக்குறி; சில முத்திரைகளில், யோகிக்கு முன்பு தரையில் எருது இருப்பதாக உள்ளது வியக்கத் தக்கது; எனவே, இவ்வுருவங்கள் ரிஷபதேவரைக் குறிப்பனவாக இருக்கக்கூடுமோ" என ஐயுறுகின்றனர். அங்ஙனம் இருத்தல் கூடுமாயின், சைவத்துடன் சமண மும் மிக்க பழமை வாய்ந்ததாக இருத்தல் வேண்டும் என்பது அவர்தம் கருத்தாகும். வேறு சிலர் எருதும் தேவரும் சைவத்தையே குறிப்பன என்பர்.

**பீட-இலிங்க வழிபாடு**;—"முற்கூறிய சிவ-சக்தி வழிபாட்டைத் தவிர, பீட—இலிங்க வணக்கமும் இருந்ததாகத் தெரிகிறது. சிந்துப் பிர தேசத்திலும் பலுசிஸ்தானத்திலும் இவை கிடைத்துள்ளன. இவை அவற்றைக் குறிப்பனவே என்பதை அவற்றைக் கண்ணுறுவோர் நன்கறியக் கூடும். ஹரப்பாவிலும் மொஹெஞ்சொதரோவிலும் கிடைத்துள்ளவற்றுள் சிறிய அளவின, திருஷ்டி தோஷங்களும் பேய் பிசாசுகளின் சேட்டைகளும் தாக்காதிருக்கும் பொருட்டு அணியப்பட்டு வந்தன. பெரியவை வழிபாட் டுக்கு உரியனவாக இருந்தன."

**மர வணக்கம்**:—பண்டை மக்கள் மரங்களையும் அவற்றில் உறை வனவாகக் கருதப்பட்ட தேவதைகளையும் வழிபட்டு வந்தனர் என்பது ஹரப்பாவில் அகப்பட்ட சில முத்திரைகளிலிருந்து தெரிகிறது. (இப் பழக்கம் தமிழகத்தில் இன்றும் பெருவழக்குடையதாம்). மொஹெஞ்சொ தரோவில் கிடைத்த ஒரு முத்திரையில் அரசமரக் கிளைகள் இரண்டுக்கு இடையில் பெண் தெய்வம் ஒன்று காணப்படுகிறது. அதனை நீண்ட கூந்தலையுடைய ஏழு பெண்கள் வழிபடுவதாக உள்ளது. அவ்வுருவத்தின் பக்கத்தில் மனித முகத்துடன் பாதி உருவம் எருதாகவும் பாதி ஆடாகவும் உள்ள விலங்கொன்று காணப்படுகிறது. அது மரத்தேவதையின் வாக னமோ யாதோ அறியக்கூடவில்லை. ஹரப்பாவில் கிடைத்துள்ள வேறு

இரண்டொன்றிலும் இத்தகைய பெண் தெய்வமும் நூதன விலங்கும் காணப்படுகின்றன.

**விலங்கு வணக்கம்:**—இது சிந்துப் பிரதேச மக்களிடம் இருந்த தென்பது வெளிப்படை. மனித முகம், பாதி எருது உருவம், பாதி ஆடு அல்லது யானை யுருவம்; பாதி மனித வுருவம், பாதி வேறு உருவம் ஆகிய நூதன விலங்கு கொம்பு முளைத்த புலியோடு போரிடல் மாதிரி காணப்படு கிறது. முத்திரைகளில் தெய்வங்கட்கும் நாகங்கட்கும் கொம்புகள் இருப் பதாகக் காணப்படுகின்றன. கொம்புள்ள விலங்குகள் சில வழிபாடு பெறு வது சில முத்திரைகளால் தெரிகிறது. எருது, யானை, எருமை, காண்டா மிருகம், குட்டைக் கொம்புள்ள எருது, புலி, ஆகிய இவை வழிபாடு பெற்றன என்பதும் சில முத்திரைகளால் வெளியாகிறது. இங்ஙனமே பல பறவைகள், வேறு விலங்குகள் முதலியனவும் காணப்படுகின்றன. (இன்றும் விலங்குகளுள் சிலவும், பறவைகளுள் சிலவும் இந்துக்களால் தூயவையாகக் கருதப்படுகின்றமை இங்கு நினைத்தற்குரியது; மயில், கருடன், எருது, ஆடு, பசு, யானை, எருமை, அன்னம், சிங்கம், சேவல், பன்றி முதலியன வழிபாட்டுக்கு உரியனவாக உள்ளன அல்லவா?)

சுருங்கக் கூறின், சிந்துப் பிரதேச மக்களது மதம் சக்தி (தாய்) வணக்கத்தையுடையது; சிவ வழிபாட்டை உடையது; யோகத்தில் பற்றுடையது; விலங்கு வணக்கத்தை உடையது; மர வணக்கத்தையும், மரம் வாழ் தெய்வ வணக்கத்தையும் உடையது; கற்சிலைகளாய பீட—லிங்க வணக்கத்தை உடையது; தூபதீப வழிபாடு உடையது; திருஷ்டி தோஷாதி களிலும் பேய் பிசாசுகள் தாக்குதலிலும் நம்பிக்கை உடையது. இவற்றுள் பெரும்பாலன இந்தியாவுக்கே சிறப்பாக உடையவை.

**இடுதலும் சுடுதலும்:**—இம்மதத்தைப் பின்பற்றி வந்த பண்டைய மக்கள், இறந்தார் உடலை எரித்து வந்தனர்; எரித்துச் சாம்பலையும் எலும்பு களையும் பெரிய மட்பாத்திரங்களில் (தாழிகளில்) இட்டு, அந்த ஆவி உண்ப தற்கென்று சில பொருள்களையும் இட்டு வந்தனர்; சில தாழிகளில் சாம்பலும் உணவுப் பொருள்களுமே காணப்படுகின்றன. எலும்பை வீசிவிட்டனர் போலும்! அல்லது எலும்பே அகப்படவில்லைபோலும்! இத்தகைய தாழிகள் பல பலுசிஸ்தானத்தில் கிடைத்துள்ளன. பிணங்களைப் புதைத்தல் சிறு வரவிற்று. மொஹெஞ்சொதரோவில் புதைக்கப்பட்ட 21 எலும் புக்கூடுகள் அகப்பட்டனவாம். இவை அகப்பட்ட இடத்தைக் சோதித் துப் பார்த்த ஆராய்ச்சியாளர், 'இவை அந்நகரம் அழிவடைந்தபோழ்து இறந்தவருடைய எலும்புகள்' எனக் கூறுகின்றனர். எலும்புக் கூடுகளில் சில, பழைய ஆஸ்ட்ரேலியர், (Proto-Australoids) மத்தியதரைக் கடற் பிரதேசத்தினர் (Mediterraneans), அல்பைனர் (Alpines) இவர்களின் எலும்புக் கூடுகளை ஒத்துள்ளன என்பர் ஆராய்ச்சியாளர்.

---

## 4. * விவேகானந்தர் கடிதம் (அறிவியல் கட்டுரைகள்)

பி. இராமநாதன், எம். ஏ;

யோக்கஹாமா,
ஜூலை 10, 1893.

அன்புள்ள ஐயா,

எனது நீண்ட பிரயாணத்தில் அடிக்கடி உங்கட்குக் கடிதம் எழுதாமல் இருந்ததைப்பற்றி மன்னிக்கும்படி வேண்டுகின்றேன். ஒவ்வொரு நாளும் ஓய்வில்லை; சிறப்பாக மூட்டை முடிச்சுகளைப்பற்றிக் கவலைப்படாத - எடுத்தறியாத என்னைப் போன்றவர்க்கு இப்பிரயாணத்தில் அவற்றைப் பாதுகாப்பதே பெரிய தொல்லையாக இருக்கிறது. ஒரு குடும்பி என்ற முறையில் இருக்கவேண்டுபவனாகிறேன். இங்ஙனம் இருத்தல் எனது நேரத்தைக் கொள்ளை கொள்கிறது. இஃது உண்மையில் எனக்குத் தொல்லையாகத்தான் இருக்கிறது.

நாங்கள் பம்பாயிலிருந்து புறப்பட்டுக் கொழும்புத் துறைமுகத்தை அடைந்தோம். எங்களை ஏற்றிச் சென்ற கப்பல் அத் துறைமுகத்தில் ஒரு நாள் முழுவதும் தங்கி இருந்தது. நாங்கள் நகரத்தைக் காண விழைந்து கப்பலைவிட்டு இறங்கினோம்; நகரத்தின் பல தெருக்கள் வழியே நடந்தோம். நாங்கள் பார்த்தவற்றுள் இப்பொழுது நினைவிற்கு வருவது அழகிய பௌத்த விஹாரம் ஒன்றுதான். அங்கு நிர்வாண (முத்தி) நிலையை அடையத் தகும் பரிபக்குவ நிலையில் புத்த பகவான் உருவச்சிலை அமைக்கப்பட்டிருந்தது. அது மிகவும் அழகிய வேலைப்பாடமைந்த சிலையாகும்.

நாங்கள் அடுத்தபடி தங்கிய துறைமுகம் பினங்கு என்பது. அது மலேயா தீபகற்பத்திலிருந்து பிரிந்து கடலில் நீண்டிருக்கும் நிலப்பகுதியாகும். அங்குள்ள மக்கள் மலேயாநாட்டு முஸ்லீம்கள். நாங்கள் பினங்கிலிருந்து சிங்கப்பூருக்குச் செல்லும்பொழுது 'சுமத்ரா' தீவின் பகுதிகள் சில கண்ணெதிரேபட்டன. சுமத்ராவில் உள்ள மலை முகடுகள் எங்கள் பார்வையைத் தம்பால் இழுத்தன.

---

* நாஷனல் பப்ளிஷிங் கம்பெனியாரின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

சிங்கப்பூர், மலேயா நாட்டுத் தலைநகரம் ஆகும். அங்கு, பலவகை அரிய செடி, கொடி, மரங்களைக்கொண்ட காட்சிச்சாலை ஒன்று இருக்கின்றது. 'பிரயாணிகள் கை' எனப்படும் விசிறி போன்ற இலைகளைக் கொண்ட செடிகள் ஏராளமாகக் காண்கின்றன ; சென்னையில் மாமரங்கள் மிக்கிருத்தல்போல இங்கு "மங்குஸ்தான்" மிகுந்து காண்கின்றன. இங்குள்ள மாம்பழங்கள் ஒப்பற்றவை. இங்குள்ள மக்கள், சென்னை மாகாண மக்களைப்போல ஒரேஅளவுள்ள உஷ்ணப் பிரதேசத்தில் இருப்பினும் அவ்வளவு கரியநிறம் உடையவர் அல்லர். சிங்கப்பூரில் அழகிய பொருட் காட்சிச்சாலை ஒன்றும் இருக்கின்றது.

அடுத்தது ஹாங்காங். இங்குள்ளவர் சீனர். இங்கு எல்லாவகைத் தொழில்களையும் நடத்துபவர் சீனரே ; வாணிகம் செய்பவரும் சீனரே யாவர். ஒரு கப்பல், துறைமுகத்தை அடையுமாயின் நூற்றுக் கணக்கான சிறிய பெரிய படகுகள் வந்து கப்பலை வளைத்துக் கொள்கின்றன. அவை பிரயாணிகளை நகரத்திற்கு அழைத்துச் செல்லவே அவ்வாறு வந்து சூழ்கின்றன. ஒவ்வொரு படகிலும் படகோட்டி தன் குடும்பத்துடன் வாழ்கிறான். அவன் குடும்பத்துக்கெனப் படகில் தனி இடம் உண்டு. படகில் இரண்டு சுக்கான்கள் உண்டு. ஒன்றைக் கையாலும் மற்றொன்றைக் காலாலும் அசைத்துப் படகைச் செலுத்தவேண்டும். இவ் வேலையைப் பெரும்பாலும் படகோட்டியின் மனைவியே செய்வது வழக்கம். அவள் முதுகில் குழந்தை ஒன்று துணியால் கட்டப்பட்டிருக்கும். சீனத்தாய் எந்தத் தொழிலைச் செய்யும்பொழுதும் அக்குழந்தை அவ்வாறே முதுகில் கட்டப்பட்டு அமைதியாக இருத்தல் வியப்பைத் தருவதாகும். ஹாங்காங் துறைமுகத்திற்குள் படகுகளும் நீராவிப் படகுகளும் கூட்டம் கூட்டமாக வருதலும் போதலும் காணத்தக்க ஒரு காட்சியாகும். தாயின் முதுகில் கட்டப்பட்டுள்ள பிள்ளைக்கு அரிசி அடை கொடுத்துவிட்டாற் போதும்; அஃது அமைதியாக அதனை அரைத்துக்கொண்டு இருக்கும். பிறகாட்சிகளைப் பார்த்துக் களித்தலில் அதற்கு விருப்பம் இல்லை. இந்தியப் பிள்ளைகள் தளர்நடைப் பருவத்தில் தள்ளாடும்பொழுது, அதே வயதுடைய சீனப்பிள்ளை அமைதியாக வேலை செய்யப் போதலைக் காணல் வருந்தத்தக்க காட்சியாகும். அச் சீனமகன் வாழ்க்கையின் தேவையை அவ் விளம் பருவத்திலேயே கற்றுக்கொண்டான் போலும்! சீனரது கொடிய வறுமையே இதற்குக் காரணம். ஏறத்தாழ இந்தியரும் இங்ஙனமே வறுமை வாழ்வு வாழ்கின்றனர். அவ்வறிய நிலை, அவர்களை வறுமையைத் தவிர வேறு எதனையுமே எண்ணாதபடி செய்கின்றது.

ஹாங்காங் மிக்க அழகு பொருந்திய நகரம். அது மலைமீதும், மலைச் சரிவுகளிலும் அமைந்துள்ளது. மலை உச்சிக்குக் கீழிருந்து போய்வர மின்சார வண்டி வசதியுண்டு. அவ் வண்டி கம்பியாலும் நீராவியின் சக்தியாலும் நடமாடுகின்றது.

நாங்கள் மூன்றுநாள் ஹாங்காங்கில் தங்கி இருந்தோம். பின்னர், அங்கிருந்து எண்பது கல் தொலைவில் உள்ள காண்டன் நகரத்திற்கு ஆற்றுவழியே படகில் சென்றோம். அடடா! என்ன சுறு சுறுப்பான போக்கு வரவு! ஆற்றுநீர் மறைப்புண்டதோ என்று எண்ணத் தக்கவாறு எண்ணிறந்த படகுகள் போகின்றன; வருகின்றன. அவற்றுள் பல, சாமான்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஏற்றிச் செல்வனவாகும். நூற்றுக் கணக்கான பிறபடகுகள் வீடுகளாகப் பயன் படுகின்றனவாகும்; அவற்றுட் பல பெரியவையாகவும் பார்க்க அழகு பொருந்தியவையாகவும் இருக்கின்றன. சில படகுகளில் உள்ள வீடுகள் இரண்டு மூன்று அடுக்கு களை உடையன. சுற்றிலும் தாழ்வாரம் உடையன. இவ்வீடுகளை 'மிதக் கும் மாளிகைகள்' என்று சொல்லத் தடையுண்டோ?

சீன அரசாங்கத்தார், அந்நியர் இருத்தற்கென்று விடுத் துள்ள நிலப்பகுதியில் நாங்கள் சென்று தங்கினோம். ஆற்றின் இரண்டு கரைகளிலும் எங்களைச் சுற்றியுள்ள இடம் முழுவதும் பெரிய நகரமாகக் காணப்படுகிறது. மக்களுடைய ஓசையும் சாமான் களைத் தள்ளும் ஓசையும் படகுகளைச் செலுத்தும் ஓசையும் செவி களைத் துளைக்கும். அக் காண்டன் நகரம் சுறுசுறுப்புக்கு இடமானது; நெருக்கமுள்ள மக்கள் தொகையைக் கொண்டது. எனினும், அது வெறுக்கத் தக்க நகரமாகும். என்னை? அஃது இந்திய நகரம்போல அசுத்தங்கள் நிறைந்த நகராகுமா? எனின், இல்லை. அசுத்தமான பொருள் எதனையும் வீணாகப் போகுமாறு சீனர் விடுவதில்லை. ஆனால் சீனன் ஒரு போதும் குளிப்பதில்லை என்று சபதம் செய்துளான் போலும்! ஒவ்வொரு வீட்டின் அடிப்பகுதி கடையாகக் காண்கிறது; மேற் பகுதியிற்றான் மக்கள் குடி இருக்கின்றனர். தெருக்கள் மிகவும் குறுக லானவை. ஒரு மனிதன் கை வீசிக்கொண்டு நடந்தால் அவன் கைகள் இரண்டு பாகங்களிலுமுள்ள கடைகளைத் தொட்டுத்தான் தீரும். தெருக் களில் பத்தடிக்கு ஒரு இறைச்சிக் கடையைக் காணலாம். நாய் இறைச்சியை யும் பூனை இறைச்சியையும் விற்கும் கடைகளும் இருக்கின்றன. மிகவும் எளிய சீனரே நாய் அல்லது பூனை இறைச்சியை உண்பர்.

சீனப் பெருமாட்டிகளை வெளியிற் காணல் இயலாது. வட இந்தியா வில் இந்துப் பெண்களுக்குள்ள அந்தப்புர வாழ்க்கை இப்பெருமாட்டி கட்கும் உண்டு. தொழிலாளர் பெண்களையே வெளியிற் காண இயலும். அப்பெண்களுடைய பாதங்கள் உங்கள் மிகச் சிறிய குழந்தையின் பாதத்தைவிடச் சிறியதாகவுள்ளது வியப்பைத் தருகிறது. அப்பெண்கள் மெய்யாகவே நடக்கிறார்கள் என்று சொல்லுவதைவிட நொண்டி நடக்கிறார் கள் என்று கூறுதல் பொருத்தமானது.

நான் சீனர் கோவில்கள் பலவற்றைக் காணச் சென்றேன். அவற்றுள் மிகப் பெரியது சீனநாட்டு முதல் அரசர்க்கு அர்ப்பணம் செய்யப் பட்டது ஆகும். அங்கு புத்தர் பெருமானுடைய சிலை நடுநாயகமாக

வைக்கப்பட்டுள்ளது. அதன் அடியில் முன் சொன்ன சீன முதல் அரசர் உருவச்சிலை அமைந்துள்ளது. அவற்றைச் சுற்றிலும் பௌத்த சமயத்தை முதன் முதல் தழுவிய ஐந்நூறு பௌத்த சீடர்களின் உருவச்சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. அவை அனைத்தும் மரத்தால் இயன்றவை; அழகிய வேலைப்பாடு கொண்டவை.

நாங்கள் காண்டன் நகரிலிருந்து மீண்டும் ஹாங்காங் சென்றோம். அங்கிருந்து ஜப்பானை அடைந்தோம். நாங்கள் முதன்முதல் சென்று சேர்ந்த துறைமுக நகரம் நாகசகி என்பது. நாங்கள் கப்பலைவிட்டு இறங்கி நகருக்குட் சென்றோம். என்ன நேர்மாறான காட்சி! ஜப்பானியர் மிகவும் தூய்மையாக இருக்கின்றார்கள். ஒவ்வோர் இடமும் சுத்தமாகவும் ஒழுங்காகவும் காணப்படுகிறது. எல்லாத் தெருக்களும் இயன்றவரை அகலமாகவும், நேராகவும், பதப்படுத்தப்பட்டனவாகவும் இருக்கின்றன. அவர்களுடைய வீடுகள் கூண்டுகளைப்போல் காண்கின்றன. ஒவ்வொரு நகரத்தின் அல்லது கிராமத்தின் பின் பச்சைக் கம்பளம் போர்த்தாற் போன்ற பசியமரம், செடி, கொடிகளைக்கொண்ட அழகிய குன்றுகள் நகரத்தை அல்லது கிராமத்தை அணி செய்கின்றன. ஜப்பான் அழகுக்கு இருப்பிடம் என்னலாம். ஜப்பானியர் குட்டை உருவினர்; அழகிய மேனியுடையவர்; வியப்பூட்டும் தோற்றம் கொண்டவர். அவர்களுடைய நடை, உடை, பாவனைகள் நம் கவனத்தை ஈர்ப்பன. பெரும்பாலும் ஒவ்வொரு வீட்டின் பின்புறமும் அழகிய தோட்டம் இருக்கின்றது. அதனில் செய்குளம், புல் மேடைகள், பூச்செடிகள், மருந்துச் செடிகள் முதலியன காண்கின்றன.

நாங்கள் நாகசகி என்னும் நகரத்திலிருந்து கோபே என்னும் துறைமுகத்தை அடைந்தோம். நான் ஜப்பானில் உள்ள உள்நாட்டுக் காட்சியைக் காண விழைந்து கப்பல் பிரயாணத்தை இத்துடன் முடித்துக் கொண்டேன்; கோபேயிலிருந்து பல ஊர்களைப் பார்த்துக்கொண்டே யோக்க ஹாமா சேரலாம் என்று முடிவு செய்தேன்.

நான் உள்நாட்டுப் பிரயாணத்தில் மூன்று பெரிய நகரங்களைக் கண்டேன். அவை ஓசகா, கியொடா, டோக்கியோ என்பன. ஓசகா என்பது பொருள்களை உற்பத்தி செய்யும் பெரிய தொழிற்சாலை நகரமாகும். கியொடோ என்பது ஜப்பானின் பழைய தலைநகரம். டோக்கியோ என்பது இப்பொழுதுள்ள கோ நகரம் ஆகும். இந் நகரம் கல்கத்தாவைப்போல இருமடங்கு பெரியது; இருமடங்கு ஜனத்தொகையும் கொண்டதாகும். இங்கு அநுமதிச் சீட்டு இன்றி எந்த வெளிநாட்டானும் உள்நாட்டுப் பிரயாணம் செய்ய விடப்படுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

ஜப்பானியர் இன்றைய தேவைகளை நன்கு உணர்ந்தவராகக் காண்கின்றனர். அவர்களிடம் துப்பாக்கிகளைத் தாங்கி நன்கு பயிற்சிபெற்ற படைவீரர் இருக்கின்றனர். அத் துப்பாக்கிகளும் அந் நாட்டுப் படைத்

தலைவர் ஒருவர் கண்டுபிடித்தனவேயாகும். அவர்கள் தொடர்ச்சியாகத் தங்கள் கப்பற்படையைப் பெருக்கிப் பலப்படுத்தி வருகின்றனர். ஜப்பான் எஞ்சினியர் ஒருவர் ஒருமைல் நீளமுள்ள புழையை மலையிற் குடைந்திருப்பதை நான் கண்டேன்.

தீப்பெட்டி செய்யும் தொழிற்சாலைகள் பார்க்கத் தக்கவை. ஜப்பானியர் தமக்கு வேண்டும் பொருள்கள் அனைத்தையும் தம் தாய் நாட்டிலேயே செய்ய விழைகின்றனர். ஜப்பானியக் கப்பல்கள் ஓய்வின்றி ஜப்பானுக்கும் சீனாவுக்கும் பிரயாணம் செய்கின்றன.

நான் பல கோவில்களைச் சென்று பார்வையிட்டேன். ஒவ்வொரு கோவிலிலும் பழைய வங்கமொழி எழுத்துக்களில் வடமொழி மந்திரங்கள் சில எழுதப்பட்டுள்ளன. குருமாருட் சிலரே வடமொழி படித்துள்ளனர். ஆயினும் அவர்கள் மிக்க அறிவுடையவர்கள்; இக்காலத்திற்குத் தேவையானவற்றை நன்கறிந்துள்ளனர். நான் ஜப்பானியரைப்பற்றி நினைப்பன யாவும் இச் சிறிய கடிதத்தில் எழுதமுடியவில்லை. ஆண்டுதோறும் நம் இந்திய இளைஞர் சிலரேனும் ஜப்பானுக்கு வந்து போகவேண்டும் என்பது எனது அவா. உயர்வுக்கும் நல்லவற்றிற்கும் இந்தியா தாயகமானது என்பது ஜப்பானியர் எண்ணமாக இருக்கிறது.

ஆனால், நீங்களோ—இந்தியராகவுள்ள நீங்களோ—வாழ்நாள் முழுவதும் பயனற்றவற்றைப் பேசும் வீணர்களாக இருக்கிறீர்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள்? ஜப்பானுக்கு வாருங்கள்; இம் மக்களைப் பாருங்கள்; வீடு திரும்பி வெட்கித் தலைகுனியுங்கள். நீங்கள் வெளிநாடு சென்றால் உங்கள் ஜாதி கெட்டுவிடும் என்று எண்ணும் அறிவீனர்களாக இருக்கிறீர்கள். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக வளர்க்கப்பட்ட மூட நம்பிக்கைகளை மென்மேலும் வளர்த்துக்கொண்டும், தீண்டாமையைப்பற்றி நூற்றுக்கணக்கான வருடங்களாக வாதம் செய்துகொண்டும் நாட்களை வீணே கழிக்கின்றீர்கள்; பல நூற்றாண்டுகளாக வளர்க்கப்பட்டு வந்த சமூகக் கொடுமையால் மனித இனத்தை உங்கட்கு அப்பாற்பட்டதாகச் செய்துவிட்டீர்கள். என்ன செய்கிறீர்கள்? இப்பொழுது என்ன செய்துகொண்டு இருக்கிறீர்கள்? கையில் புத்தகங்களுடன் கடற்கரையில் உலாவிக்கொண்டு மேனாட்டு ஆசிரியன்மார் அறிந்தோ, அறியாமலோ எழுதியுள்ள சில செய்திகளை மனப்பாடம் செய்துகொண்டு முப்பது ரூபாய் கூலிவரும் குமாஸ்தா வேலைக்காக அல்லது சட்ட நிபுணர் பதவிக்காக நீங்கள் படும்பாடு பரிதபிக்கத் தக்கது. இதுதானா இந்திய இளைஞரது வாழ்க்கையின் உயர்ந்த நோக்கம்? இங்ஙனம் படித்த மாணவனுடைய கால்களைச் சுற்றிக்கொண்டு அவனுடைய பிள்ளைகள் பசிப்பிணியால் இடும் இரைச்சலோ கொடிது! கொடிது!! உங்களுடைய புத்தகங்களையும் பட்டவுடைகளையும் பட்டத்தாள்களையும் பிறவற்றையும் மூழ்கடிக்கக் கடலில் நீர் இல்லையா? இங்கு வாருங்கள்; மனிதராக இருங்கள்; முன்னேற்றத்திற்கு எப்பொழுதும்

தடையாகவுள்ள புரோகிதர்களைப் புறக்கணியுங்கள். அவர்கள் உள்ளத்தை மாற்ற முடியாது; அவர்கள் உள்ளம் ஒருபோதும் விரியாது. அவர்கள் சென்ற பல நூற்றுண்டுகளாக இருந்துவரும் மூட நம்பிக்கை, கொடுமை இவற்றினின்றும் தோன்றியவர்கள். அதனுல் முதலில் புரோகிதத்தையே சமூகத்திலிருந்து களைந்து எறியுங்கள். வாருங்கள்; மனிதராகுங்கள். உங்கள் குறுகிய வளைகளிலிருந்து வெளியே வாருங்கள்; நெடுந் தொலைவு சுற்றிப் பாருங்கள்; பிறநாடுகள் எவ்வாறு முன்னேறிச் செல்லுகின்றன என்பதைக் கவனியுங்கள். நீங்கள் உங்களைப்போல் உள்ள மனிதரை நேசிக்கின்றீர்களா? உங்கள் நாட்டை நேசிக்கின்றீர்களா? நேசிப்பதாயின் வாருங்கள். நாம் உயரிய நோக்கங்கட்காக உழைப்போம்; பின்னுல் திரும்பிப் பார்க்கவேண்டாம். உங்கள் உயிர்க்கு இனியரானவர் அழுதாலும் பின் நோக்கம் வேண்டாம். முன் நோக்கமே வேண்டற்பாலது!

இந்தியா, கோடிக்கணக்காக வுள்ள தன் மக்களில், குறைந்தது ஆயிரம்பேருடைய தியாகத்தை விரும்புகிறது. அந்த ஆயிரம்பேரும் மனிதத்தன்மையும் தியாக வுள்ளமும் உடையவராக இருத்தல்வேண்டும். எளியவர்மேல் இரக்கம், அவர்களது பசித்த வயிற்றுக்கு உணவு, அறியாமை இருளில் ஆழ்ந்துள்ள மக்கட்கு அறிவு, உங்கள் முன்னோரால் விலங்கு நிலைக்குக் கொணரப்பட்டுத் தாழ் நிலையில் உள்ள ஏழை மக்களை மனிதராகச் செய்யும் முயற்சி, இவை அனைத்தும் இன்று வேண்டற்பாலன. இவற்றைச் செய்யத் தன்னலமற்ற, நிரம்பிய அறிவுபெற்ற இளைஞர் எத்துணையரைச் சென்னை மாகாணம் வழங்குதல் கூடும்? அமைதி, ஆரவாரம் இன்மை, நிதானமான தொண்டு இவையே வேண்டற்பாலன. பத்திரிகைகளில் பெயரை விளம்பரப்படுத்தும் ஆடம்பர வேலை வேண்டாம்.

உங்கள் அன்புள்ள,

விவேகானந்தன்.

---

## 5. * எனது இலங்கைச் செலவு

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

'இலங்கைச் செலவு' என்னும் தலைப்பை நோக்கியதும் சிலர் 'இலங்கைக்குச் சென்று திரும்பியதற்கு நேர்ந்த செலவுபோலும்' என்று நினைக்கலாம். ஈண்டுச் 'செலவு' என்னுஞ் சொல்லைப் பொருட்செல வென்னும் பொருளில் பெய்தேனில்லை. தரை-நீர்ச் செலவு என்னும் பொருளில் அச் சொல்லைப் பெய்தேன். இந்நாளில், செலவு என்னுஞ் சொற்குப் பதிலாகப் பெரிதும் 'யாத்திரை' என்னுஞ் சொல் ஆட்சி பெற்

* திரு. வி. க. அவர்களின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

திருக்கிறது. பண்டைத்தமிழ் நூல்களில் செலவு என்னுஞ் சொல்லே ஆட்சிபெற்றிருத்தல் காணலாம். 'செங்கோன் தரைச் செலவு' என்று பெயர் தாங்கிய ஒரு தமிழ் நூலுண்மையும் கவனிக்கற்பாலது.

நாங்கள் கப்பலினின்றும் இறங்கி, இலங்கைப் புகைவண்டியில் ஏறினோம். வழி நெடுகப் பசுமை உமிழும் மலைகளின் செறிவும், சூழலும், நிரையும், அணியும் உள்ளத்தைக் கவர்கின்றன. முகிற் குழாங்கள் மூண்டெழுந்து படிப்படியே அசைந்தும் ஆடியும் ஓடியும் மலைமுகடுகளிற் சூழ்ந்து தவழ்ந்து பாகைபோல் பொலியுங் காட்சியும்—அம் மலைகளின் உடல் புலனாகாவாறு பசும்பட்டுப் போர்த்தாலெனப் பொழில்கள் துதைந்துள்ள அழகும்—புலன்களை ஒன்றச் செய்கின்றன. மலையுச்சியினின்றும் தரைவரை, நிரை நிரையாகச் சரிந்தும் செறிந்தும் நிற்கும் தெங்கின் பெருக்கும், அவ்வாறே தெங்கைவிட்டுப் பிரியாது அணித்தே புடைசூழ்ந்து நிற்கும் கமுகின் உயர்வும், அவைகளுடன் நீக்கமின்றி வாழ்க்கைத் துணையெனச் சுற்றிச் சுற்றிப் பின்னிக்கிடக்கும் கான்பரந்த செடிகொடிகளின் ஈட்டமும், வானுலகேறப் பச்சைப்படாம் விரித்த படிகளெனத் திகழ்கின்றனவோ என்றும் ஐயுறலாம். புகை வண்டி அப்பசுமை நிலத்தில் பறந்தோடுவதை நோக்குழி, அது பச்சை மரகத மலைபைக் கிழித்தோடும் அம்பெனத் தோன்றுகிறது. பசுமைக் காட்சியில்லாத இடனும் உண்டோ? கண்ணுக்கும் மனத்துக்கும் இனிமையூட்டும் பசுமையின் பெற்றியை என்னென்றுரைப்பேன்!

புகை வண்டியின் விரைவில், இடையிடை யோடுஞ் சிற்றருவிகளின் தோற்றம், பசிய வானில் மின்னொளி தோன்றி மறைவதுபோலப் புலப்படுகிறது. பச்சைப் பசுங்கடலில் சிறு சிறு தீவுகள் நிலவுவதை மான, கூரைவேய்ந்த சிறு சிறு குடில்கள் நிலவுகின்றன. அக்குடில்களின் நடுவண் ஆடவர், மகளிர், குழந்தைகள், காளை, மயில், கன்றுகளென நிற்கின்றனர். அவ் வீட்டமும் இக் கூட்டமும் இயற்கையோடியைந்த இன்பமாகப் பொலிகின்றன. ஆங்காங்கே சிற்சில இடங்களில் தற்கால நாகரிகக் கட்டிடங்களும் புலனாகின்றன. அவைகளைக் காணுந்தோறும் காணுந்தோறும் பொல்லா அரக்கர் குழுவைப் பார்ப்பது போன்ற நிகழ்ச்சி யுள்ளத்தெழாமற் போகாது. கூரை வேய்ந்த வீடுகள் இயற்கையோடியைந்த இன்பூட்டுவது போலப் பெரும்பெரும் மாடிகள் இயற்கையோடியைந்து நிற்பினும் இன்பூட்டுவ தில்லை.

இந்நிலையில், வண்டி குறித்த காலத்துக்கு இரண்டரை மணி நேரங் கடந்து, நிலயம் சேர்ந்தது. சேர்ந்ததும், கொழும்பிலுள்ள 'இந்திய வாலிப சங்க' நேயர்கள், ஆண்டுப் போந்து, 'தென்னாடுடைய சிவனே போற்றி' என்று ஒருவர் முழங்க மற்றவர், "எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்று எதிரொலிபோல் முழங்க, எங்களை வரவேற்றார்கள். செயற்கை வெம்மையில் வீழ்ந்து வருந்திகொண்டிருந்த எனதுள்ளம் தமிழ்மறை மீது ஓடிற்று. தென்னாட்டவர்க்குச் சிவனாக விளங்குவோனே, எந்நாட்டவர்க்கும் இறைவனாக விளங்குகிறான் என்று எண்ணி எண்ணி, அம் மறை

அருளிய மாணிக்கவாசகனரை உள்ளத்தால் போற்றிப் போந்தேன். எனது எளிய வாழ்வுக்கும் எனது மனத்துக்கும் இனியதாய், வெளியில் போந்ததுங் கடற்காட்சி நல்கவல்லதாயுள்ள ஓர் இன்ப நிலையத்தில் வதியுமாறு அன்பர்கள் என்னையும் நண்பரையும் விடுத்தார்கள்.

கொழும்பிற் கணித்தாயுள்ள வெள்ளவத்தையில் நாங்கள் தங்கியிருந்தோம். நாங்கள் சென்ற காலம் ஆடி வேல் விழாக் காலம். கதிர்வேற் பெருமான் வெள்ளித் தேர்மீது இவர்ந்து, கொழும்பினின்றும் வெள்ளவத்தைக்கு எழுந்தருளி அடியவர்க் கருள் செய்கிறார்.

அவ் விழாவில் முருகப்பெருமானைப் போற்றாத குலத்தார் இல்லை. எல்லாச் சமயத்தாரும் சாதியாரும் காணிக்கை செலுத்தி நெற்றியில் திருநீறணிந்து செல்லுகின்றனர். 'முருகக்கடவுள் தமிழ்க்கடவுள்' என்பது அவ்விழாவில் நன்கு தெரிகிறது பல சமயக் கொள்கை உடைய தமிழ்மக்கள் அனைவரும் முருகக்கடவுளை வழிபடுதல் கருதத் தக்கது. நமது தென்னாட்டில் வேறு மதம் புகுந்த தமிழ் மக்கள் முருகக் கடவுளை வழிபடுகிறார்களில்லை. இலங்கைத் தமிழ் மக்கள் முருகன் வழிபாட்டில் ஒன்றி நிற்கிறார்கள்.

கொழும்பு 'இந்திய வாலிப சங்க'த்தின் ஆண்டு விழாவில் தலைமை வகிக்கவே யான் அழைக்கப்பட்டேன். அவ்விழா அழகியதொரு கொட்டகையில் நடைபெற்றது. எனக்குச் சங்கச் சார்பாக வழங்கப்பெற்ற நன்மொழியில் சங்கத்தார் என் மாட்டுள்ள முழு அன்பையும் காட்டியிருக்கிறார். அவர்க்கு நன்றிகூறுமுகத்தான், அந் நன்மொழியைத் தழுவியே எனது முன்னுரைக் கடனாற்றினேன். அம் முன்னுரைக்கண் இந்தியாவில் பல குறைகள் இருக்கின்றன என்றும்—அவை (1) பெண்ணை அடிமைப் படுத்தியிருத்தல், (2) மக்களுள் பிறப்பால் உயர்வு தாழ்வு கொண்டமை, (3) பிறப்பில் தீண்டாமை வகுத்தது, (4) கருத்து வேற்றுமைக்கு மதிப்புக் கொடாமை, (5) பொறாமை என்பன என்றும் பேசி, அவைகளைப் பீடிகையாகக்கொண்டு, சுமார் ஒன்றரை மணிநேரம் சொற்பொழிவு நிகழ்த்தினேன். இந்திய இளைஞர் உலகில் அவ்வைம்பெருங்குறைகள் இருத்தலாகாதென்றும், அக் குறைபாடுகள் உள்ளமட்டும் இந்தியா உரிமை பெறல் அரிதென்றும் அவைகளை அன்புவழி நின்று களைய இளைஞர்கள் முயலல்வேண்டு மென்றும் இளைஞர்களுக்கு விண்ணப்பஞ் செய்துகொண்டேன்.

இலங்கை வாசிகளில் பெரும்பான்மையோர் சிங்களவரே. அவருள் ஆங்கிலம் பயின்ற ஆண்மக்களும் பெண்மக்களும் ஐரோப்பிய நடை உடை பாவனைகளைக் கொண்டிருத்தலால் அவர்களைப்பற்றி ஒன்றுங் கூறவேண்டுவதில்லை. ஐரோப்பிய நாகரிகத்தில் தோயாத சிங்களவ ஆண்மகன் மிக வலியனாய், கூரிய நோக்குடையனாய்க் காணப்படுகிறான். அவன் முகத்தில் சாந்தம் காணும். அவன் எளிய உடையே அணிகிறான். பலர்

மயிரைக் கோலிக்கட்டி, வளைந்த தந்தச் சீப்பைச் செருகியிருக்கின்றனர். பெண்மகள் மிகத் திண்ணமாயிருக்கிறாள். அறிவு விளக்கம் புலப்படவில்லை. அவள் தன் அரையில் நான்குமுழத் துண்டையும், மார்பு மறைய ஒரு கஞ்சுகத்தையும் அணிந்திருக்கிறாள். மற்ற மேலாடை ஒன்றுமில்லை.

கொழும்பினின்றும் கண்டிக்குப் புறப்பட்டோம் எங்களை வழி கூட்டி அனுப்பப் போந்த அன்பர்களோடு நாங்கள் பேசிக்கொண்டிருந்தமையால், எங்கட்குச் செயற்கை வெம்மை புலனாகாமலிருந்தது. வண்டி புறப்பட்டதும் அவ் வெம்மைக்கொடுமை வருத்தத் தொடங்கிற்று. சிறிது நேரத்துக்குள் இயற்கை அன்னை காட்சி வழங்கினாள். அவ்வழியின் இயற்கை வளத்தை என்னென்று சொல்லுவேன்! ஸ்ரீ நகர், டார்ஜிலிங், ஆல்ப்ஸ் முதலிய இடங்களிலுள்ள இயற்கை வளங்களைப்பற்றிக் கேள்வியுற்றிருக்கிறேன்; நூல்கள் வாயிலாகப் படித்துமிருக்கிறேன்; அவைகளை நேரே கண்டதில்லை. கண்டிக்குச் செல்லும் வழிநெடுக இயற்கை அன்னையின் திருவோலக்க மன்றி வேறென்ன இருக்கிறது? எங்கணும் மலைகள்-மலைத் தொடர்கள்-மலைச் சூழல்கள்; எங்கணுஞ் சோலைகள் - சாலைகள் - செடிகள், கொடிகள் - பைங்கூழ்கள்; எங்கணும் அருவிகள் - ஆறுகள் - நீர் நிலைகள். இவை யாவும் ஒன்றோடொன்று கலந்து அளிக்குங் காட்சி யன்றோ கடவுட் காட்சி? நூற்றுக் கணக்கான குற்றாலங்கள் - நூற்றுக்கணக்கான பாபநாசங்கள் - ஆண்டுள்ளன. மலைகள் எத்துணை விதமாகக் காட்சி வழங்குகின்றன! சில இடங்களில் மலைகள் படிப்படியாக இழிந்து இடைவெளியிட்டு இவர்ந்து நிற்குந் தோற்றம் இயற்கை ஊசல்போல் விளங்குகின்றது. சில இடங்களில் மலைகள் சிங்கம் எழுந்து நின்று பாயவருந் தோற்றத்தை வழங்கிக்கொண்டு நிற்கின்றன. சில இடங்களில் அவைகள் செய்கரைபோல் நேர்மையாக நிற்கின்றன. பசுமை நிலவாத மலைப்பாங்கரே காணோம். தெங்கும், கமுகும், ரப்பர் மரங்களும் ஒரு பெரும் பசுங்கடல் பொங்கிவருதல் போல் காணப்படுகின்றன. சில இடங்களில் நாலாபக்கங்களிலும் மலைசூழ்ந்து நிற்ப, அவைகளினின்றும் பொழியும் அருவி அவைகளினடியில் நீரரண் என ஒடித்திகழ, நடுவண் பச்சைப் பசேலென வான்பயிர் தலையசைத்து நிற்கும் அழகைக் கண்டு உவந்தேன். பசிய மலைச் சோலைகளைப் பார்க்குந்தோறும் பார்க்குந்தோறும் இயற்கை இன்பவாழ்வு உள்ளத்தில் தோற்றமுற்று நிற்கும். இப்பொழுது ஐரோப்பியத் தோட்டக்காரரும் மற்றவரும் இப் பசுங்காடுகளைப் பண்படுத்திப் பொருளீட்டுந் துறை கண்டிருக்கின்றனர். நம் முன்னோர் அவ்வியற்கை நிலையங்களிடை வதிந்து, இயற்கையின் வாயிலாக இறைவனைக் காணும் எளிய வாழ்வு நடாத்தினர். பசுமை பொங்கும் மலைகளைப் பார்த்துக் கொண்டே கண்டி சேர்ந்தோம். நிலையத்தருகே கண்டித் தமிழ்மக்கள் அன்போடு எங்களை வரவேற்றார்கள். நாங்கள் 'தமிழக' நிலையத்தில் தங்கியிருந்தோம். ஆங்குச் 'சைவம்', 'தமிழ் வரலாறு' என்னும் இரண்டு சொற்பொழிவுகள் நடைபெற்றன. ஆங்குள்ள தமிழர், தமிழ் மனத்தோடு எங்களுடன் உறவாடினர் என்று சுருங்கச் சொல்லி மேலே செல்லுகிறேன்.

கண்டி, கண்டின்புறத்தக்க இடங்களில் ஒன்று. கண்டியை இயற்கைக்குடில், என்று கூறுவது மிகையாகாது. கண்டியிலுள்ள விவசாயக் கல்லூரி, தோட்டம் முதலியவற்றைக் கண்டோம். அத்தோட்ட வனப்பை வருணிக்கப்புகுந்தால் இக்கட்டுரை வருணனை உரையாகவே முடியும். இயற்கை அரசியின் உறையுளெல்லாங் கண்டு, பின்னர்ப் பௌத்தமடம், கலாசாலை, கோயில் முதலிய அறநிலையங்களுக்குச் சென்றோம். மடத்தில் பெரிய பௌத்த குருவைப் பார்த்து உரையாடப் போனேன். அவர்க்குத் தமிழுந் தெரியவில்லை; ஆங்கிலமுந் தெரியவில்லை. அவர் ஆணைப்படி பௌத்த வித்தியாலயம் போந்து, ஆண்டுள்ள ஓர் ஐரோப்பியர்பால் உரையாடினேன். அவர் பௌத்த நூல்களில் ஆராய்ச்சியுடையவர் என்பது, அவரது அன்பார்ந்த பேச்சால் தெரியவந்தது. சம்பாஷணையால் நாங்கள் ஒருமை முடிவே பெற்றோம்.

கண்டியின் பலதிறக் காட்சி கண்டு, அன்பர்பால் விடைபெற்று, யாழ்ப்பாணம் நோக்கினோம். யாழப்பாணத்தின் இயற்கைவளம் நமது தென்னாட்டு இயற்கை வளத்துக்கு அரண் செய்வது. இலங்கையின் மற்றப் பகுதியின் இயற்கைவளம் யாழ்ப்பாணத்தில் இல்லை. புகையிலைப் பெருக்குக் குறிக்கத்தக்கது. கொழும்பு வழியிலும் கண்டி வழியிலும் தெங்கின் பசுமை கண்ணுக்கு விருந்தளித்தது. யாழ்ப்பாணத்திலோ அத் தென்னங்கீற்றுக்களின் வேலிகள் கண்ணைக் கவர்ந்துநின்றன. யாழ்ப்பாணத்தில் சொற்பொழிவுகள் பல நிகழ்ந்தன. ஒரே நாள் நான்கு இடங்களில் சொற்பொழிவு நிகழ்த்தலும் நேர்ந்தது. பல கல்லூரிகளிலும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. கல்லூரிகளில் எனதுள்ளத்தைக் கவர்ந்தது ஸர். பொன்னம்பலம் இராமநாதன் பெண்மக்கள் கல்லூரி. அக்கல்லூரியைப் பெருஞ் சிதம்பரமாக மனத்தால் தொழுதேன். தமிழும் சைவமும் ஆண்டிருந்து புத்துயிர் பெறும் என்னும் உறுதியும் எனக்குத் தோன்றிற்று.

யாழ்ப்பாணக் குடிமக்கள் தமிழர்; வேளாளர், சைவர். அவர் நமது தமிழ்நாட்டினின்றும் அவண் குடிபுகுந்தவர். அவருடன் போந்த வேறு சிலருமிருக்கின்றனர். தாய் நாட்டின் நினைவு தோன்ற ஆண்டுள்ள தமிழ் மக்கள் சில இடங்களுக்குத் திருநெல்வேலி, பட்டுக்கோட்டை முதலிய பெயர்களைச் சூட்டி இருக்கிறார்கள். யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் எங்கள் பால் காட்டிய அன்பு என்றும் மறக்கற்பாலதன்று. தென்னாட்டுத் தமிழ் மக்களுக்கும் தங்கட்கும் இடையறாத் தொடர்பிருத்தல் வேண்டுமென்று கூறாத அன்பர்கள் இல்லை.

---

## *6. அவ்வையாரும் அங்கவையாரும்.

### (பறம்புநாடும் பாரிமகளிரும்)

பண்டிதை. S. கிருஷ்ணவேணியம்மாள்.

தமிழ்நாட்டில் அவ்வையாரைப்பற்றி உணராதார் ஒருவருமில ரெனவே கூறலாம். கற்கத்தொடங்கும் ஒவ்வொரு சிறுவர் சிறுமியரும் அவ்வையார் நூல்களில் உறவாடியே தீரவேண்டும். ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை முதலிய நூல்களைப் பயிலாத பள்ளிச் சிறுவரும் உளரோ! இம்முறையில் ஒவ்வொரு பாடசாலையிலும் அவ்வையார் குடிபுகுந்துள்ளார் எனக்கூறல் மிகையாகாது. அவர் தெய்வ அருளைப் பெரிதும் பெற்றவர். நீதிநூல்களை முறையே தொகுக்கும் வன்மை அவருக்கு வாய்ந்திருந்தது. நம் இளைஞர் பயிலும் சிறு சிறு நூல்களேயன்றி, புலவர் புகழும் பயனுடைய பாடல்களையும் அவர் வாய் வழங்கியுள்ளது. அவை அகநானூறு, புறநானூறு, நற்றிணை முதலிய இவற்றில் இடம்பெற்றிருக்கின்றன. தனிப்பாடல்களும் பல உண்டு. அவை புலவருக்கு விருந்தளித்துக் கற்றவர் அவையை அலங் கரிக்கின்றன. அவர் குறள் வெண்பாவில் யோகநூல் ஒன்று இயற்றி யுள்ளார். மக்கள் யோகம்செய்து இறைவனையடையும் முறையை அது தெள்ளிதின் உணர்த்துகின்றது. ஞானிகளுக்கும் யோகிகளுக்கும் அஃது உண்மையை உணர்த்தி ஊக்கமூட்டுகிறது. இளைஞர்க்காக இவர் பாடியுள்ள பாக்களும் ஆழ்ந்த பொருள்களை தம்முள் அடக்கிக் கொண்டு மிளிர்கின்றன. அவர் தெய்வத்தன்மைவாய்ந்தவர் என்பது சான்றோர் கருத்து. இன்றேல் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் அவர் புகழுடம்பு இத்துணைச் சிறப்புப்பெற்று உலவுவதற்கு இயலாது. அறிவுடையோர், அறிவற்றவர், ஆடவர், பெண்டிர், தமிழ்நாட்டார், பிறநாட்டார், ஆகிய யாவர் நெஞ்சிலும் இன்னும் அவர் நிலவிக்கொண்டிருத் தலை நாம் காண்கின்றோம்; அவர் புலமையைப் புகழாத கல்வியாளரும் அஞ்சாத புலவரும் பெரும்பான்மையோ ரிலரெனவே இயம்பலாம். அவ்வையார் புலானுடம்பு இவ்வுலகில் நடையாடாத இக்காலத்தி லேயே அவர் சீர்மை இத்துணைத்தெனின் அவர் உயிருடன் வாழ்ந்த காலத்தைப் பற்றிக் கூறுதலும் வேண்டுமோ?

முடியுடைத் தமிழ்நாட்டு மன்னர் மூவரும் அவர்மாட்டுப் பெரு மதிப்புக் காட்டி வந்தனர். அவர் வாக்குத் தெய்வ மொழி என்பது அவர்கள் கருத்து. அவர் கூறும் வசையையும் இசையையும் பெற் றோர் முறையே அவ்வப்பயனைத் துய்த்தலை அவர்கள் நன்கு உணர்ந் திருந்தார்கள். அக்காலத் தமிழுலகம் கேவலம் அவர்மாட்டு அஞ்சுதலை

* லலிதா விலாச புத்தகசாலையாரின் இசைவு பெற்றது.

மாத்திரம் கொண்டிலது; பக்தியையும் அன்பையும் மதிப்பையும் வகித்திருந்தது. அவர் நடந்துகொண்ட முறையே இவற்றிற்குக் காரணம் எனல் மிகையாகாது. அவர் நடுவுநிலைமை தவருதவர். உயர்குலத்தையும், பெருஞ் செல்வத்தையும் நோக்கிக் காரியம் செய்தல் அவர் அருகிலும் தலைகாட்டிலது. மனத்தூய்மையன்றி ஆரவாரத்தன்மையை யவர் விரும்பினர் இல்லை. தம்மை நாடினவர்களுக்கு உதவிபுரிய அவர் நெஞ்சம் விழைந்து நிற்கும்; பொருளைப் புல்லென மதிப்பர். பொருளுக்குப் புலமையை விற்கும் புன்மையவரிடம் அணுகிலது. எளிய வாழ்க்கையும் உயர்ந்த நோக்கங்களும் அவரிடம் குடிகொண்டிருந்தன. ஆடையினுலும், அணியினுலும் அவர் தம் புலமையை வெளிப்படுத்திக் கொள்ளவில்லை; செய்கையில் வெளிப்படுத்தவே அவர் முயன்றனர். புலமைவாய்ந்த எளியவனையும் அவர் வாய்பாடும். அன்பு ஒன்றைத் தவிர வேறென்றையும் அவர் மனம் விழைந்திலது. உண்மையைக்கூற ஒருபோதுமவர் அஞ்சினரல்லர். மன்னனுயினும் மாண்பற்ற தன்மையை வெளிப்படுத்தி அவனைத் திருத்த அவர் பின்வாங்கிலர். அவர் பாடல்கள் செருக்குடைய மன்னரை சிரங்குவியச் செய்யும் வன்மையுள்ளன. அவர் பயனற்ற ஒருவர்க்கும் அஞ்சுதல் இல்லை; பொருட்பற்றையும், ஆரவாரத்தன்மையையும் ஒருபால் சாய்தலையும் அவர் அறவே ஒழித்தார். அற்ப உயிர்களிடத்தும் அவர் அன்பு சென்றது. அவர் எளிய வாழ்க்கையையும், சிறந்த கடவுள்பக்தியையும் மேற்கொண்டனர். ஆதலின் அவர் அஞ்சவேண்டுவது ஒன்றும் இல்லாதொழிந்தது. அவர் தமிழ்த்தாய்க்குச் செல்வப்புதல்வராய் விளங்கினர். அவரைத் தன் மடிமீதிருத்திக் கொஞ்சி விளையாடும் இன்பம் அப்பொழுது தமிழணங்குக்கு வாய்த்திருந்தது. இத்தகைய மக்களையன்றே தமிழ்த்தாய் எதிர்நோக்கி நிற்கின்றனள்! அவரைக் கலைமகள் என்று கூறுவது, இப்போதும் வழக்கில் இருந்துவருகிறது. ஆனல் அக்காலத்திலிருந்த புலவர்களில் சிற்சிலருக்கு மாத்திரம் அவர்மாட்டுப் பொறுமையுண்டு. அவர்களுக்கிருந்த பொருளாசையும், ஆரவாரத்தன்மையுமே அதற்குக் காரணமென்னலாம். பெருந்தன்மை வாய்ந்த புலவர் சிலர் அவருக்குப் பெருமை தாராமலில்லை.

புலவர் மாத்திரமல்லர் அரசரும் அவ்வையாரைப் பெரிதும் விரும்பினர். அறிவில் முற்றுப்பெற்றூர் புரிகின்ற சாதுத் தொழிலையும் சில அரசர் அவருக்குக் கொடுத்திருந்தனர். தூதில் காரியங்களைக் குற்றமற இயற்றும் வன்மை அவருக்கு அமைந்திருந்தது. அவர் சீர்மைகளை முற்றும் இயம்ப யாராலும் இயலாது. அவர் பரிசுபெருத அரசரும், பெரியோரும் இல்லையெனவே கூறலாம். அவர் ஆசு கவி பாடுவதில் வல்லவர்; குற்றங்கடியும் குணமுடையவர். நீதி நூல்களில் செப்பியவண்ணஞ் செய்யும் தூய்மையவர். இத்தகைய அவ்வையார் என்னுஞ் சீமாட்டியார் ஒருவர் நம் தமிழ்நாட்டில் தோன்றவில்லையேல், பெண்களுக்கு இப்போதிருக்கும் மதிப்பில் ஆயிரத்தில் ஒரு பங்கு கிடைத்தலும் அருமையினும் அருமையே.

அவ்வையார் ஒரு நாட்டரசரிடம் பரிசுபெற்று வரும்வழியில் மூவேந்தர் பாரியாருக்கிழைத்த கொடுமையைக் கேட்டனர். பாரிமங்கையருள் அங்கவையார் கபிலரிடம் அடைக்கலம் புகுந்திருத்தலும் அவருக்குத் தெரிந்தது. அவர் மனந் துடித்தது; அனுதாபத்தினல் அவர் உடல் தளர்ந்தது; மூவேந்தர்மாட்டுச் சினம் மூண்டது; அந்தோ; வள்ளற்றன்மைவாய்ந்த பாரிக்கோ இங்ஙனம் நிகழ்தல் வேண்டும்! அவன் கல்வி நலனும், சான்றோர்மதிக்கும் பெருந்தகைமையும் எங்குப் போய் ஒளிந்தனவோ? அறக்கடவுளும் அவனையாதரிக்கவில்லையா? வள்ளல்களிற்சிறந்த அவன் வஞ்சனையாலா கொல்லப்படவேண்டும்! எக்குற்றத்தைக்கண்டு மூவேந்தர் அவனை அத்தீய படுகொலைக்கு ஆளாக்கினர்; அம்மன்னர் கொடியரினும் கொடியரே; ஈரம் என்பது அவர்கள் நெஞ்சில் இம்மியும் இல்லையோ! நற்குணசீலனை இவ்வாறு சதிசெய்ய அவர்கள் மனம் எங்ஙனந்துணிந்ததோ! அவர்கள் வீரமே வீரம்! மன்னன் ஒருவனை வஞ்சனையால் வதைப்பதுதானே யுத்த முறைமை? போர் முறையில் அவர்கள் தலைசிறந்தவர்கள் என்றுதான் கூறவேண்டும். அவர்களுக்குப் புத்திபுகட்டுகின்றவர் ஒருவருமிலரோ! வேந்தர் மூவரும் இதைமிக்க பெருமையென நினைத்தனர் போலும்! இதனல் ஏற்படும் இழிவை எண்ணிப் பார்த்திலரோ! பாரியின்பால் வேந்தர் மூவருக்கும் பகை ஏற்பட்டதற்குக் காரணந்தான் யாதாயிருக்கும்! பாரியோ ஒருவரிடமும் பகைகொள்ளும் அற்ப குணத்தவனல்லன். ஒருகால் மகளிர் விஷயமாகத்தான் இருக்கவேண்டும். வள்ளலின் மகளிரை மணக்க மூவேந்தரும் விரும்பியிருப்பர். அங்ஙனம் செய்யப் பாரி மறுத்திருப்பன். அவர்களுக்குத் தன் மகளிரை மணமுடிக்க அவன் மனம் இசையாமலிருக்கலாம். இதற்காகவா இத்தகைய படுகொலை! சீ! அவர்கள் கெட்டார்கள்! அற்பர்கள்! அவனையே உயிரெனக்கருதிய குடிகள் என்ன அலங்கோலப்பட்டார்களோ! அரசன் தந்தையும் குடிகள் மக்களும் என்பதைச் செயற்கையில் காட்டிவந்த அப்பறம்புநாடு எந்நிலைமையிலுள்ளதோ! அவன் தருமக்கொடியினை எங்கு பிடுங்கியெறிந்தனரோ? இனி அக்கொடியை நாட்டிக் காப்பவர் யார்?

கொழுகொம்பற்ற கொடிபோன்ற அம்மகளிரின் மனம் எவ்வாறு தத்தளித்ததோ; என்னென்ன எண்ணங்கள் அம்மங்கையர் மனத்தைக் கொள்ளைகொண்டனவோ? சின்னஞ்சிறிய பெண்களின் நிலைமை இன்னவாறு முடிந்தது! ஒருவரிடம் அடைக்கலம் புகவும் அவர்களுக்குக் காலம் நேர்ந்ததே! காலத்தின் கோலந்தான் என்னே! அருமை மகளிர் ஆதரிப்பவரின்றி என்ன துன்புற்றனரோ? கபிலர் நெஞ்சம் எவ்வாறு கலங்கிற்றே! அவர் உயிரைத் தாங்கிநின்றது, அம்மகளிர்க்காகவே இருக்கும்; பெண்களுக்குச் செய்யவேண்டிய முறைகளைச் செய்து சென்றனரே! இஃதே அவர் பெருந்தன்மையைக் காட்டவில்லையா? செய்வனதிருந்தச் செய்தலினல் அன்றே மானிடர் சான்றோரெனப் பேர்பெறுகின்றனர்! கபிலர் தம் கடமை முடியும்

வரை ஆற்ருெணுத் துயரத்தை ஆற்றியிருந்ததுதான் வீரம். தாங்கள் எத்துணைத் துன்புறினும் பிறர்க்கு நலம்செய்து முடித்தலன்ருே மேன் மக்களது சிறந்தபண்பாடு. அதைச் செய்கையிற் காட்டினர் கபிலர். இன்றேல் பாரியின் இல்லக்கிழத்தி நங்கையைப்போன்று அவர் அன்றே முடிந்திருப்பர். அவர்செய்தது பொருத்தமானதே; சான்ருேர் புகழத் தக்கதே! என நினைத்துக்கொண்டே தளர்ந்த உடலோடும், சோர்ந்த மனத்தோடும் அவ்வையார் திருக்கோவலூரை நோக்கி நடந்தனர்.

அங்ஙனம் வழிநடக்குங்கால் அவ்வையார் பெருமழையால் நனைந்து துன்புற்று, அங்கவையார் தங்கியிருந்த அந்தணர் வீட்டை யடைந்தனர். குளிர் அவரை மிக வருத்திற்று. அவ்வையார் வருகை அங்கவையார்க்கு மகிழ்வையூட்டியது! ஆயினும் அவ்வையார் சோர் வும், குளிரும் அங்கவையாரைப் பெரிதும் வருத்தின. உடனே அவர் ஒரு துணியினுல் மூதாட்டியார் உடல் ஈரத்தைத் துவட்டித் தீமூட்டிக் குளிர் நீக்கித் தம்மிடத்திருந்த நீலச்சிற்ருடைபொன்றை அவருக்கு வழங்கி உபசரித்தனர். அவ்வையாரின் தெய்வத்தன்மையும், புலமை யும், சிறப்பும் அம்மகளார் நன்குணர்வர். அவர் பெருந்தன்மைக்கேற்ற ஒன்றை அவர்க்கீதற்குத் தம்மிடம் ஒன்றும் இல்லையே என்பதுதான் அவருக்கிருந்த வருத்தம். புலவர்கருதியதை வரையாது கொடுத்துதவிய பாரியாரின் மகளிரல்லரோ அவர்! இளமையிலிருந்தே வள்ளன்மையில் வளர்ந்து பரிசிலர் தம்மைக் கேட்பினும் மறுக்காது தரும் வள்ள லாரைத் தந்தையராகப்பெற்ற நம் அன்னையார்க்கு இது பெருந் துன்பத்தை விளைக்காது என் செய்யும்? தம்மிடம் இரந்தவர்க்கு எத்துணை அரிய பொருளைத்தரினும் அவர்கள் கீர்த்திக்கேற்ப ஒன்றுந் தந்திலமே என இரங்கும் வள்ளல் மரபில்தோன்றிய நம்மகளார் தம் மிடமிருந்த சிற்ருடையொன்றை மனமார்ந்த அன்புடன் அவ்வை யார்க்கு வழங்கியது தந்தையாரின்குணம் மகளிருக்கும் பொருந்தும் என்னும் தத்துவத்தை நினைப்பூட்டுகிறது.

அதனையேற்ற அவ்வையாரின் மனம் குதூகலத்தினுல் நிரம்பி யது. மகளே! செல்வரக்கும், சீரமைப்பும் அறவே நீங்கி அந்தணர் பால் அடைக்கலம் புகுந்திருக்கும் இவ்வமயத்திலும் என்ன ஈகை! என்ன ஈகை! ஈகை பிறவிக்குணம் என்பதை உன்பால் நன்குணர்ந்தேன். வள்ளியோன் ஈன்ற செல்வியாகிய நீ உன் குலத்திற்கேற்ற செய்கை யையே செய்தனை! ஈதன்ருே உண்மை வள்ளற்றன்மை எனப்படு வது! தக்க காலத்தில் எனக்கு ஈந்த இச்சிற்ருடைக்கு எதை ஒப்பிடு வது?

நான் ஒருகால் உன் தந்தையினிடம் பரிசில்வேண்டிச் சென் றிருந்தேன். என் கூட்டுறவு அவனுக்குப் பெரிதும் இன்பத்தையூட்டி

டியது. யான் அவணிருந்த நாட்களில் அவன் என்னோடு நூல்களின் நுட்பப்பொருள்களையும், கவித்திறன்களையுமே பேசிப்பேசி மகிழ்ந்து வந்தனன். அம்முறையில் அவனுக்கு என்னைவிட்டுப் பிரிய மனமிசைந் திலது. ஆதலின், எனக்குப் பரிசில்தர அவன் நீட்டித்தனன். நாட்கள் பலகடந்த பிறகு யான் வேறிடஞ்செல்ல விழைவதைப் பாரிக்குத் தெரிவித்தேன். உண்மையில் இஃது அப்பெரியானுக்கு விருப்பமில்லை என்றே கூறவேண்டும். ஆயினும், என்னை மறுக்க இயலாது அவன் பொன்கலன்கள் சிலவற்றைத்தந்து என்னைப்போக விடுத்ததுபோன்று விடையளித்தனன். பின்பு காவலர் சிலரை அனுப்பி, அக்கலன்களைப் பறிக்கச் செய்தனன். அதன் உண்மையறியாத யான் அச்சீரியனிடம் சென்று முறையிட்டபோது, அவன் முகம் சுளித்தலையும், களித்தலையும் கொண்டது. ஆனால், அதன் நுட்பம் அவ்வமயம் எனக்குப் புலனாகிலது. நூல் ஆராய்ச்சியிலேயே எங்களுக்குப் பின்னும் சிலநாட்கள் சென்றன. அதன்பிறகு, முன்னினும் பன்மடங்கு பொன்னீந்து, அவன் என் னைப் போகவிடுத்தனன்.

இன்னொருகால் யான் பழயனூர்க் காரி பால் பரிசில்பெறச் சென்றேன். களையெடுக்கும் இடத்தில் நின்றிருந்த அவனுக்கு என் செல்கை பெரிதும் மகிழ்வையூட்டியது. என்னை உடனே போகவிட மனமிசையா அவன், "இக்களையைக் களைந்து பின்பு செல்லலாம்" எனக் களைக்கோலை என்கையிற்றந்தனன். அங்குக் கிளைத்திருந்த களையை எடுக்க அநேக நாட்கள் வேண்டியிருந்தன. அந்நாட்களில் அவன் என்மாட்டுப் பாராட்டிய அன்பை அளந்துகூற இயலாது.

இன்னொருகால் சேரமான் அரண்மனையில் விருந்து ஒன்று நடந்தது. அதில் மற்றவருடன் இருந்து உண்ண யானும் உட்கார்ந்த னன். பின்பு புதியனாக வந்த ஒருவனுக்கு உண்ண எங்கும் இடங்கிடைத் திலது. யாரை அவணிருந்து எழுப்புவது எனச் சேரமான் சிறிது சிந்தித்தான். பந்தியிலிருந்து எழுப்பக்கூடிய உரிமையும், அன்பும் உடையார் என்னையன்றி அவனுக்கு வேறொருவரும் அங்குக் கிடைத் திலர். ஆதலின் என்னை நோக்கிப் பணிவுடன் 'இவண் வாராய்', என அவன் விளித்தனன். அங்ஙனமே செய்த யான் பின்பு அவ னுடன் இருந்து உண்டுமகிழ்ந்தேன். இம்மூன்று செய்கைகளும் அன்பி னடியாகவே நிகழ்ந்தன. ஆயினும், சமயம்நோக்கி நீ அன்புடன் ஈந்த இச்சிற்றுடைக்கு இவற்றைத் தனித்தனியே ஒப்பிடுதல் ஒருநாளும் பொருந்தாது. காலத்தில் செய்த உதவி ஞாலத்தைக்காட்டிலும் பெரி தன்றோ! துலாக்கோலின் ஒருதட்டில் உன் அன்பையும் மற்றொருதட் டில் அம்மூவர் அன்பையும்வைத்துத் தூக்கின் ஒருவாறு ஒப்பலாம், எனக்கூறினர். இக்கருத்தமைத்து,

" பாரி பறித்த கலனும் பழையனூர்க்
காரியன் றீந்த களைக்கோலுஞ்—சேரமான்
வாராயென வுரைத்த வாய்மொழியு மிம்மூன்றும்
நீலச்சிற் றுடைக்கு நேர். "

என்னும் பாடலையும் பாடினர்.

---

# 7. * ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு

டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். ஏ., பிஎச். டி;

"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே நம்மில், ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வே" என முழங்கினர் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார். "ஒற்றுமையாக உழைத்திடுவோம், நாட்டில் உற்ற துணைவராய் வாழ்ந்திடுவோம்" என்றார் கவிமணி தேசிகவிநாயகம். இறக்கும் தருவாயில் இருந்த ஒரு முதியவர் தம் பிள்ளைகளை அழைத்து, விறகை ஒவ்வொன்றாகக் கொடுத்தும், கட்டாகக் கொடுத்தும் ஒடிக்குமாறு பணித்தார் என்றும், ஒன்றினை ஒடித்த பிள்ளைகள் கட்டினை முறிக்கக்கூடாத காரணத்தை வைத்து, அவர்களுக்கு ஒற்றுமையுபதேசம் செய்தார் என்றும் சொல்லப்படுகிற கதை நம்மில் பலர் அறிந்ததே. திருவள்ளுவரும் ஒற்றுமையின் அருமையை ஓர் உதாரண முகத்தான் விளக்கியுள்ளார். ஒரு பெரிய வண்டி இருக்கிறது. அது வலிமை மிக்கதே. எனினும், மயிற்றோகையை நிரம்ப நிரம்ப, வாரி வாரிப் போட்டுக்கொண்டே யிருந்தால், அவ்வண்டியும் தாங்காது அச்சு ஒடியும். தோகையோ மிகவும் நொய்மையானது. வண்டியின் அச்சோ மிகவும் வலிமையுடையதாய் உள்ளது. எனினும், மேலும் மேலும் திரண்டு கூடித் தோகைகள் வருவதால் அச்சு இற்றுப் போகிறது. அதைப்போலவே, எத்துணை எளியராயினும், நமது பகைவர் சேர்ந்து சேர்ந்து கூட்டமாக வருவாரேயாயின், நமது வலிமை பெரியதாயினும் பயனின்றிப்போம். நாமே ஒற்றுமை மிக்குப் பலரையும் நம்மோடு சேர்த்துக்கொள்ளுவோமாயின், வரும் பயன் மிகப் பெரிதன்றோ? இவற்றையெல்லாம் உணர்த்த எடுத்துக்கொண்ட வள்ளுவப் பெருந்தகையார், "பீலிபெய் சாகாடும் அச்சிறும், அப்பண்டம் சால மிகுத்துப் பெயின்" என்று வழங்கியருளினர்.

நம் சுற்றத்தாரேயன்றி நமது ஏவல் செய்வோர்தாமும் நம்மோடு இயைந்தவராய் இருத்தல் வேண்டும். நாமொன்று கருத, நம் வேலைக்காரர் பிறிதொன்று நினைத்துச் செய்து நமக்கு எள்ளல் வாங்கித் தருவாராயின், அவ் வேலைக்காரரால் நமக்கு உதவியுண்டாவதற்கு மாறாகப் பல சங்கடங்கள் வந்து சேரும். சங்கடங்கள் ஏற்படின், கவலை யுண்டாவது உறுதி.

---

* திரு. செட்டியார் அவர்களது இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

கவலையேற்பட்டாலோ, கரு மயிர் நரைத்தல் ஒருதலை. எனவே, நம்மோடு ஒற்றுமைப்பட்ட வேலையாட்கள் இல்லையேல், நாம் விரைவில் மூப்பு உற்றவர் போன்று தோன்றுவோம். இதன் உண்மை, பழந்தமிழ்ப் பாடல் ஒன்றானும் அறியப்படுகிறது. முன்னாளில் பிசிராந்தையார் என்னும் ஒரு புலவர் இருந்தார். அவருக்கு வயது பல ஆகியும் நரை தோன்றவில்லை. சில புலவர், அவரை ஒரு நாள் அதற்குக் காரணம் கேட்டனர். அவர் சொல்லிய காரணங்களுள் ஒன்று, 'யான் கண்டனையர் என் இளையரும்' என்பது. அதன் கருத்து, 'நான் நினைக்கிறபடியே நினைத்து என்னுடைய ஏவல் செய்வோரும் என்னோடு இயைந்து செயல்களைப் புரிகின்றனர். என் இல்லத்தில் சண்டைத் தொல்லைகள் இல்லை' என்பதாகும்.

இனி, குடும்பத்தாரிடையே பூசலுங் கலாமும் விளையக்கூடிய வேளைகளில், புலவர்கள் சிலர் ஒற்றுமையுரை நல்கித் தடுத்துள்ளனர் என்று அறிகிறோம். நலங்கிள்ளி என்னும் சோழனும் நெடுங்கிள்ளி என்னும் சோழனும் தாயத்தார்கள். அவருள் நலங்கிள்ளி மிக்க வீரம் வாய்ந்தவன்; சேர, பாண்டிய அரசரை வென்று, அவர் தம் வஞ்சியென்னும் ஊரையும், மதுரை யென்னும் ஊரையும் புலவர்க்கு வழங்கத் தக்க ஆற்றலுடையவன். அவன் ஒரு நாள் உறையூரை முற்றுகையிட்டான். உள்ளே பங்காளியாகிய நெடுங்கிள்ளி இருந்தான். பார்த்தார் ஒரு புலவர்; 'அழகிது' என நினைத்தார். நலங்கிள்ளியிடம், 'ஒன்றுபட்டால் வாழ்வுண்டு; இன்றேல், இருவர்க்கும் தாழ்வே' என்று கூறினர். இக்கருத்துப் பொதிந்த பாடல் புறநானூற்றிற் காணப்படுகிறது. அதன் போக்கு, "அரச! நீ பொர நினைகரும் அரசன் சேரனும் அல்லன்; பாண்டியனும் அல்லன்; சோழனே ஆவன். நீயும் சோழன்; அவனுஞ் சோழன்; நீயும் ஆத்திமாலை சூடியிருக்கிறாய்; அவனும் ஆத்திமாலை சூடியிருக்கிறான். அஃது ஒன்றே நீங்கள் இருவீரும் ஒரு குடிப் பிறந்தீர் என்பதைக் காட்டுமே! நும் இருவருள் எவர் தோற்றாலும், தோற்பது நும் குடியன்றோ? அவ்வசை வரலாமா? நீங்கள் இருவீரும் வெற்றி கொள்ள முடியாது என்பது வெளிப்படை. உமது குடிக்கு வரும் பழியை நீக்கவேண்டுமானால் இம்மாறுபாட்டை உடனே தவிர்க்கவேண்டாவோ? நீவிர் பொருவீரானல், உம் பகைவரெல்லாம் உடம்பு பூரித்து உவகை எய்துவர். அவர் உவகை நுமது இளிவரல் அன்றோ? நீர் போர் குறித்து நிற்பது நும் குடிக்கு ஏற்றதன்று," என்பதாகும்.

நலங்கிள்ளி, 'குடிக்கு வடு உண்டாகும்' என்று கேட்டவுடன் போர்க்கோலம் நீத்தான். நெடுங் கிள்ளியும் புலவர் மொழியைக் கேட்டு இகலை விட்டான். இங்ஙனம் ஒற்றுமைப்படுத்திய புலவரது பெயரை நாம் அறியவேண்டாவோ? வேண்டினும் அவர் பெயரை அறியோம், ஊரை அறிவோம். அவ்வூர்ப் பெயராலேயே அவர் இற்றை நாள்வரை அறியப்படுகிறார். அவரை மறவாது இருப்போமாக! **கோவூர் கிழார்** வாழ்க!

மற்றொரு புலவர், பாண்டியன் ஒருவனுக்கும் சோழன் ஒருவனுக்கும் ஓர் அறவுரை பகர்ந்துள்ளார். அவர் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்

கண்ணனார் எனப்படுவர். வெள்ளியம் பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்னும் அப்பாண்டியனையும், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவன் என்னும் அச்சோழனையும் ஒரு நாள் ஒருசேரக் கண்ட அப்புல வர்க்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. உடனே அவர் பாடத் தொடங்கிவிட்டார். "பால்நிறக் கடவுளும், நீலநிறக் கடவுளும் உட னிருப்பதுபோல் உள்ள நீவிர் இருவீரும் இயைந்திருப்பது இனிது. அண்ணனும் தம்பியுமாகிய பலராமனும் கண்ணபிரானும் ஒருங்கு இருப்பது போன்று உள்ளது உமது தோற்றம். இதனினுஞ் சிறந்த காட்சி பிறி தொன்று உண்டோ? நீங்கள் இருவீரும் ஒருவீர் ஒருவீர்க்கு உதவி புரிவீராகுக! நீவிர் இங்ஙனே ஒன்றுபட்டிருப்பின், கடல் சூழ்ந்த பேருலகு நும் கையகப்படுவது மெய்யேயாகும். இப்படி நீவிர் அன்பினால் இயைந் துள்ளதைக் காணும் சிலர் பொறாமை கொண்டு, நல்லன சொல்லுவார் போல் சில சொல் சொல்லி நும்மைப் பிரிக்கப் பார்ப்பர். நான் வேண்டுவ தெல்லாம், இன்று போலவே என்றும் இருங்கள் என்பது. இருப்பீராயின், வெற்றியெல்லாம் நும் இருவர்க்கேயாம்; நுங்கள் கொடிகளே பிற நாடுகள் எங்கும் துலங்கும். பிரியன்மின், பிரியன்மின்." என்பது அவர் பாட்டின் கருத்து

மற்றுமோர் புலவர், சினந்த தந்தையை எதிர்த்த மக்களோடு ஒன்று படுத்தி வைத்தார் என்றும் அறிகிறோம். அப்புலவர் பெயர் **எயிற்றியனார்** என்பது; ஊர் புல்லாற்றூர். கோப்பெருஞ் சோழன் என்னும் அரசன், உறையூரை ஆண்டுவரும் நாளில், ஒருநாள் அவனுடைய புதல்வர் இருவர் அவனோடு மாறுகொண்டனர். எதிர்த்து நின்ற அவரொடு பொரக் கருதி எழுந்தான் சோழ மன்னன். அப்பொழுது அங்கேயிருந்த பைந்தமிழ்ப் புலவர், "விறல் கெழுவேந்தே!" என்று விளித்தவுடன், செவி சாய்த்து நின்றான் நிருபன். புலவர் உடனே தமது பொருளுரையைப் புகலத் தொடங்கினார். அதன் சாரம், "பற்பல அமருள் வென்று மேம்பட்ட வேந்தே! இப்பொழுது உன்னோடு எதிர்த்து வந்து நிற்போர் உன் பகைஞர் அல்லரே. நீயும் அவர்க்குப் பகைஞன் அல்லை. பகை ஞரைக் கொல்லும் களிற்றையுடைய தலைவ! நீ புகழை இவ்வுலகில் எய்தி, உயர்ந்த உலகை அடைந்த பிறகு, உன் புதல்வர்க்குத் தானே உன் அரசு உரித்தாகும்! இதனை நீயே அறிவையே!" என்பது ஆகும்.

இப்பொருளுரையைக் கேட்டும், அரசன் ஓர் அடி எடுத்து வைப்பது தோன்றிற்று புலவருக்கு. "இன்னும் கேட்பாயாக, இசையில் விருப்ப முடையோய்! பெரிதும் கேட்பாயாக! புகழில் இச்சையுடையோய்!" என்பனபோன்ற மொழிகளைச் சமயமறிந்து சொல்லி, அவர் மேலும் சொல்லலுற்றார். "புதல்வர் ஆலோசனை யின்றி, அறிவு குன்றி எதிர்ப் பட்டுள்ளனர். தோற்றுப்போனால் உன் செல்வத்தைப் பின்னர் அவருக்கு அல்லாமல் வேறு எவருக்குக் கொடுக்கப் போகிறாய்? போரினை விரும்பு கின்ற செல்வ! ஒருகால் நீ அவர்க்குத் தோற்றால், உன் பகைவரெல்லாம் உன்னை இகழ்ந்து மகிழ்வர். உலகில் பழியையே வைத்துச் செல்லவேண்டி யிருக்கும். நான் உன் ஆற்றலில் ஐயமுள்ளேன் என்பதன்று. அவ்

வாற்றலை இவரிடம் காட்ட வேண்டா என்பதே எனது வேண்டுகோள். உன்னுடைய வீரம உன்னைவிட்டு இப்பொழுது நீங்கி யிருக்கட்டும். உன்னுடைய ஊக்கம் பிறவற்றிற் செல்லட்டும். நல்வினைகள் பல செய்வா யாக. வாழிய அரசே!'' என்று நயம்பட உரைக்கப்பட்ட இவ்வுரையையும மறுத்துப் புதல்வரொடு பொருவதற்கு அரசன் மனம் இயைந்திருக் குமோ? புலவர் உரைக்குங் காலே, வேம்பும் கரும்பும் போல இடை யிடையே கடுஞ் சொல்லும் புகழ் மொழியும் பெய்து உரைத்த நயம் வியக்கற்பாற்று. அவர் அழைக்கும்போதே, அவன் பெருமையையும், வீரத்தையும், வென்றியையும் உரைத்து அழைத்தார்; இடையிடை அவன் ஆற்றலின் சிறப்பைக் குறிக்கும் சொற்களைக் கூறினர்; "உனக்குத் தெரியாத தன்று'' என்று சொன்னர்; புகழ் விருப்பம் உள்ள அவன், பழி தரும் செயல் புரியலாகாது என்பதை வற்புறுத்தினர்; புதல்வரை வெறுத் துரைப்பார் போன்று சில சொன்னர். இவை யெல்லாவற்றினும் மிக்கதாக, "அமரில் விருப்பமுள்ள செல்வ'' என்றும், "உன் வீரம் இப்பொழுது உன்னை விட்டு இருக்கட்டும்'' என்றும் அவர் மொழிந்த மொழிகளின் சிறப்பைக் கண்டு நாம் மகிழாதிருக்க முடியாது. ஓர் அரசன் முன் நின்று, "நீ உன் புதல்வர்க்குத் தோற்றால்'' என்ற கூற்றைக் கூறுவது எளிதன்று. அரசன் வெகுளாதிருக்கும் பொருட்டும், வெகுண்டு புதல்வரையே அழித்து விடாதிருக்கும் பொருட்டும், எழுச்சியைத் தடுக்கும் பொருட்டும் அன்றே அத் தண்டமிழ்ப் புலவர்

"அமர்வெஞ் செல்வ! நீ யவர்க்கு உலையின்
இகழுநர் உவப்பப் பழியெஞ் சுவையே;
அதனால், ஒழிகதில் அத்தைநின் மறனே''

என இருமருங்கும் கட்டியைக் கூட்டி, இடையே கடுக்காய்த் தூளை வைத் தார்! இங்ஙன மெல்லாம் நன் மருந்து தரவல்ல நாவலர் பலர் வாழ்ந்த நாடு நம் நாடு. அவர் தம் ஊர்பேர் உரைகளை மறந்துள்ள நாம் இனியாவது விழித்துக் காண்போமாக. அவர்தம் பொன்னுரைகளை யறிந்து வாழ்வம் ஒன்றுகவே!

---

# 8.* வித்துவான் அழகிய சொக்கநாத பிள்ளை

## (கரந்தைக் கட்டுரை)

இராவ்சாஹிப். வெ. பெ. சுப்பிரமணிய முதலியார்

**பிறப்பும் கல்வியும்.** அழகிய சொக்கநாத பிள்ளை, திருநெல்வேலிக்கு அடுத்து வடக்கேயுள்ள தச்சநல்லூரிலே, சுத்த சைவ வேளாள மரபிலே, வன்னியப்பிள்ளை குமாரராக, ஏறக்குறையத் தொண்ணூறு வருடங்களுக்கு முன்னே பிறந்தவர். இவர் தந்தையார்

* கரந்தைக் கட்டுரை உரிமையாளரின் இசைவுபெற்றது.

விநாயக உபாசகரென்பதும் இவர் அவரிடம் கல்வி பயின்றவரென்பதும் இவர் இயற்றிய காந்திமதியம்மை பிள்ளைத் தமிழில், குருவணக்கத்தில்,

கனிதரு பெருங்கருணை மருவுபதி னொருகரக்
கணபதியை யநவ ரதமுங்
கருதலிற் பெறுபய னனந்தத்து ளொன்றெனக்
கடையனேன் றனையு மகவென்
றினிதுபெற் றருமையின் வளர்த்துப் படிப்பித்
திகத்தொடு பரத்து மின்ப
மெய்த்தவரு ளுபதேச முதவுசற் குருவான
வெந்தை தாள் சிந்தை செய்வோம்

என வருவதனால் அறியலாம்.

**கணபதி வாத்தியார்.** அக்காலத்துத் தமிழ்ப் பள்ளிக்கூடத்து வாத்தியார்களுள்ளே சிறந்த கல்வி யறிவும் போதிக்குந் திறமையும் உடையவரும், தமது பள்ளிச் சிறுர்களுக்குக் கல்விப் பயிற்சியும் கடவுட் பத்தியும் நல்லொழுக்கமும் உண்டாகச் செய்தலில் அத்தியந்த சிரத்தையுடையவரும், தமது வாத்திமைத் தொழிற்றிறமையினால் பெருஞ்செல்வந் திரட்டியவருமாக இருந்த கணபதி வாத்தியார், இவருடைய சிறிய தந்தையார். ஏடெழுத்தாணி யிறந்தொழிந்த இக்காலத்தில் வழங்குகின்ற, பெரும்பாலும் பிழையற்ற அச்சுப் பாடப் புத்தகங்கள் ஏற்படாத அக்காலத்தில், ரகர, றகர, ழகர, ளகர பேதங்களறியாதாரெழுதிய ஓலைச் சுவடிகளைக் கொண்டு பிள்ளைகள் கல்வி கற்பது வழக்கமாயிருந்தது. அக்காலத்து வாத்தியார்களுள்ளே, யானறிந்தவரை கணபதி வாத்தியா ரொருவரே, இலக்கண இலக்கியப் பிழைகளெதுவுமில்லாமல், தாமேனும் தம்மிடம் கற்றுத் தேர்ந்த சட்டாம்பிள்ளைகளேனும் எழுதிய ஓலைச் சுவடிகளைக்கொண்டு பிள்ளைகளுக்குப் பாடஞ் சொல்லிக் கொடுப்பவராயிருந்தார். இவ்வாத்தியார் எனக்குப் பாலப் பருவக் கல்வி பயிற்றியவராவர்.

**முதற் பழக்கம்.** நவாபு அரசாங்கக் காலத்தில் சேனாதிபத்தியத்துடன் தென் சீமை யதிகாரத்தை இடையீடின்றிப் பல தலைமுறை வகித்துவந்த தளவாய் குடும்பத்தினராகவும், நல்ல கல்வியும் ஞான சாஸ்திரப் பயிற்சியும் உடையவராகவும், திருநெல்வேலியில் வாழ்ந்த தளவாய் இராமசுவாமி முதலியார் அரண்மனையில் முதல் முதலாக இவரை யான் பார்க்கும்படி வாய்த்தது. செந்நிற மேனியும் சிறிது நீண்ட வட்ட முகமும் சற்றுக் குறைய ஐந்தரையடி உயரமும் நடுத்தரமான உடற் பருமையு முடையவராகக் காணப்பட்டார். சி. வை. தாமோதரம் பிள்ளையின் தொல்காப்பியப் பதிப்புக்கு உதவியாக, மேற்கூறிய இராமசுவாமி தளவாயின் ஆணைப்படி, திருநெல்வேலிக் கவிராயர் வீட்டுத் தொல்காப்பிய

ஓலைச் சுவடியைப் பார்த்துக் காகிதத்தில் பிரதி யெழுதிக் கொண்டிருந்தார். இவரெதிரே, சிலர் இவர் முகத்தைப் பார்த்த வண்ணமா யிருந்தனர். இவர் பிரதி செய்துகொண்டும் இடையிடையே எதிரிருந்தார் கேள்விகளுக்கு விடை பகர்ந்துகொண்டு மிருந்தார். இவர் பேச்சு அவ்வவ்வமயத்துக் கேற்றதாகவும் சுவையாகவு மிருந்ததனுல், முதலில் நின்று கேட்டுக் கொண்டிருந்த யான், இருந்து கேட்கலானேன். அதுமுதல், இவர், காலை ஏழுமணிக்கு வந்து பிரதி செய்யும் வேலையிலமர்ந்து பத்துமணிக்கு வீட்டுக்குப் புறப்படும்வரை இவர் பேச்சைக் கேட்டு இன்புறுதற்கு வரும் பலரோடு யானும் கூட இருந்து வரலானேன். அன்றி, மாலையில் இவரில்லஞ் சென்று இவரோடு சல்லாபித்து இன்புற்று வந்தேன்.

**சைவக் கவிராயர்.** ஒரு நாள், செம்பொற்சிலை போன்ற சிவந்த மேனியராய், நீர்க் காவியேறிக் கஷாயம் போலச் சிவந்த தூய ஆடையும், பட்டை பட்டையாகத் தீட்டிய தூய வெண்ணீற்றுப் பூச்சும், குங்குமம் அப்பிய பெரிய சந்தனப் பொட்டும், அணிந்தவராய், இரத்தினமிழைத்துச் செவ்விய செதுக்கு வேலை தீர்ந்த பொற் கவசம் புனைந்த கவுரி சங்கர மென்ற இரட்டை யுருத்திராக்க நடு நாயகமும் தங்க வில்லைகளும் பொலியும் உருத்திராக்கக் கண்டிகை பூண்டவராய், பழுத்த சைவமே வடிவெடுத்தாற் போன்று பேட்டைக் கவிராயரெனப் பேர்பெற்ற ஒருவர், மேற்கூறிய தளவாய் அரண்மனைக்கு வந்தார். அவர், அங்கே யிருந்தோரால் வரவேற்கப்பட்டு இருக்கையில் அமர்ந்தனர். வரவேற்ருருள் ஒருவர் அவரை ஒரு பாட்டுக்குப் பொருள் வினவ, அவர், தாம் அப் பாட்டின் பொருளறியாமையை வெளியிடாமல், பொருள் கூறும் பாவனை புரிந்தார். அவர் புறப்பட்டுப் போனபின், அங்கிருந்தவர்கள், பாட்டுக் கருத்தை அவர் அறியாமையைப்பற்றிப் பலபல பகர்ந்து பரிகசிப்பாராயினர். அப்போது அவர் உள்ளபடி பொருள் கூருமல், பொருள் கூறியதுபோலக் காட்டிய பாவனை, திருவிளையாடற் புராணத்தில் 'கல்லாலின் கீழிருந்து என்ற கவியில் 'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி'ய பாவனையை ஞாபக மூட்ட, யான், 'அவர், இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டினுர்' என்றேன். எனவே, அன்றுவரை என்றும் என் முகம் நோக்கி யாதுங் கூருதவர் (அழகிய சொக்கநாத பிள்ளை,) என்னை ஏறிட்டுப் பார்த்துப் புன்னகை புரிந்து 'பொருத்தமா யிருக்கிறது' என்ருர். இதன் பின், அவர் கூறுபவைகளை அவரிடம் வருவாரெல்லாரினும் இளைஞனயிருந்த என்னை நோக்கியும் கூறுவார்.

**வறுமை.** இவர்: தாம் மேற்கொண்ட பிரதி எழுதும் வேலையைப் பகல் பத்துமணிக்குப் பின் செய்யாமைக்குக் காரணம், திருநெல்வேலி முன்சீபுக் கோர்ட்டில் இவர் பத்து ரூபாய் சம்பளமுள்ள எழுத்தாளர் வேலையிலமர்ந்திருந்ததாம். 'தங்கள் வருமானம் எவ்வளவு?' என்று வினவுவார்க்கு 'எனக்கு மாசம் பத்து வந்துகொண்டிருக்கிறது' என்று, மாசம் பத்து ரூபாயென்றும் மகா

சம்பத்து என்றும் ஒன்றுக்கொன்றெதிரிடையான இருபொருள்பட, வறுமையுடைமை செல்வமுடைமை போலத் தொனிக்க, விநோதமாக விடை கூறுவார்.

**குடும்பம்.** இவருக்கு மனைவியார் இருவர். முதல் மனைவி இறந்த பின், இரண்டாமுறை மணஞ் செய்தார் முதல் மனைவிக்கு ஒரு மகனும் ஒரு மகளும் பிறந்தார்கள். மகன் பெயர் நெல்லை நாயகம் பிள்ளை. அவர், பருவமடைந்த பின் இவரை விட்டுப் பிரிந்து போய்விட்டார். இவர் முதல் மனைவி, இறுதிக் காலத்தில் தீராத நோயுற்று நடக்கமாட்டாது நெடுங்காலம் படுக்கையிற் கிடந்து பிறர் உதவி யின்றி எதுவும் செய்ய இயலாதவளாயிருந்தாள். இவரே அவளுக்குச் செய்ய வேண்டுவன யாவற்றையும் குழந்தைக்குத் தாய் செய்வது போலச் செய்துவந்ததைப் பலமுறை யான் பார்த்து இவருடைய ஆழ்ந்த அன்புடைமையையும் கடமையுணர்ச்சியையும் தெரிந்து வியந்திருக்கின்றேன். தம் உத்தியோக வேலையுடன் நோயும் பாயுமாய்க் கிடந்த மனைவிக்கு வேண்டுவன யாவும் குறைவுபடாமல் செய்து 'வறுமையிற் செம்மை'க்கு மேற்கோளாக விளங்கிய இவர் பெருந்தகைமை பெரிதும் பாராட்டத் தக்கதாயிருந்தது.

**தாம் துன்புறுகையிலும் பிறர் இன்புறச் செய்தல்.** மேற்கூறிய கவலைகளோடு, இவர் தமது கவியொன்றிற் கூறுமாறு, 'பாழ்த்த வறுமையுங் கடனும் படுத்துகின்ற......துக்கம்' உடையவராயிருந்ததனைத் தெரிந்திருந்த யான் ஆச்சரியமடையும்படி, இவர், தம்மிடம் வந்தவர்க்குப் புன்னகை பூத்த இன்முகங் காட்டி, இனிமையும் விநோதமுமாகப் பேசி, இன்பமூட்டும் இயல்பின ராயிருந்தார். தாம் நோயுற்றுத் துன்புழந்து கொண்டிருந்த காலத்தும், சாகுஞ் சமயத்தும் கூடத், தம்மைக் காண வந்தோரைச் சந்தோஷ முகத்துடன் வரவேற்று, இன்சொற் கூறி இன்புறுத்தும் இயல்பினையிழந்தாரில்லை.

**சுருக்கெழுத்துச் சோதனை.** இவர் எழுத்தாளராயிருந்த முன்சிபு கோர்ட்டில், ஒரு குமாஸ்தா வேலையை வேண்டி, ஒருவன், முன்சீபிடம் விண்ணப்ப மெழுதிக் கொடுத்தான். அவர், அவன் வேலைத் திறமையைச் சோதிக்கக் கருதி, தம்மிடம் வந்திருந்த வேறொரு விண்ணப்பத்தை யெடுத்து, 'இதைச் சுருக்கி யெழுதிக்கொண்டு வா' என்று கொடுத்தார். அவன் அவரிடம் விண்ணப்பம் கொடுத்த விவரமும் அவர் தனக்குக் கொடுத்த உத்தரவு விவரமும் விரிவாக முன்னுரையாக எழுதித் தன்னிடம் சுருக்கி யெழுதக் கொடுத்த விண்ணப்பத்தைத் தனக்குத் தோன்றியவாறு பெயர்த்தெழுதியதைக் கொண்டுவந்து அவரிடம் கொடுத்தான். அவர் அதனை வாங்கிப் பார்த்து 'இது சுருக்கக் கொடுத்த விண்ணப்பத்தினும் பெருக்கமா யிருக்கிறதே. ஏன் இப்படி யெழுதினாய்?' என்று கேட்டபோது, பக்கத்தில் நின்ற அழகிய சொக்கநாத பிள்ளை, 'கோர்ட்டார் உத்தரவுப்படித்தானே செய்திருக்கிறார்' என,

முன்சிபு 'எப்படி' என, 'இவர் எழுதியிருப்பதனேடு ஒப்பிட்டால், சுருக்கக் கொடுத்த விண்ணப்பம் சுருக்கமாயிருப்பதனல் உத்தரவுப்படி அதைச் சுருக்கிவிட்டார்' என்ருர். முன்சிபு அவன் மதியீனத்துக்காக அவனை இகழ்ந்து இவர் சமத்காரத்துக்காக இவரைப் புகழ்ந்து அவனிடம் அருவருப்பும் இவரிடம் பெருவிருப்பும் உற்ருர்.

**பொடி வைத்து நகை செய்தல்.** இவர், ஒரு சமயத்தில், தம்முடனிருந்த இரண்டு நண்பருள் மற்ருெருவருடைய பொடிப்பட்டையை ஒளித்துவைத்துப் பட்டைக் குடையவர் தேடியபோது சிரிக்க, இவர் சிரித்தவரை நோக்கிப் 'பொடி வைத்துத்தான் நகை செய்ய வேண்டும்' என்று இரட்டுற மொழிந்து உண்மையை வெளிப்படுத்திக் களவு கொண்டவர் கொடுத்தவர் இருவரையும் உவப்பித்தார்.

**புலவர் கூடுமிடம்.** திருநெல்வேலியில் பல தலைமுறையாகக் கல்வியும் செல்வமும் ஒருங்கு நிரம்பி எந்தச் சபையிலும் அக்கிராசனமும் பிரதம தாம்பூலமும் பெற்றுவந்த கவிராச குடும்பத்தில் சேட்டராய், சிறந்த இலக்கண இலக்கியப் பயிற்சியும் இனிய கவி பயிற்றுந் திறமையும் சங்கித ஞானமும் உடையராய், கற்ருேர்க்கு உணவும் உறைவிடமும் உதவிவந்த, கவிராச நெல்லையப்ப பிள்ளை, தெற்குப்புதுத் தெருவில் தனித்தனியான பல கட்டிடங்களும் நடுவே கால்வாய் நீரோட்டமும் பின்னே பூந்தோட்டமும் உடைய வாசஸ்தலத்தில் வாழ்ந்து வந்தார். அப்பூந் தோட்டத்தில் கால்வாயருகே பூசை மடமும் மடைப்பள்ளியும் இவைகளுக்குச் சிறிது தூரமான இடத்திலே ஒரு சவுக்கையு மிருந்தன. இந்தச் சவுக்கை தமிழறியும் பெருமாளாய் வித்துவான்களுக்கு வேண்டும் பொருளுதவி புரிந்து ஆதரித்துவந்த வள்ளல் இராசவல்லிபுரம் முத்துசாமியா பிள்ளை நெடுங்காலம் வசித்த இடமாகவும், அவரைக் காணத் திருநெல்வேலி இராமநாதபுரம் மதுரையாகிய மூன்று ஜில்லாக்களிலு மிருந்து வந்த வித்துவான்கள், புலவர்கள், கவிராயர்கள் ஆகியவர்கள் கூடுமிடமாகவும் இருந்தது.

அக்காலத்தில் புலவர்கள் ஒவ்வொரு வருடமும் தம்மூர்விட்டுப் புறப்பட்டு, அங்கங்கேயுள்ள ஜமீன்தார்களையும், பிரபுக்களையும் கண்டு, அவரவர்மீது சிலசில கவிகள் புனைந்து வருஷாசன மென்னும் ஆண்டு நன்கொடையாகப் பெற்ற வருவாயைக்கொண்டு காலங்கழித்து வந்தனர். அவர்கள், சிலரோ பலரோ ஏறக்குறைய எக்காலத்தும் கூடித் தாம்தாம் முத்துசாமியா பிள்ளை மீது பாடிய பாட்டுக்களையும் நூல்களையும் படித்துப் பொருள் கூறுவதையும் ஒருவர் மற்ருெருவருடைய கவிகளின் குணங்களை இன்புற எடுத்துக் கூறுவதையும் முத்துசாமியா பிள்ளையுடன் கவிராச நெல்லையப்ப பிள்ளையும் அழகிய சொக்கநாத பிள்ளையும் யானும் கேட்டு

மகிழ்வதற்கும், அப்போதப்போது கூடிய வித்துவான்கள் பழைய புதிய பெருநூல் சிறுநூல்களைப் படித்து அவற்றின் நயங்களை எடுத்துக்கூறி இன்புறுதற்கும், அந்தச் சவுக்கை இடமாயிருந்தது.

**புலவர்கள்.** வேம்பத்தூர்ப் பிச்சுவையர், கல்போது புன்னை வனக் கவிராயர், முகவூர்க் கந்தசாமிக் கவிராயர், அவர் புதல்வர் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை * முகவூர் இராமசாமிக் கவிராயர், அவர் குமாரர்கள் அருணாசலக் கவிராயர், சுப்ரமணிய கவிராயர், சின்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார், முத்துவீருப் புலவர், ‡ கந்தசாமிப் புலவர், ‡ கந்தசாமிக் கவிராயர் ‡ திருநெல்வேலி முத்துப்புலவர் ஆகியோரும் வேறு சிலரும் முத்துசாமிப் பிள்ளையைக் காண வந்துகொண்டிருந்த வித்துவான் களாவர்.

---

## 9. $ மணிமேகலையும் மதுவிலக்கும் (தமிழ் விருந்து)

ரா. பி. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல்;

இயற்கை வளம் நிறைந்த தமிழ்நாட்டில் பனையும் தென்னையும் பல்லாயிரம் உண்டு. பாண்டிநாடு தொன்றுதொட்டுப் பனைவளம் படைத்த தாகும். சோழநாட்டிலும் சேரநாட்டிலும் தென்னைச் செல்வம் சிறந்து விளங்குகின்றது. தென்னையிலும் பனையிலும் ஊறுகின்ற மது ஆறாகப் பாய்வதற்குப் போதியதாகும். ஆயினும் தென்னாட்டிற் பிறந்த சமயங்களும் புகுந்த சமயங்களும் மதுவிலக்குப் பிரசாரம் செய்தன. சைவமும் வைண வமும், பௌத்தமும் சமணமும், மகம்மதியமும் கிறிஸ்தவமும் மதுபானத் தைக் கடிந்தன. மற்றைய கொள்கைகளில் பிணக்கமுற்ற இப்பெருஞ் சமயங்கள் மதுவிலக்குக் கொள்கையில் இணக்கமுற்றுப் பணி செய்த பான்மையாலேயே தமிழ்நாட்டில் மதுபானம் மட்டுப்படுவதாயிற்று.

தமிழ் மொழியில் இறவாத பெருநூல்கள் இயற்றிய பேறறிவாளரும் தம் கவிகளின் வாயிலாக மதுவிலக்குப் பிரசாரம் செய்துள்ளார்கள். தமிழ் மறையென்று தமிழ் நாட்டார் போற்றும் திருக்குறள், மனித சமுதாயத் துக்குக் கேடு விளைக்கும் மூன்று தீமைகளை மிக அழுத்தமாகக் கண்டிக் கின்றது. விபசாரம், மதுபானம், சூதாட்டம், இம்மூன்றும் செல்வத்தைச் சிதைத்துச் சீர்மையை அழிக்கும் என்று அந்நூல் கூறுகின்றது.

"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு"

என்பது வள்ளுவர் வாய்மொழி.

---

* எட்டயாபுரம் ஸமஸ்தான வித்துவான்.

‡ ஊற்றுமலை ஸமஸ்தான வித்துவான்கள்.

$ திரு. பிள்ளையவர்களின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

சமண முனிவராகிய பவணந்தியார் நன்னூல் என்னும் இலக்கண நூலின் வாயிலாக மதுவிலக்குப் பிரசாரம் செய்கின்றார். கள்ளுண்பவர் கல்வியறிவைப் பெறுதற்கு உரியரல்லர் என்பது அவர் கொள்கை. 'களிமடி மானி காமி கள்வன்' முதலியவர்கள் கல்வி பெறுதற்குரியராகார் என்று ஆசிரியர் கட்டுரைக்கின்றார். கள்ளுண்பவன் 'களி' யெனப்படுவான். மாணவராதற்குத் தகுதியற்றவர்களில் முதல் வரிசையில் முதலாகக் கள்ளுண்பவனை வைத்தமையால் மதுவிலக்குப் பிரசாரத்தில் நன்னூலார்க்கு எவ்வளவு ஆர்வம் இருந்தது என்பது நன்கு விளங்குகின்றதன்றோ?

பௌத்த சமயத்தைச் சார்ந்த நூல் மணிமேகலை. அந்நூல் ஐந்து சிறந்த கொள்கைகளைப் பஞ்ச சீலம் எனப் பாராட்டுகின்றது. பஞ்ச சீலம் வாய்ந்தோரே சிறந்தோர் ஆவர். கள்ளுண்ணாமை, பொய்யுரையாமை, கொலை செய்யாமை, களவு செய்யாமை, விபசாரம் செய்யாமை ஆகிய ஐந்தும் பஞ்சசீலம் எனப்படும்.

இனி மணிமேகலையில் அமைந்த மதுவிலக்குப் பிரசாரத்தைப் பார்ப்போம். சோழநாட்டின் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்தில் ஆடல், பாடல், அழகு என்னும் மூன்று நலங்களும் ஒருங்கே வாய்ந்து, கோவலனைக் காதலனாகப்பெற்ற மாதவியின் மகளாய் மணிமேகலை தோன்றினாள். கோவலன் தன் குலதெய்வத்தின் பெயரைத் தன் காதல் மகளுக்கு இட்டு மகிழ்ந்தான். மதுரையில் கோவலன் கொலையுண்டு இறந்த கொடுமையை அறிந்த மாதவி துறவறத்தை மேற்கொண்டாள். அவளோடு பருவ மங்கையாகிய மணிமேகலையும் தன் கருங்குழல் களைந்து துறவற நெறியிற் சேர்ந்தாள். இருவரும் அறவணவடிகள் என்னும் பெரியவரிடம் ஞானோபதேசம் பெற்றார்கள். மணிமேகலை தனக்கென வாழாது, சமுதாயத்தின் நலத்திற்காகத் தன்னலத்தைத் தியாகம் செய்த தவநங்கை. சமுதாயத்தை அலைத்துக் குலைத்து அழிக்கும் நோய் பசி நோயேயாதலால் அந் நோயை நீக்கும் முயற்சியை மேற்கொண்டாள். அவள் கையில் அமுத சுரபி என்னும் திருவோடு வந்து சேர்ந்தது. அத் திருவோட்டில் முதன் முதல் கற்புடைய மங்கை தன்கையால் அன்னமிட்டால் அவ்வன்னம் அள்ள அள்ளக் குறையாமல் வளரும் என்று மணிமேகலை அறிந்தாள்.

காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்த ஆதிரை என்னும் நல்லாளை கற்பின் செல்வி என்று எல்லோரும் எடுத்துரைத்தார்கள். அவள், கணவனை தெய்வம் என்று கருதி வாழ்ந்த கற்புடையாள். திருவாதிரை நாளில் பிறந்தமையால் அப்பெயர் பெற்றாள் போலும்! அம்மங்கையின் மனைமுற்றத்திற் போந்து, மணிமேகலை திருவோடேந்திப் புனையா ஓவியம் போல நின்றாள். ஆதிரை அன்போடு அன்னமெடுத்து வந்து மணிமேகலையை வலம் வந்து தொழுது "பாரெங்கும் பசிப்பிணி ஒழிக" எனத் திருவோட்டை வாழ்த்தி அதன் சுரை நிறைய அன்னமிட்டாள். இங்ஙனம் பசியைச் சமித்த பாவையின் திறத்தினை,

"பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென
ஆதிரை இட்டனள் ஆருயிர் மருந்து"

என்று மணிமேகலை போற்றுகின்றது.

பசிப்பிணியென்னும் பாவியை இப்பாரினின்றும் ஒழிக்க முயன்றாள் ஆதிரை; அவள் கணவனாகிய சாதுவன் மது என்னும் அரக்கனை இம்மா நிலத்தினின்றும் அகற்ற முயன்றான். ஒருநாள் அவன் கப்பலேறி வங்க நாட்டுக்குப் புறப்பட்டான். நடுக்கடலில் கப்பல் செல்லும்போது ஒரு சுழல் காற்று எழுந்தது. மரக்கலம் சின்ன பின்னமாகச் சிதைந்து தாழ்ந்தது. கருங்கடலில் மிதந்த சாதுவன் கையில் ஒரு பாய்மரம் அகப் பட்டது. சிலநாள் இரவு பகலாக அலைகளால் மொத்துண்டு அலைந்த அம்மரம் ஒரு தீவிலே அவனைக்கொண்டு சேர்த்தது. அங்கே நாகர் என்னும் வகுப்பார் வாழ்ந்து வந்தார்கள். விலங்குகளுக்கும் அவர்களுக்கும் வேற்றுமை இல்லை. தம்முள் ஒருவனைத் தலைவனாகவும் குருவாகவும் அவர்கள் கொண்டிருந்தார்கள். அவன் ஆண் கரடி போன்றவன். அவன் மனையாள் பெண் கரடி போன்றவள். கரையிலே ஒதுக்கப்பட்ட சாது வனைச் சில நாகர் கண்டார்கள்; நரமாமிசம் கிடைத்ததென்று நாக்கு ஊறினார்கள்; தம் குருநாதனிடம் அவனைக் கொண்டு சென்றார்கள். பசியால் மெலிந்து குளிரால் நலிந்த சாதுவனைக் குருநாதன் கூர்ந்து நோக்கினான்; "நீ யார்! இங்கு நீ வந்த காரணம் என்னை" என்று நாக நாட்டு மொழி யிலே வினவினான்.

அம்மொழியை அறிந்திருந்த சாதுவன் கருங்கடலில் நேர்ந்த துன்பத்தை உருக்கமாக எடுத்துரைத்தான். அந் நிலையில் குருநாதன் உள்ளத்தில் இரக்கம் பிறந்தது. அருந்துயருற்ற நம்பிக்கு நாட்பட்ட கள்ளும் நல்ல ஊனும் கொடுக்கும்படி அருகே நின்ற நாகரைப் பணித்தான். அவ்வுரை கேட்ட சாதுவன் திடுக்கிட்டான். இருகையாலும் செவியைப் பொத்திக்கொண்டு, 'ஐயனே! கள்ளும் ஊனும் வேண்டேன்' என்று உறுதியாக உரைத்தான். அவ்வுரை கேட்ட குருநாதன் வியப்படைந்தான். 'கள் என்ற சொல்லைக் கேட்டபொழுது துள்ளி மகிழாத உள்ளமும் உண்டோ! நாவுக்கினிய ஊனையும், கவலையை ஒழிக்கும் கள்ளையும் விலக்க லாமோ' என்று வெகுண்டு வினவினான். அதுகேட்ட சாதுவன் மதுபானத் தின் தீமையைக் குருநாதன் மனங்கொள்ள உணர்த்தலுற்றான். "ஐயனே! மானிடப் பிறவியில் நாம் அடைந்துள்ள செல்வங்களுள் எல்லாம் சிறந்தது அறிவுச் செல்வமே ஆகும். அவ்வறிவாலேயே நன்மை தீமைகள், குற்றங் குணங்கள் இவற்றைப் பகுத்து உணர்கின்றோம். இத்தகைய அறிவை வளர்க்கின்றவர்களே மேலோர்; அதனைக் கெடுக்கின்றவர் கீழோராவர். மதுபானம் நம் அறிவை மயக்குகின்றது; நாளடைவில் அதனைக் கெடுத்து விடுகின்றது. செய்யத்தக்கது இது, செய்யத் தகாதது இது என்று பகுத்தறியும் திறமையை இழந்துவிட்டால் மாலுமியில்லாத மரக்கலம் போல நமது வாழ்க்கை நெறி கெட்டொழியும். இதனாலேயே,

"மயக்குங் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
நல்லறம் செய்வோர் நல்லுல கடைதலும்
அல்லறம் செய்வோர் அருநர கடைதலும்
உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர்"

என்று சாதுவன் எடுத்துரைத்தான்.

உயிர்க்குறுதி பயக்கும் உண்மைகளைச் சாதுவன் வாயிலாகக் கேட்ட நாகர் தலைவன் அவனடிகளில் வீழ்ந்து வணங்கினன்; அதுவரை கடலிற் கவிழ்ந்த மரக்கலங்களிலிருந்து கைப்பற்றிய அரும் பெரும் பொருள்களை அவனுக்குக் கையுறையாகக் கொடுத்தான்; வங்க நாட்டினின்றும் அங்கு வந்தடைந்த வாணிகக் கப்பலில் அவனை ஏற்றி அனுப்பினன்.

ஆகவே மதுவிலக்குப் பிரசாரம் தமிழ்நாட்டில் புதிதாகத் தோன்றிய தொன்றன்று என்பது இக்கதையால் விளங்கும். செல்லுமிடந்தொறும் தமிழ் மக்கள் மதுவிலக்குப் பிரசாரம் செய்யும் கடமையை மேற்கொண்டிருந்தார்கள். நாட்டில் இருந்தாலும் நடுக் கடலிற் போந்தாலும் அப்பணியை ஒல்லும் வகையால் செல்லும் வாயெல்லாம் செய்து வந்தார்கள். நரமாமிசம் புசிக்கும் நாகர் நாட்டிலே ஒதுக்கப்பட்ட ஒரு தமிழ் வணிகன் அறவுரையால் அந்நாட்டு அரசனைத் திருத்தியருளினன் என்னும் தெள்ளிய வரலாறு நாம் போற்றுதற்குரிய தன்றோ?

---

## 10. * நாகரிகம். (கட்டுரை வரைவியல்)

வித்துவான், ஞா. தேவநேயப்பாவாணர், பி. ஓ. எல்;

நாகரிகம் என்னும் சொல் நகரகம் என்னும் சொல்லினின்று பிறந்தது. நகரகம் என்பது முறையே நகரிகம், நாகரிகம் எனத் திரிந்தது. ஆங்கிலத்திலும் நாகரிகம் பற்றிய வினை நகரப் பெயரினின்று பிறந்ததே. (Civilise from Civitas (Latin), city.)

நாகரிகம் என்னுஞ் சொல் நாகர் என்னும் பெயரினின்று பிறந்ததென்றும், நாகரென்பார் பண்டைக்காலத்தில் நாகரிகத்திற் சிறந்திருந்தனரென்றும், 'ஆயிரத்தெண்ணூறாண்டை முற்றமிழர்' (The Tamils 1800 Years Ago) என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளது. நாகர் என்பார் பண்டைக்காலத்தில் நாகநாடெனப்பட்ட கீழ்த்திசை நாடுகளில் வாழ்ந்துவந்த ஒரு மக்கள் வகுப்பார். நாகருடைய நாடு நாகநாடு. நாகரில் நாகரிகரும் அநாகரிகருமான இருவகுப்பார் இருந்துள்ளமையும், அவருள் நாகரிகரும் எவ்விதத்தும் தமிழரினும் உயர்ந்தவரல்லர் என்பதும் மணிமேகலையிலிருந்

* திரு. பாவாணரவர்களின் இசைவு பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

தழீப்படும். ஆதலால், நாகரிகம் என்னுஞ் சொல் நாகர் என்னும் பெய ரடிப் பிறந்ததன்று.

நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை எனப் பொருள்படும். திருந் திய வாழ்க்கை உலகத்தில் முதன்முதல் நகரத்தில் தோன்றினமையின் நாகரிகமெனப்பட்டது. இக்காலத்தும், நாகரிகமில்லாதானைப் பட்டிக் காட்டானென்றும், நாட்டுப்புறத்தானென்றும், பழித்தல் காண்க. நகர மல்லாதது, நாடும், பட்டியும்.

நாகரிகம் என்னுஞ் சொல்லைத் திருவள்ளுவர்,

"பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்னும் குறளில், கண்ணோட்டம் என்னும் பொருளில் வழங்கி யுள்ளார். இது பரிமேலழகர் உரையால் விளங்கும். கம்பரும் இச்சொல்லை இதே பொருளில் ஆண்டுள்ளார். கண்ணோட்டம் திருந்திய குணங்களில் ஒன்றாதலின் நாகரிகமெனப்பட்டதென்க.

அறிவும் அதன் வழிப்பட்ட ஒழுக்கமுஞ் சேர்ந்து திருந்திய வாழ்க் கையாகும். ஒழுக்கமின்றி அறிவுமட்டுமிருப்பின், அது நாகரிகமாகாது அநாகரிகத்தின்பாற்படுவதேயாகும். ஒழுக்கமில்லாத கற்றோன் கற்ற மூடன் என இழித்திடவேபடுவான். அறிவென்பது ஒழுக்கத்திற்குக் காரணமாகிய, இயற்கையும் செயற்கையுமாகிய இருவகையாயிருப்பது. இவற்றுள், இயற்கையாவது குடிப்பிறப்பாலும் தெய்வத்தாலும் அமைவது; செயற்கையாவது கல்வியாலும் நல்லினத்தாலும் உண்டாவது. ஒழுக்கமென்பது அகம் புறமென்னும் இருவகைத்தூய்மை. அவற் றுள், அகத்தூய்மையாவது மனம், வாய், மெய் என்னும் முக்கரணங்களும் தூயவாயிருத்தல்; புறத்தூய்மையாவது உடம்பு, உடை, உணவு, காற்று, உறையுள் முதலியன தூயவாயிருத்தல்.

பரிமேலழகர் திருக்குறளுரைப்பாயிரத்தில், ஒழுக்கத்தைப்பற்றி, "ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப் பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங் களின் வழுவாதொழுகுதல்" என்று கூறியுள்ளார். இஃது எல்லார்க்கும் பொதுவான உயர்தர வொழுக்கமன்று. இதை இவ்வுரையாசிரியரே மீண்டும், "இதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடை மையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளொழித்து, எல்லார்க்கு மொத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி, இல்லறந்துறவற

மென இருவகை நிலையாற் கூறப்பட்டது'' என்று நூலாசிரியர் கருத்திற் கேற்பக் குறித்துள்ளார். ஆதலால் ஒழுக்கமென்பது எல்லார்க்கும் பொது வான முக்கரணத் தூய்மையேயன்றிக் குலந்தோறும் வேறு பட்ட வருணாச்சிரமதருமன்று.

இல்லறத்தில் அகத்தூய்மையும் புறத்தூய்மையும் ஒரு நிகரவா யெண்ணப்படும்; துறவறத்தில், அகத்தூய்மை புறத்தூய்மையினும் பன் மடங்கு சிறந்ததாயெண்ணப்படும்.

ஒருவன் எத்துணை எளியவனாயிருப்பினும், தன்னையும் தன் பொருள்களையும், உள்ளும் புறம்பும் தூயவாய் வைத்துக்கொள்வதே நாக ரிகமாகும். கந்தையானாலும் கசக்கிக் கட்டுவதும், கூழானாலுங் குளித்துக் குடிப்பதும், குடிலானாலுங் கூட்டிக் குடியிருப்பதும் உயர்தர நாகரிகமே. அழகியனவும் விலையுயர்ந்தனவுமான உடைகளால் உடம்பைப் பொதிவதும், விலையும் சுவையுமிக்க உண்டிகளைப் பன்முறையுண்பதும், மேனிலையும் அக லிடமுமுள்ள மாளிகைகளில் வாழ்வதும், வசதியும் விலையுயர்ந்தனவுமான ஊர்திகளிற் செல்லுவதும், இயந்திரத்தாலும் ஏவலாளராலும் வினை செய் வதும், இன்னும் இவைபோன்ற பிறவும், அறிஞரும் அறிவிலிகளுமான செல்வர்க்கேயுரிய ஆடம்பர வாழ்க்கையன்றி நாகரிக வொழுக்கமாகா. இவற்றை நாகரிகமென்றெண்ணுவது மேலைப் புது நாகரிகம்பற்றிய திரி புணர்ச்சியாகும்.

மேலைக்கல்விகற்று மேனாட்டுடையணிபவரெல்லாம் நாகரிகத்திற் சிறந்தவரென்றெண்ணுவதும் அறியாமையே. கல்வி எம்மொழியினு மிருக்கலாம். உடை, தட்ப வெப்பநிலை பற்றித் தேசந்தோறும் வேறுபடுவ தாகும். நாகரிகத்திற்கு இன்றியமையாத வேளாண்மை (பிறரையுபசரித் தல்), விருந்தோம்பல், தாழ்மை முதலிய சிறந்த குணங்களை, மேலைநாகரிகமறி யாத நாட்டுமக்களிடையே மிகுதியாய்க் காண்கின்றோம்.

ஆகையால் நாகரிகமென்பது, செல்வர் வறிஞர் என்னும் இரு சாரார்க்கும் பொதுவான, துப்புரவும் ஒழுக்கமும் பற்றியதேயன்றி, செல் வர்க்கும் மேலையொழுக்கத்தார்க்குமே உரிய பொருள் அழகும் பெருஞ் செலவும் பற்றியதன்று.

திருந்திய உழவு, நுண்கைத்தொழில், நீர்வணிகம், போக்குவரவுக் குரிய வாயில் வசதி, ஓவிய உணர்ச்சி, மொழி வளர்ச்சி, கலைப்பெருக்கம், திருந்திய அரசு, குலப்பிரிவின்மை முதலியன நாகரிகத்தின் சிறந்த அடை யாளங்களாம்.

மக்களை மற்றவுயிர்களினின்றும் வேறுபடுத்திக் காட்டுவது நாக ரிகமேயாதலின், தம்மை உயர்திணையென்று கூறிக்கொள்வாரெல்லாம் நாகரிகமுடையராயிருத்தல் இன்றியமையாததாகும்.

---

# 11. * போராட்டம் (கலைமகள்)

இரா. சி. தேசிகன் எம். ஏ;

ஒரு நள்ளிரவில் இரண்டு சேனைத் தலைவர்கள் நிலவு தோய்ந்த விக்கிரமபுரத்துக் கோட்டைச் சுவர்மீது சிந்தனையில் ஆழ்ந்து நிற்கிறார்கள். "செருகளத்தில் நம்முடைய ரத்தம் சிந்தினாலென்ன? கொட்டினால் என்ன? அரசர் நம்மைக் கவனிக்கிறாரா? மார்த்தாண்டரே! கவிதை, கதை, ஓவியம், சிற்பம், ஆடல் பாடல் இன்னும் என்னென்ன கலைகளுண்டோ, கூத்துக்கள் உண்டோ எல்லாம் முழங்க ஆரம்பித்துவிட்டன நம் விக்கிரம புரத்தில். கலைக்கள்ளை மாந்திக் களிக்கிறார் வேந்தர். புதிய புதிய நறவைச் சிருஷ்டித்துத் தர ஒரு கவியும் அவருக்கு உயிர்த் தோழராக வந்துவிட்டார். தோள் வலிமைகொண்டு இந்த நாட்டிலே அமைதியை நாட்டினோம். அந்த அஸ்திவாரத்தின்மீது எழுந்திருக்கின்றன கலைகள். அந்த அஸ்திவாரத்தின் மூலத்தை மறந்துவிட்டார் அவர். அதை நினைக்கும் காலம் வந்துவிட்டது."

"ஆமாம் அது உண்மைதான், கருணாகரரே! கவி மதுர மிச்ரர் இங்கே வந்தது முதற்கொண்டு இராணுவ விஷயம் ஒன்று இருக்கிறது என்பதை அவர் முற்றும் மறந்துவிட்டார். புத்தகசாலைகளைப் பெருக்குவதிலும், ஓவியக்கூடங்களை அமைப்பதிலும், ஆடல் அரங்குகளை நிர்மாணம் செய்வதிலும், இசை மண்டபங்களைக் கவின்பெற எழுப்புவதிலும் அவர் பொழுது போகின்றது. கலைநுகர்ச்சி அதிகமானால், நம்முடைய ஜன சமூகத்தில் வீரக்கனல் அவிந்துவிடும் என்ற உண்மை நம் மன்னர் விஜயபாலருக்குத் தெரியவில்லையே!"

"தெரியவில்லையா? தெரிந்துதான் அவர் இப்படி நடக்கிறார். அவருடைய பேச்சும் விசித்திரமாய் இருக்கிறது. இதற்குக் காரணம் கவி மதுர மிச்ரரின் மாய உபதேசந்தான். ஒருநாள் சபையில் என்ன சொன்னார் தெரியுமா?"

"தெரியவில்லை. அந்தச் சமயம் வெளிநாட்டு அலுவல்களைக் கவனிக்க நான் மண்டலபுரம் சென்றிருந்தேன்."

"எங்களுடைய நாட்டின் வீரம், காதல், அழகு, கலை, எங்கள் குறிக்கோள், நாங்கள் போற்றும் உண்மைத் தியானம், தவம், தியாகம் முதலிய குணங்கள் எல்லாம் தங்களைப் போன்ற கவிகளின் கனவுகளிலிருந்து தோன்றியவை அல்லவா?" என்று மதுரமிச்ரரைப் பார்த்து நம் பூபதி கூறினர். மதுரமிச்ரர் அதை ஆமோதிப்பதைப் போலப் புன்முறுவல் செய்தார். நம்முடைய வீரமும் அவர் கற்பனை உலையிலிருந்து

---

* திரு. தேசிகன் அவர்களது இசைவு பெற்றுப் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

சிதறினதாம். நீங்கள் தாம் சொல்லுங்கள். இது பைத்தியத்தின் முதற் சின்னமா, இல்லையா?''

"அதைப்பற்றிச் சந்தேகப் படுகிறீர்களா?'' என்றார் மார்த்தாண்டர்.

"இந்த நள்ளிரவில் நமக்குத் தூக்கம் வரவில்லை; சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கிறோம். தாய் விழித்திருக்கத் தொட்டிற் குழந்தைபோல் நம் நாடு படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறது. இந்த அமைதியை, இந்த இன்பக் கனவைக் குலைக்கக் கோலாஹலன் தோன்றிவிட்டான். அநேக நாடுகள் மின்னற்பொழுதில் அவன் வலிக்கு இரையாகிவிட்டன. நம் நாட்டின் தலையில் என்ன எழுதியிருக்கிறதோ!''

"இதற்கு ஜாதகம் பார்க்க வேண்டுமா? கலைதான் நாட்டின் வீரத்தை மெல்ல மெல்ல அரித்துவிட்டதே. நாம் கண்ணீர்விட்டுக் காத்த நாடு கோலாஹலன் போர் முரசின் முழக்கத்திலேயே அதிர்ந்து விழுந்து சுக்கு நூறாய்விடும். பகைவன் படையின் கடல் இரைச்சல் தூரத்தில் கேட்கு முன்னே நம் அரசரின் உயிர்த் தோழர் மதுர மிச்ரர் நழுவி விடுவார். அதையும் நாம் பார்க்கப் போகிறோம். அப்பொழுதாவது நம்மை மன்னன் நினைப்பாரா?'' என்று மொழிந்தார் மார்த்தாண்டர்.

"நம் நிருபர் நம்மை நினைத்தால் நினைக்கட்டும், நினைக்காமற் போனால் போகட்டும். நாம் பணி செய்து கிடப்போம். ஆண்டவன் அருள் யாதோ? அறிந்திலோம்.''

"நம் தோள் வலிமையை முதலில் நோக்கி ஆண்டவன் அருள் ஒளியைப் பிறகு நாடுவோம்.''

* * * *

கோலாஹலனுடைய ஆஷாட நாட்டின் தலைநகரமான அம்பல புரியில் வெற்றி முழக்கம் சதா கேட்கிறது. தெருத் தெருவாய்ச் சென்று அவ்வூர் அரசனின் ஆற்றலைப்பற்றிப் பேசுகிறார்கள், அவன் புகழ் பரப்புவோர்கள்.

"முன் எப்படி இருந்தது ஆஷாட நாடு?'' என்று ஒருவர் ஆரம்பிப்பார்.

"அதைப் பற்றி உலகத்தாருக்குத் தெரியாதே; இருள் அடைந்து கிடந்தது.''

"இப்பொழுது?''

"இப்பொழுதா?'' மலைமேல் விளக்குப்போல அதன் பிரதாபம் எங்கும் தெரிகிறது. அதன் கொடி பறக்காத நாடு இல்லை.''

" இது யாருடைய ஆற்றலினுல்?"

" கோலாஹல வீர மார்த்தாண்ட பூபதியின் ஆற்றலால் தான்"

"மஹாராஜா கோலாஹல வீரமார்த்தாண்டருக்கு வெற்றி!" என்ற குரல் கடல் ஒலி போலக் கிளம்பி ஓயும்.

இந்த ஒலியின் மத்தியில் ஐயக் குரல் மெல்ல எழாமல் இல்லை.

"கோயில்களெல்லாம் குதிரைலாயங்களாக ஆகி விட்டனவே! இது அறமா?" என்று ஒருவர் வாய்புதைத்துக் கேட்பார்.

"தர்மம், தர்மம் என்று பார்த்து அதோகதி அடைந்து விட்டோம். நம்முடைய கண்களில் ஒளி உண்டா? நடையில் மிடுக்கு உண்டா? நம் பேச்சில் வீரம் உண்டா? பக்தி, பக்தி என்று சொல்லிச் சக்திபோய்விட்டதே! நம்மை மனிதராக்கித் தலைநிமிரச் செய்தாரே அரசர் கோலாஹலர். அவருக்கு நாம் நன்றி கூற வேண்டாமா?" என்று மற்ருருவர் பதில் அளிப்பார்.

"இது எத்தனை நாளைக்கு நிற்கும்? கலைகள் போய்விட்டன. கலாமண்டபங்கள் போர்க்கருவிகள் வைக்கும் பாவ பண்டாரங்களாய் மாறி விட்டன. புத்தகசாலைகளைக் கொளுத்திவிட்டாரே. வில்லும் வேலும் வாளுமா நீடித்த வெற்றியை அளிக்கும்?"

"வாளின் மகிமை இப்பொழுது விளங்கவில்லையா? எத்தனை நாடுகள் விழுந்துவிட்டன! விஷயம் உங்களுக்குத் தெரியவில்லையா? வாளுக்கும் வேலுக்குந்தான் கோயில். புத்தக வைக்கோல் மேய்ந்தது போதும்; புராணக் குப்பைகளைக் கிளறினது போதும்."

"ஏதோ, வெற்றி வெறியில் பேசுகின்றீர்கள். எனக்கு என்னவோ இதெல்லாம் ஒரு நாள் கூத்தாய் முடியும்போல இருக்கிறது."

"வாள் உதவியே வேண்டாம் என்கிறீர்களா?"

"வேண்டாம் என்று நான் சொல்லவில்லையே. வல்லரக்கரை வாளால் வீழ்த்துவதும் அன்பு எனக் கொள்ளும் விரதமுள்ளவன் நான். ஆனால் மண்ணாசையினுல் போர்க்களை உண்டு தீங்கிழையாத பிற நாடுகளைப் புடைப்பது உண்மை வீரர்க்கு அழகு அல்லவே என்றுதான் நான் சொல்லுகிறேன். விக்கிமபுரத்தின் மீது படையெடுத்து அதை ஜயித்துவிடலாமென்று நம் அரசர் கருதுகிறுர். கலை வளர்ச்சியில் அந்நாட்டு வீரம் மறைந்து விட்டது என்று நினைப்பது தவறு. கவி மதுரமிச்ரர் பாடிய வீரம் செறிந்த பாட்டு ஓர் இளந் தொண்டர் படையின் உள்ளத்தில் தியாகக் கனலை மூட்டிவிட்டது என்று தெரிய வருகிறது. கவிக்குக்கூட

இவ்விஷயம் தெரியுமோ, என்னவோ. ஆவேசத்தில் பொறி சிதறுகிறது அது எங்கேயோ விழுந்து கனிந்துகொண்டிருக்கிறது.''

"இது எப்படி உங்களுக்குத் தெரியவந்தது? நம் நாட்டிற்கும் எட்டியிருக்கிறதே.''

"அதைப்பற்றி என்னைக் கேளாதீர்கள். ஆனல் அவர் அருளிய பாட்டுக்கூட எனக்குத் தெரியும்.''

"அது என்ன?''

"அரக்கரை அழிப்பதே அன்பெனக் கொள்வீர்
இரக்கமு மஃதே இரக்கமு மஃதே
எழுவீர் எழுவீர் எழுபகை மாய்க்கவே.''

"என்ன பாட்டுப்பாடி என்ன? கோலாஹலன் படைக்குமுன் சூறைக்காற்றில் அகப்பட்ட பதரைப் போலப் பறக்கப்போகிறது பார் சேனை.''

"எனக்கு என்னவோ நம்பிக்கை இல்லை''

* * * *

விக்கிரமபுரத்து எல்லைப் புறத்தில் உள்ள ஒரு சோலைக்கருகே நிலாத் துயிலும் ஒரு முது மணற்குன்றின் மீது மதுரமிச்ரர் வீற்றிருக்கிறார். எண்ணங்களுக்குமேல் எண்ணங்கள் மோதி வருகின்றன.

'கோலாஹலனின் பராக்கிரமம் காட்டுத் தீயைப் போல எங்கும் பரவி வருகின்றதே; நம் நாட்டை அழித்து விடுமோ?' என்ற எண்ணம் வரும்.

'நாட்டின் உடல் அழிந்தால் என்ன? அதன் ஆத்மாவை அழிக்க முடியுமோ? ஒருவருக்கும் தெரியாமல் பூமிக்கு அடியில் ஒரு பெரிய கூடத்தை அமைத்து அதில் இந்நாட்டுக் கலைச் செல்வத்தை மறைத்து வைத்திருக்கிறேன். நாடு அழிந்தாலும் மேகப் படலத்தைக் கிழித்துவரும் வெய்யோன் விரிகதிரேபோல், புதைந்து கிடக்கும் கலைக் களஞ்சியத்தின் பெருமை எங்கும் ஒரு காலத்தில் பரவும்' என்ற இந்த எண்ணம் அந்த எண்ணத்தைத் துரத்தும்.

'போர் வந்தால் நான் இங்கே இந்த நாட்டில் தேசத் தொண்டில் மடிவதா? அல்லது இருபது வருஷகாலமாய் என் ரத்தத்தைப் பிழிந்து எழுதி வருகிற பெருங் காவியத்தை முடிக்க விந்திய பர்வதத்தை நோக்கிப்போவதா? அதுவும் ஒரு தொண்டுதானே? அதைப்பற்றி இப்

பொழுது யோசனை என்ன? அப்பொழுது உள் ஒளி தோன்றும்; உள் ஒலி ஒன்று கேட்கும். ஆண்டவன் கட்டளைப்படி நடப்பேன்.'

* * * *

கோலாஹலன் சபை கூட்டியிருக்கிறான். அமைச்சர்கள் அவனருகே தங்கள் தங்களுக்கு உரிய ஆசனங்களில் அமர்ந்திருக்கிறார்கள். கணத்திற்கொரு கணம் வெற்றிச் செய்தி வந்து கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு செய்தியும் ஒரு தனிக் களிப்பொளியை அவன் கண்களில் எழுப்புகிறது

"அவந்திபுரம் விழாது என்கிறீர்களே; இதோ பாருங்கள். விழுந்து விட்டது என்ற செய்தி வந்திருக்கிறது. விக்கிரமபுரத்துக்கு இறுதிக் கடிதம் அனுப்பினேன். அதற்கு இதுவரையில் பதில் வரவில்லை. நாளைத்தினம் போருக்குச் செல்லலாம் என்று நினைக்கிறேன்'' என்று சபையோர்களை நோக்குகிறான் அரசன்.

அந்தச் சபையில் ஒரு விருத்தர் எழுந்திருக்கிறார். "அரசே! கிடைத்த நாடுகளை நழுவ விடாமல் பாதுகாத்தோமானால் அதுவே போதும். விக்கிரமபுரத்தின் மீது படையெடுத்துச் சென்றால் யாதாகுமோ தெரிந்திலேன். அந்த நாட்டின் பலாபலத்தை அறியாமல் போரில் இறங்குவது தக்கதன்று. கலை வளர்ச்சியினால் அதன் வீரம் குன்றிப் போய்விட்டதென்று கருதாதீர்கள். கலைகளே உள்ளே துயின்று கொண்டிருக்கிற பெரிய சக்திகளைத் தட்டி எழுப்பிவிடலாம். ஓரிடத்தில் தோல்வியுற்றால் பிடிபட்ட நாடுகளில் அவிந்துபோனது போலக் காணப்படும் சிற்றத் தீ மறுபடியும் எழுந்துவிடும். ரத்தத்தை ஆறாகப் பெருகவிட்டுப் பிடித்த நாடுகள் எல்லாம் கையைவிட்டு அகன்றுவிடும்.''

கோலாஹலன் தீ எழ நோக்குகிறான்.

"விக்கிரமபுரத்து மன்னனுக்கு உட்கையாக இருக்கின்றீர்களா? அறிவில்லாத இந்தக் கிழவனைச் சிறையில் வையுங்கள்'' என்ற கட்டளை எழுகிறது.

'ராஜ சேவையில் தலை நரைத்துவிட்டது; பல் எல்லாம் உதிர்ந்துவிட்டன. அதற்குப் பரிசு சிறைதானா? நான் போகிறேன். சுதந்திர ஒளி எங்கே வீசுகிறது? நாட்டில் இல்லை. நாடுதான் ஒரு பெருஞ் சிறையாகிவிட்டதே! சிறையில் என் சிந்தையைச் சிறைசெய்ய முடியுமோ?' என்ற எண்ணங்கள் மனத்தில் குவிந்தெழ அந்தக் கிழவர் சபையைவிட்டு அகலுகிறார். அந்த அமைச்சர் வாய் கயப்புற வார்த்தைகளை வழங்கினால் என்ன? நீண்ட கரகோஷ மத்தியில் அரசனுடைய கருத்தே ஆமோதிக்கப்படுகிறது.

"போருக்கு நாளையே எழுவீர்'' என்று அரசன் கட்டளையிடுகிறான். விக்கிரமபுரத்தில் எங்கே பார்த்தாலும் ஒரே பரபரப்பு. மேல்விளைவு

யாதாகுமோ என்ற கவலையில் ஆழ்கின்றனர் நாட்டு மக்கள். ஆனால் வாலிபர் தொண்டர் படையில் உத்ஸாகம் நிமிர்ந்து நிற்கிறது.

விக்கிரமபுரத்து அரசன் தன் சேனைத் தலைவர்கள் கருணாகரன், மார்த்தாண்டர் இவர்களை அழைத்துப் போருக்கு வேண்டிய உபாயங்களைத் தேடுகிறான்.

"நம்முடைய கவி மதுரமிச்ரர் எங்கே? என்று அரசன் வினவுகிறான்.

"அப்பொழுது நாம் பேசிக்கொள்ளவில்லையா?" என்று மெதுவாகச் சொல்லுகிறார் கருணாகரர்.

"என்ன பேசிக்கொண்டிருந்தீர்கள்?"

"அதைச் சொல்ல அஞ்சுகின்றோம். தங்கள் மனம் நோகுமே என்ற எண்ணம் எங்களைத் தடுக்கிறது" என்று மார்த்தாண்டர் கூறுகிறார்.

"உள்ளதை மொழியுங்கள்."

"போருக்குப் பயந்து முதலில் ஓடுகிறவர் மதுரமிச்ரர் என்று எங்களுக்குள் பேசிக்கொண்டோம்."

"அப்படிப் பயந்து ஓடக்கூடியவரா அவர்?" என்ற எண்ணம் அரசன் மனத்தில் பாய்கிறது. "எங்கே போயிருப்பார்? புத்தகசாலைகளைக் காக்கிறவரை அழைத்து வாருங்கள்."

அவர் அங்கே வருகிறார்.

'மதுரமிச்ரரைப் பற்றி உமக்குத் தெரியுமா?"

"நேற்றிரவு புத்தகசாலைக்கு வந்து ஏதோ ஒன்றை எடுத்துச் சென்றார். காலையில் வரவில்லை."

'எங்கேயாவது ஓடிவிட்டாரா? அவர் ஒரு கோழையா? கோழை உள்ளத்திலிருந்து வீரமொழிகள் எழுமோ? ஏதோ ஒரு நோக்கத்தோடு தான் அவர் வெளியேறி யிருக்கவேண்டும்.' இதுமாதிரி அலைமோதி வருகின்ற எண்ண வெள்ளத்திற்கு அணைபோட்டு விட்டுச் சேனாதிபதிகளைப் பார்த்து "சேனைகளை அணிவகுத்து நில்லுங்கள்" என்று உத்தரவு இடுகிறான்.

"அரசே, அதற்குவேண்டிய எல்லாம் செய்தாகிவிட்டது" என்று சொல்லித் தலைவர்கள் செல்லுகிறார்கள்.

*          *          *          *

விந்திய சைலத்தை நோக்கி ஓர் உருவம் சென்றுகொண்டே இருக்கிறது.

"இந்த ஆபத்தான வேளையில் - இந்த நெருக்கடியான நேரத்தில் - என் நாட்டைவிட்டு ஓடி வருகிறேன். அதற்குத் துரோகம் செய்கிறேனா? நான் ஒரு பேடியா? இல்லை. உயிரை விடுகிறது மட்டுந்தானா தியாகம்? உயிரைக் காப்பாற்றுகிறதனால் பெரிய தியாகம் செய்கிறேன். என்ன பிதற்றுகிறாய் மனமே? இல்லையே. உயிரைத் தியாகம் செய்து எழுகின்ற புகழை இழக்கின்றேனே! அது ஒரு தியாகம் அல்லவா? உயிரைக் காப்பாற்றுகின்றேன், இலக்கியத் தொண்டின் ஆசையினால். அவரவர் தமக்குத் தகுந்த சேவையைச் செய்கிறார்கள். நாட்டின் ஒரு பெரிய குறிக்கோளை நிறைவேற்றுவதற்காக உயிரை வைத்திருக்கிறேன். பேடி என்று என்னை உலகம் அழைக்கும் பழியைச் சுமக்கின்றேன்!'' "எந்தச் சேவை தாழ்வு, எந்தச் சேவை மேல் அன்பு தழுவப்பெற்றால்,'' என்ற சொல் மதுரமிச்ரர் மனத்தில் ஒலிக்கிறது. அவ்வொலி இன்பத்திலே சாந்தி பிறக்கிறது. இருளும் அகன்று விடுகிறது. வெள்ளென்று கீழ்வானம் வெளுக்க ஆரம்பிக்கிறது. இருட் பிழம்பு போலக் கிடக்கிற விந்திய மலையும் உருக் காட்டுகிறது. மலர்போல அலர்ந்து வரும் காலை வனப்பை அள்ளிக் குடித்து நிற்கிறார் கவிஞர்.

விந்தியமலைப் பிராந்தத்தில் ஓர் அமைதி நிலவுகிறது. ஆனால் விக்கிரமபுரத்தில் போர் முரசு கொட்டுகிறது. போர்க் கருவிகள் காலை வெயிலில் மின்னுகின்றன. தாவும் புரவிகளின் குளம்புச் சத்தம், காயம்பட்ட களிறுகளின் ஓலம், அதிர்ந்து ஓடும் தேரிலுள்ள மணிகளின் ஓசை, கணக்கில்லாத காலாட்படையின் அடி அரவம், வாளொடு வாள் மோதும் அமலை, அம்பு மழையின் இடையறாத ஒலி எல்லாம் கலந்து விண்ணைக் கிழிக்கின்றன.

வெற்றி வெள்ளம் ஒரு கணம் ஒரு பக்கம் ஓடுகிறது. மறு கணம் இன்னொரு பக்கம் பாய்கிறது. கருணாகரரும் மார்த்தாண்டரும் தங்கள் தங்கள் படைகளை ஊக்கிக்கொண்டிருக்கிறார்கள். எந்தக் கட்சி தோல்வியுறும் என்று முடிவாகச் சொல்லுவதற்கில்லை. திடீரென்று ஒரு பெரும் ஒலி எழுகிறது.

"அரக்கரை அழிப்பதே அன்பெனக் கொள்வீர்
இரக்கமு மிலதே இரக்கமு மிலதே
எழுவீர் எழுவீர் எழுபகை மாய்க்கவே''

என்று பார் அதிரப் பாடிக்கொண்டு வீராவேசத்தோடு வாலிபர் படையோர் நடுவே புகுந்துவிடவே கோலாஹலனுடைய படை திகைத்து நின்று விடுகிறது. அவனுடைய கொடி தேர்த் தட்டிலிருந்து அறுந்து கீழே விழுந்தவுடன், படை ஓட்டம் பிடிக்கிறது. இந்தச் செய்தி எங்கும் பரவுகிறது.

எங்கே பார்த்தாலும் ஒரே உள்நாட்டுக் கலகந்தான். அலைக்குமேல் அலை என எழும் இன்னற் கடலுக்குக் கரை காணுது கோலாஹலன் நிற்கிருன். அவன் செவியில் கணக்கில்லாத துன்ப ஒலிகள் விழுகின்றன. அவன் முன் அநேக கோர உருவங்கள், பல்வேறு சின்னங்களோடு தலைவிரித்து ஆடு கின்றன. கொட்டின குருதி வெள்ளம் கடலையும் சிவக்கச் செய்கிறது. திகைப்பும் ஏமாற்றமும் மாறி மாறி வருகின்றன. சிதறின ஆசைகளும், கலைந்த கனவுகளும், இடிந்த மனக்கோட்டைகளும் அவனைச் சூழ்ந்து நிற்கின்றன. ஒளி போய் இருள் திரண்டு அவன் நாட்டின்மீது மேகம் போலச் சூழ்ந்துவிடுகிறது. அவ்விருளில் திசை தெரியாது தத்தளித்து ஆடுகிறது ஒரு சோக நிழல்.

விக்கிரமபுரத்து அரசன் விஜயபாலன் அரியாசனத்தின்மீது வீற் றிருக்கிருர். கருணுகரரும் மார்த்தாண்டரும் பக்கத்தில் அமர்ந்திருக்கிருர் கள். அடைந்த வெற்றியைக் கொண்டாட ஒரு நிமிர்ந்த கூட்டம் கூடி யிருக்கிறது. இவ்வளவு கொண்டாட்டத்திற் கிடையே வேந்தனுடைய மனத்தில் அமைதி இல்லை. இன்பக் கோயிலிலும் சோக உருவம் நடமாடத் தான் செய்கிறது. ஏதோ ஒரு குறை அவர் மனத்தைச் சாம்பச் செய்கிறது. தன் உயிர்த் தோழர், கவி மதுரமிச்ரர் சபையை அலங்கரிக்கவில்லை. கவலை படர்ந்த முகத்தோடு வீற்றிருக்கும் மன்னன் முன் மதுரமிச்ரர் வருகிருர். பலவித உணர்ச்சிகள் நிருபன் உள்ளத்தில் எழுகின்றன.

“இந்நூல்தான் என்னை நாட்டைவிட்டு வெளியேறும்படி செய்தது. மன்னித்தருளவேண்டும், அரசே!” என்று மதுரமிச்ரர் வணங்குகிருர். விஜயபாலன் அந்நூலை உற்று நோக்குகிருன்.

“நல்லதே செய்தீர். எந்த நாட்டை இழந்தாலும் இதை இழப் பேனே? நாட்டுச் சிற்பங்கள், ஓவியங்கள், புத்தகசாலைகள், எல்லாம் எங்கே இருக்கின்றன?”

“அரசே, ஆறுமாத காலமாக ஒருவருக்கும் தெரியாமல் பூமிக்குள் ஒரு மண்டபம் அமைத்து அவைகளை அதில் வைத்திருக்கிறேன்.”

“இந்தப் பாட்டைப் பாடினது தாங்கள் தாமா?”

சற்று மௌனமாக இருந்து, “எதற்காகக் கேட்கிறீர்கள்?” என்று வினவுகிருர்.

“இந்தப் பாட்டைப் பாடி ஓர் இளைஞர் தொண்டர் படை நம் நாட்டைக் காப்பாற்றிவிட்டது. நீர் இந்தப் பாட்டைப் பாடி வைக்காது போனுல்......”

“நான் பாடினேனு? இந்த நாணல் இல்லாதுபோனுல், இன் ெனுரு நாணல் மூலம் இசைத்திருப்பான் அந்த முரளிதரன்.”

"கருணாகர மார்த்தாண்ட சேனாதிபதிகளே, நாட்டின் உடலைக் காப்பாற்றின உங்களுக்குப் பரிசுகள் இதோ" என்று கபால வடிவமைந்த மாணிக்கக் கல் பதித்த காஞ்சன மாலைகளை அவர்களுக்கு அளிக்கிறான். "அதன் ஆவியைக் காப்பாற்றின கவி மதுரமிச்ரரே! உமக்குப் பரிசு நீர் உவக்கின்ற மலர்மாலை" என்று நீட்டுகிறான் அரசன்.

மதுரமிச்ரர் அதை அணிந்துகொண்டு ஆண்டவன் திருவருளை நினைந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிவிடுகிறார்.

சபை கலைகிறது.

கருணாகரரும் மார்த்தாண்டரும் வியப்பிலே ஒன்றும் தோன்றாமல் நிற்கிறார்கள்.

'இன்னமுமா தெரியவில்லை?' என்ற எண்ணம் அவர்கள் மனத்தகத்தே பாய்கிறது.

---

# *12. ஆயிரத்தில் ஒருவன்

எஸ். வி. வரதராஜன், பி. ஒ. எல்.

தமிழ் இலக்கியங்களில் போற்றியுரைக்கப்படும் உயரிய குணங்களுள் சிறந்தவை வீரமும் ஈகையுமாகும். இவை இரண்டையும் வாழ்க்கையின் இருகண்களாகத் தமிழர் கருதி வந்தவராவர். இவ்விரு குணங்களாலும் தம் புகழை நிறுவிய சான்றோர் வரலாறுகள் பல உண்டு. அவை கற்பார் மனத்தை உருக்கிப் பரவசமாக்கும் பெற்றிவாய்ந்தவை. இவ்விரு ஆன்ற குணங்களுள் முன்னது இன்றியமையாத காலங்களிலே மாந்தரிடத்துத் தோன்றுவதாகும். பின்னதோ, பிறர் துன்பங்கண்டுழி என்றும் இளகிய மனமுடையார் எவர்மாட்டும் உண்டாகத்தக்க உள்ள நெகிழ்ச்சியின் செயலாகத் திகழ்வது. தமிழர் ஈகையினை எவ்வாறு போற்றி வந்தனர் என்பது,

"சாதலின் இன்னாத தில்லை; இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை"

என்ற மறைமொழியால் நன்குவிளங்கும். ஈகையென்னும் பேரறத்தினால் ஈட்டுதற்குரியது புகழேயாகும். இறுபற்றியே வள்ளுவனாரும் 'ஈகை' என்ற அதிகாரத்தை யடுத்துப் 'புகழ்' என்ற அதிகாரத்தை யமைத்து,

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு"

என்றனர். உரையாசிரியராகிய பரிமேலகரும் 'இது (புகழ்) பெரும்பான்மையும் ஈதல்பற்றி வருதலின், அதன்பின் வைக்கப்பட்டது' என்றார்.

* ஆசிரியரின் இசைவுபெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

தாம்பெற்ற செல்வத்தினைச் சிறைப்படுத்தாமல், தமக்கும் பிறர்க்கும் பயன்படுமாறு ஈதல் என்னும் அருங்குணம் பரந்த நோக்கமும் கனிந்த உள்ளமும் உடைய சிலரிடமே அமைவதாகும். இத்தகைய ஈகைக்குணம் மாந்தர் பசிப்பிணியை நீக்கிவந்ததுடன் கலைகளையும் வளர்த்துவந்திருக்கிறது. ஈகையின் பயனை எய்தினோரது உள்ளத்திலே சுரந்த நன்றியறிவானது, பாடல்களின் உருக்கொண்டு நமது இலக்கியங்களில் ஆங்காங்கே மிளிர்கின்றன.

ஈகையென்னும் இன்குணத்தால் புகழ் நிறுவிய கடை யெழுவள்ளல்களின் வரலாறுகளே யன்றிப் பிற்காலத்தே விளங்கிய கொடை வள்ளல்கள் சரிதங்கள் பல உள. அவற்றுள், இங்கு யாம் கூறப்புகுந்த சோழநாட்டுத் தருமதேவதை என்று போற்றப்பெற்ற **சடையப்ப வள்ளலின்** சரிதமும் ஒன்றாகும்.

சடையப்ப வள்ளலார் சோழநாட்டிலுள்ள திருவெண்ணெய் நல்லூரிலே தோன்றி விளங்கியவர். இவரது தந்தையின் பெயர் சங்கரவள்ளல் என்பது. இவர்கள் வமிசத்தினர் கடற்கரைப் பட்டினமாகிய புதுவை (புதுச்சேரி)யில் கப்பல் வாணிகம் நடத்தி வந்தனர். மற்றும் பல்லாயிரம் ஏர்வைத்து உழுவித்துண்ணும் செல்வ வளமும் இவர்களுக்கு வாய்த்திருந்தது. நம் வள்ளல் பெருந்தகைக்குச் **சடையன், சரராமன், கண்ணன், திரிகர்த்தராயன்** என்னும் பெயர்களும் வழங்கி வந்தன. அவற்றுள் சடையன் என்பது இவரது குலப்பெயராகும். சரராமன் என்பது இவர்க்கு இடுமொழியான் அமைந்த பெயர் என்பர். இவ்வள்ளல் தம்மை நாடிவந்த பல்லோர்க்குக் கண்போன்று உண்டியும் பரிசிலும் பரிவுடனளித்துக் காத்து வந்ததால், கண்ணன் என்று அழைக்கப்பெற்றார். ஒருகால் மூவேந்தரையும் அழைத்துச் சிறப்பாக விருந்தளித்த காலத்து இவர்க்குத் திரிகர்த்தராயன் என்ற பெயர் அன்னோரால் வழங்கப்பெற்றது.

இவ்வள்ளலை, 'ஆயிரத்தில் ஒருவர்' என்று கருதினர் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடர். இவர் தமிழ்நாட்டிலே தோன்றியது அந்நாட்டின் தவப்பயனே என்று கூறத்தடையில்லை. இவர் தோன்றியிராவிடின் கம்பர் என்ற கவி திலகரைத் தமிழகம் அவரது தகுதிக்குத்தக்க அளவிலே பயன்படுத்திக் கொண்டிராது எனலாம். கம்பராமாயணம் நமக்குக் கிடைப்பதற்கு ஏதுவாகக் கருத்தாவாயிருந்தவர் இவரேயாவார். தம்போன்ற இன்கவிப் புலவர்களைச் சடையப்ப வள்ளல் எங்ஙனம் ஆதரித்தனர் என்பதைக் கம்பநாடர்,

'ஆன்பாலும் தேனு மரம்பைமுதல் முக்கனியும்
தேம்பாய உண்டு தெவிட்டுமனம்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தல்லால் இனி'

எனத் தம்முள்ளத்தே ஊறியெழுந்த நன்றியறிவினால் பாராட்டியுள்ளார்.

அன்னைத்தூட்டும் தாயையும் ஆதரித்து வளர்க்கும் தந்தையையும் இளம்பிராயத்திலேயே இழந்து, அனாதையாய்த் தமது வீட்டுவாயில் கப்பத்தைப்பற்றி நின்ற வண்ணம் வள்ளலின் வதனத்தைக்காண ஆவலுடனிருந்த கம்பரைச் சடையப்பர் கண்டார். கண்டதும் இரங்கி, அவரது ஆதரவற்ற நிலையை உசாவியறிந்து தமது இல்லத்திலேயே தமது குமாரருக்குத் தூக்குத் தூக்கியாக அமர்த்திக்கொண்டார். ஆயினும், கம்பரிடம் பொருந்தியிருந்த அறிவு வளம் கண்டு, அவர் கல்விபயில்வதற்கு ஏற்பாடு செய்தார். கல்வியில் கம்பர் பெரியவராகி வரவரத் தூக்குத்தூக்கி வேலை நீங்கிற்று. வள்ளல் கம்பரைத் தமக்கு ஒப்பான நிலையில் வைத்துப் போற்றிவந்தார். அவராலேயே கம்பருக்குக் குலோத்துங்க சோழமன்னர் அவைப்புலவராக விளங்கும் பதவியும் கிடைத்தது. இராமகதையைத் தமிழில் இயற்றுமாறு குலோத்துங்க சோழரைக்கொண்டு தூண்டியவரும் இவ்வள்ளலாரேயாவார்.

கம்பர் இராமாயணத்தைப்பாடி முடித்தபின், அதைத் திருவரங்கத்திலே அரங்கேற்றும்போது, அக்கதையில் நூற்பாட்டுக்கு ஒருபாட்டு வீதம் வள்ளலாரின் பெயரையும் அவரது ஈகைக் குணத்தையும் பாராட்டியிருப்பது கண்ட வைணவ அறிஞர்கள் 'படிகொண்ட சீர்த்தி இராமாயணமென்னும் பக்திவெள்ளம் குடிகொண்ட' இக்கதையில் அடிக்கடி நரஸ்துதி வருகின்றதே என்று தடைகூறலாயினர். கம்பர், சடையப்ப வள்ளலாரிடம் தமக்குள்ள கடப்பாட்டை எடுத்து விண்ணப்பிக்க, அந்த வைணவ அறிஞர்கள், 'ஆயின் ஆயிரம் பாடல்களுக்கு ஒரு பாடலில் சடையன் பெயர்வரலாம்' என்று பணித்தார்கள். கவிதிலகர் 'இதுவும்நன்றே சரராமன் நூறில் ஒருவர் அல்லர். ஆயிரத்தில் ஒருவரே யாவார்!' எனக்கொண்டு மனந்தேறி அவ்வாறே அமைக்கலானார். ஆயினும் அனாதையான தம்மைக் கவியரசாக்கிய வள்ளல் பெருந்தகைக்கு எவ்வாறு நன்றிகாட்டுவது என்பதில் கம்பருக்கு ஒரு முடிவும் ஏற்பட்டிலது. எனினும், இராமபிரானுக்கு முடிசூட்டிய நிகழ்ச்சியைக் கூறும் ஓர் அழகிய செய்யுளில் கம்பர்,

'அரியணை அனுமன் தாங்க, அங்கதன் உடைவாள் வாங்கப்,
பரதன்வெண் கவிகை யேந்த, இருவரும் கவரி பற்ற,
விரைசெறி குழலி யோங்க, வெண்ணெய்மன் சடையன் வண்மை
மரபுளோர் கொடுப்ப வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி'

என்னும் செய்யுளில் வள்ளலின் முன்னோருள் ஒருவரை இராமயண காலத்தில் அயோத்தியில் அரண்மனைக் கருவூலக் காப்பாளராக்கி, அவர் தம் கையால் முடியை எடுத்துத்தர, வசிட்டமாமுனிவர் அதை வாங்கி இராமபிரானுக்குப் புனைந்தார் என்று கூறி, தமது நன்றியைத் தலைக்கட்டுகிற அழகு யாவரும் உணர்ந்து இன்புறத்தக்கது.

சடையப்ப வள்ளலின் கொடைப் பயனைக் கம்பர்போன்ற கவிஞரேயன்றி, வேற்று நாட்டினரான வேந்தரும் பெற்ற செய்திகள் உண்டு. அதனால் இந்த வள்ளலின் கீர்த்தி தமிழ்நாட்டில் மட்டுமேயன்றி வெளிநாடுகளி

னும் விளங்குவதாயிற்று. 'அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர் கொடுத்தார் எனப்படுஞ் சொல்' என்பது முதுமொழி யன்றோ?

சடையப்ப வள்ளலின் ஆதரவில் கவலையற்று உண்டு வாழ்ந்திருந்த கவிஞர் ஒருவர் நாடுகாணும்பொருட்டு ஈழநாட்டை யடைந்தார். அவர் அந்நாட்டின் ஒரு பகுதியாகிய கண்டி நாட்டை எய்தி, அங்கு செங்கோல் செலுத்திவந்த **பரராச சிங்கன்** என்னும் மன்னனைக் கண்டார். அச்சமயம் அந்நாடெங்கும் வற்கடம் சூழ்ந்திருந்தது. தமிழறிஞனை அவ்வேந்தன் புலவரை வரவேற்று உபசரித்தான். பஞ்சத்தால் மாந்தர் பலர் பட்டினி கிடக்க நேர்ந்திருப்பதையும், பலர் மரித்து வருவதையும் அவ்வரசன் வாயிலாகப் புலவர் அறிந்தார். உடனே அவர் அவனைத் தேற்றிச் சோழ நாட்டின் உண்டி வளத்தையும், அங்கு அறத்தை வளர்த்துவந்த வள்ளலாரின் கொடைத்திறத்தையும் எடுத்துரைத்து, வள்ளலின் உதவியை நாடும்படி அவனைத் தூண்டினர். குடியோம்பிக் கோலோச்சுங் கடப்பாடுடையவனை அவ்வேந்தனும் அதற்கிசைந்து நம் வள்ளலுக்கு ஒரு செய்யுள் எழுதி விடுத்தனன். அச்செய்யுள் வருமாறு:—

'இரவு நண்பக லாகி லென்பக லிருள றாவிர வாகிலென்
இரவி யெண்டிசை மாறி லென்கட லேழு மேறிலென் வற்றிலென்
மரபு தங்கிய முறைமை பேணிய மன்னர் போகிலென் ஆகிலென்
வளமை யின்புறு சோழ மண்டல வாழ்க்கை காரண மாகவே
கருது செம்பொனி னம்ப லத்திலோர் கடவுள் நின்று நடிக்குமே
காவி ரித்திரு நதியிலே யொரு கருணை மாமுகில் துயிலுமே
தருவு யர்ந்திடு புதுவை யம்பதி தங்கு மன்னிய சேகரன்
சங்க ரன்தரு சடைய னென்றொரு தரும தேவதை வாழவே.'

'வளப்பம் மிகுந்த சோழநாட்டில் வாழும் பேறு ஒருவருக்கு வாய்க்குமாயின், இரவு நண்பகலாக மாறினலென்ன? பகலின்றி இரவாகவே இருப்பினும் என்ன? சூரியன் எந்தத்திசையில் உதித்து எங்கே மறைந்தால்தான் என்ன? ஏழு கடல்களும் பொங்கிவரினும் அன்றி வற்றி வறண்டே போயினும் என்ன? குடிகளைக் காக்கும் நன்மரபிலுதித்த வேந்தர் வாழ்ந்தாலும் என்ன? தாழ்ந்தாலுமென்ன?' என்பது இச்செய்யுள் முற்பகுதியின் பொருள்.

இவ்வித இறுமாப்புக்குக் காரணமாவது யாது என்பதை அச்செய்யுளின் பிற்பகுதி விளக்குகின்றது. அது 'அந்நாட்டில் யாவரும் கருதி வழிபடும் பொன்னம்பலத்தில் ஒரு கடவுள் நின்று நடிக்கின்றது. மேலும் காவிரியின் நடுவிலேயுள்ள திருவரங்கத்தில் கருணையே வடிவெடுத்த காளமேகம் துயில்கின்றது. மற்றும் மரங்கள் வானளாவி வளர்ந்துள்ள புதுவையில் மன்னிவாழும் தலைவனும் சங்கரவள்ளல் புதல்வனுமான சடையன் என்ற ஒரு தருமதேவதை வாழ்கின்றது,' என்பதாகும்.

இப்பாடலில், சோழநாட்டில் வாழும்பேறு ஒருவருக்கு வாய்ப்பின், அவர் வயிறார உண்டு வாழ வழியுண்டு என்பது முற்பகுதியின் கருத்து. பின், அந்நாட்டின் ஏற்றத்திற்குச் சைவ வைணவ சமயங்களுக்குத் தாயகமான இரண்டு ஸ்தலங்களும் சோழநாட்டின்கண் அமைந்திருத்தலின் சிறப்பு உணர்த்தப்பட்டது. முடிவில் சோழநாட்டின் தனிச் சிறப்பிற்கு அடிப்படையாயுள்ளது 'தருமதேவதையின் வாழ்வு' ஒன்றே என்று சொல்லப்பட்டுள்ளது. அத்தரும தேவதையும் சடையப்ப வள்ளலே யாவார் என்று கூறி, சோழ நாட்டிற்குச் சிறப்பினை ஈட்டித்தந்தவர் 'செல்வத்தின் பயனே ஈதல்' என்ற வாக்கை மெய்ப்பித்த நம் வள்ளலே யாவார் என்பதை நிலைநாட்டுகின்றது இச்செய்யுள். மேலும் 'கருது செம்பொனின் அம்பலத்தில் **நடிப்பவனை**யும், காவிரித் திருநதியிலே **துயில்கின்றவனை**யும் நம்பாதேயுங்கள்; புதுவைச் சடையனுரே காப்பவர், அவரை அடைந்தவருக்குக் குறையில்லை' என்று தொனிப் பொருளும் அமையச் சமத்காரமாகக் கூறியுள்ளது அறிந்து இன்புறத்தக்கது.

இந்த அரிய பாடலைக் கண்டிராஜன் எழுதி வள்ளலுக்கு அனுப்பியதும், 'ஈதல் இயலாத விடத்து இறத்தல் இன்பந் தருவது' என்பதைக் கடைப்பிடியாகக்கொண்ட அவ்வள்ளல் ஆயிரம் மரக்கலங்களில் நெல் மூட்டைகளை ஏற்றி விடுத்து 'வான் பொய்ப்பினும் தான் பொய்யாத' காவிரி நாட்டின் வளத்தையும் தம் கொடைத்திறத்தையும் நிலைநாட்டித் 'தரும தேவதை' என்ற பெயருக்கு உரியவரானர். கண்டிநாடும் பஞ்சம் நீங்கி உயர்ந்தது.' இறைத்த கிணறு ஊறும்' என்பதற்கு ஏற்ப வள்ளலுக்கும் செல்வம் வளர்ந்து கொண்டேயிருந்தது. இத்தகைய சடையப்ப வள்ளலை **ஆயிரத்தில் ஒருவன்** என்ருர் கவியரசர். கோடியில் ஒருவர் என்று சொல்லியிருக்கலாம் என்று நமக்குத் தோன்றுகிறது, இக்கால நிலைமை நோக்குமிடத்து!

---

## 13. முடங்கல் (கட்டுரைத் திரட்டு)

பண்டிதர், நாவலர். ந. மு. வேங்கடசாமி நாட்டார்

பல்லாயிர ஆண்டுகளாகப் பனுவல்களும், ஆவணங்களும், பிறவும் இந்நாட்டிலே பனையோலையில் தீட்டப் பெற்று வந்தன. ஓரிடத்தினின்று பிறிதோரிடத்திற்குச் செய்தி தெரிவிக்க வேண்டின், அதைப் பனையோலையில் எழுதிச் சுருள் செய்து, காப்பிட்டு, ஏவலாளர் முதலாயினர் கைக் கொடுத்துச் செல்லவிடுவது வழக்கம். அதனை ஓலையென்றும்,

* உரிமையாளரின் இசைவு பெற்றுச் சேர்க்கப்பட்டுள்ளது.

முடங்கலென்றும் கூறுவர். ஓலையில் எழுதப்படுதலின் ஓலையென்பது பெயராயிற்று; இலை என்னும் பொருளுடைய பத்திரத்தில் வரையப் படுதலின் பத்திரமென்பது பெயராயினாற் போல. பிற்காலத்தே ஓலை யென்பது மங்கலமல்லாத செய்தி வரைந்ததாகப் பொருள் படுவதா யிற்று. செய்தி வரைந்த ஓலையை வளைத்துச் சுருள் செய்தலின், அது முடங்கல் எனவும் பெயர் பெறும். முடங்கல் வளைதல். முடங்கல் வரை தலைப்பற்றிய வேறு சில செய்திகளும் பின் காட்டுவனவற்றால் அறிய லாகும்.

சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்த காதையில், மாதவி தீட்டிய, முடங்கலொன்றைக் கோவலன் பெற்ற வரலாறு காணப்படுகிறது. கோவ லன் மாதவி வயத்தனாயொழுகித் தன் முன்னோர் ஈட்டிய பெரும் பொரு ளனைத்தையும் இழந்து, கானல் விளையாட்டில் அவள்பால் வெறுப்புற்றுக் கண்ணகியையடைந்து, கண்ணகி அளித்த காற்சிலம்பிரண்டையும் வணிக முதலாகக் கொண்டு மதுரையெய்தி உலந்த பொருளீட்டுவதெனத் துணிந்து, பத்தினியாகிய கண்ணகி நல்லாளொடும் வழிக்கொண்டு, கவுந்தி யடிகள் என்னும் சமணசமயத் தவமூதாட்டியாரின் சார்பு பெற்றுச்சென்று, சோணாடு கடந்து, இரவு நிலவில் நடந்து செல்லுங்கால், வைகறைப் பொழுதில், 'வரிநவில் கொள்கை மறைநூல் ஒழுக்கத்துப், புரிநூல் மார்பர் உறைபதி' ஒன்றின் புறத்தை யடைந்து, மாதவத் தாட்டியோடு காதலி தன்னையும் ஓர் ஒதுக்கிடத்தே யிருக்கச் செய்து, தான் காலைக் கடன் கழித் தற்கு ஓர் நீர் நிலையை அடைவானாயினன். அப்பொழுது மாதவி கொடுத்த முடங்கலுடன் கோவலனைத் தேடி பலவிடமும் சுற்றித்திரிந்து வந்த கோசிகனென்னும் வேதியன் கோவலனைக் கண்டும் துயர் மிகுதியினால் அவன் உருவம் வேறுபட்டிருத்தலானும், நிறம் மயங்கித் தோன்றும் பொழுதாகலானும், ஐயுற்றவனாய், அது தெளிதற்கு, 'கோவலன் பிரியக் கொடுந்துயரெய்திய, மாமலர் நெடுங்கண் மாதவி போன்று இவ், அருந்திறல் வேனிற்கு அலர்களைந் துடனே, வருந்தினை போலும் நீ மாதவி' என்று கூற, அதனைச் செவியுற்று, 'நீ இங்கே கூறிய கூற்றின் பொருள்யாது?' எனக் கோவலன் வினவினமையால், ஐயத்தினீங்கித் தெளிந்து, அவனைச் சார்ந்து, இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியும் அருமணியிழந்த நாகம் போன்று வருந்தியதும், துன்னிய சுற்றமெல்லாம் இன்னுயிரிழந்த யாக்கை போலத் துயர்க் கடலில் வீழ்ந்ததும், ஏவலாளர் எத்திசையிலும் தேடச் சென்றதும், இராமன் பிரிந்த அயோத்திபோலப் புகார் நுள்ளாரனைவரும் அறிவு கலங்கியதும், முன்பு வசந்தமாலையால் தனது திருமுகத்தைக் கோவலன் மறுத்தது கேட்டு மாதவி பள்ளியில் மயங்கி வீழ்ந்ததும், அவ ளுற்ற துயரங் கேட்டுத் தான் அங்கே சென்றிருந்ததும், மாதவி தன் கையால் ஒரு முடங்கல் வரைந்து, 'இதனை என் கண்மணியனையாற்குக் காட்டுக' என்று சொல்லித் தன்னிடங் கொடுத்ததும், அதனைப் பெற்றுத் தான் பல தேயங்களும் தேடித்திரிந்ததும் ஆகிய செய்தியெல்லாம் கூறி, மாதவியின் ஓலையைக் கோவலன் கையிற் கொடுத்தான்.

கோவலன் அதனைப் பெற்றவுடன் அதன்மீது இடப்பட்டிருந்த இலச்சினையைக் கண்டான். அவ்விலச்சினை ஓலை மடியின் புறத்து மண் மேல் மாதவியின் குறு நெறிக் கூந்தலால் ஒற்றியதாகும். அது மாதவி தன்னுடன் கூடி யுறைகின்ற காலத்து அவள் கூந்தலின் வாசநெய் பூசிய தன்மையை தனக்கு உணர்த்திற்றாகலின், கோவலன் அதனைத் தன்கையால் விடுவியாதவனாய்த் தாழ்ந்திருந்து, பின்பு விடுவித்து, ஏட்டினை விரித்து, அத னுட்கிடந்த உரையின் பொருளை உணர்வானாயினான்.

"உடனுறை காலத் துரைத்த நெய்வாசங்
குறுநெறிக் கூந்தன் மண்பொறி யுணர்த்திக்
காட்டிய தாதலிற் கைவிட லீயான்
ஏட்டகம் விரித்தாங் கெய்திய துணர்வோன்,"

என்பதிலிருந்து ஓலையை முத்திரித்துக் காப்புச் செய்யும்வழக்கம் பண்டிருந்த தென்பது புலனாகிறது. மாதவி கூந்தலைப் பொறித்து இலச்சினையிட்டதும், அதனால் கோவலனெய்திய உணர்ச்சித் தன்மையும் அவர்கள் காதலையும், கலக்கத்தையும் வெளிப்படுத்தி, உள்ளத்தை யுருக்குகின்றன. இனி, முடங் கலின் வாசகம் வருமாறு :—

'அடிகண் முன்னர் யானடி வீழ்ந்தேன்.
வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்
குரவர்பணி யன்றியும் குலப்பிறப் பாட்டியோ
டிரவிடைக் கழிதற் கென்பிழைப் பறியாது
கையறு நெஞ்சங் கடியல் வேண்டும்
பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி,'

என்பதிலுள்ள முதலடிக்கு, 'தேவரீர் திருவடிகளைத் திக்குநோக்கித் தண்டம் பண்ணினேன்; இதனைத் திருவுளத்திலே கண்டருள்க' என்று பொருள் கூறி, 'இஃது ஓலை முகப்பாசுரம்; இனி அக்காரிகை பாசுரம்' என அடி யார்க்கு நல்லார் உரைத்திருப்பது சிந்திக்கற்பாலது. இஃது, ஓலை எழுது வோர் தமது தகுதிக்கும், எழுதப்படுவோரின் தகுதிக்கும் இயைய, ஓலை முகத்தே முகமனுரை தீட்டுவதோர் வழக்குண்டென்பதனைக் காட்டுகின் றது. வாசகத்தின் பொருளை, 'இரவிடைக் கழிதற்கு யான் செய்த குற்றம் ஈதென்றறியாது நெஞ்சங் கையறு நின்றது; அதனைப் பொறுக்க வேண்டும் என அரும்பதவுரைக்காரர் சுருங்கக் கூறினர். அடியார்க்கு நல்லார், ஆற்றல்பற்றி விரித்துக் கூறுகின்றார். அதனையும் சேர உணர்ந்து கோடல் நலமெனக்கருதி ஈண்டெழுதுகின்றோம். "வடிமொழி யுணர்ந்து குற்றந் தீர்ந்த நற்காட்சியை யுடைய உயர்ந்தோனே! இரு முது குரவர் பணிவிடையொழிந்ததன் மேலும் குலத்திற் பிறந்து கற்பையாளுதலுடையவளுடனே இரவின் கண் நகரிடைபைக் கழிந்து போதற்கு வந்த பிழைப்பென்னை? அஃது அறியாது, என் பிழைப்போ வென்று அவலித்து அமற்றிக் கவலித்துக் கையாற்றின்கண் நெஞ்

சழுங்கா நின்றது ; என் பிழைப்பெனினும், மகளிர் சொல் குற்ற மருத சொல்லென்று திருவுளம் பற்றல்வேண்டும்; இதுவேயன்றி, எனக்கு இப்பொழுது நடக்கின்ற இச்செயலறிவு நன்றன்று; அதனைக் கடியல் வேண்டும்; ஆதலால், இவ்வாற்றால் நினக்கு ஓர் புகழ் குறைபாடின்றாகப் போற்றுவாயாக.' இதன் கண் ஆற்றலால் வருவித்தெழுதியிருக்கும் பொருள்களை வாசகத்துடன் பொருத்திக் காண்க. அடியார்க்கு நல்லார் இங்ஙனம் பொருள் கூறினராயினும், கொண்டு கூட்டின்றி வாசக ஒழுங் கின்படியே பொருள் உரைப்பது, அஃதோரோலை (திருமுகம்) ஆதற்கும், முறைமைக்கும் ஒத்ததாய், இன்னும் சிறப்புடைத்தாயிருக்குமென்று தோன்றுகிறது. வாசகத்தின் ஒவ்வொரு மொழியும் பல்காற் சுவைத் தின்புறற் பாலவாய திட்ப நுட்பங்கொண்டு திகழ்கின்றன. இளங்கோ வடிசள் என்னும் புலவர் பெருமான் ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகள் முன்னரே திருமுகம் எழுதும் பெருமித முறையினை நமக்குக் காட்டிவைத்திருக்கின்றனர்.

அடிகள் தமது சதுரப்பாட்டைப் பிறிதொருவகையாலும் இங்கே காட்டியிருப்பது பெரியதோர் இறும்பூது விளைவிப்பதாகும். மாதவி விடுத்த ஓலையின் வாசகத்தை யுணர்ந்ததும், கோவலன், 'அவள்பால் தீதொன்று மின்று; என் தீதே' எனத்தெளிந்து தளர்ச்சி நீங்கி, தன் தந்தைக்குக் கோசிகன் வாயிலாகவே ஓர் முடங்கல் விடுப்பானுயினன். அதுதான், மாதவி தனக்கு விடுத்சதேயன்றி வேறன்று. மாதவி தீட்டிய வாசகத்தை யும் பொருளையும் கூர்ந்துணர்ந்தபோது, அவையே தான் தந்தைக்கு விடுத்தற்கும் அழகுறப் பொருந்தினமை கண்டு, அம் முடங்கலைக் கோசிகன் கையிற் கொடுத்து, 'மாசில் குரவர் மலரடியைத் திசை நோக்கித் தொழுதேன் என்று சொல்லி, இவ்வோலையைக் காட்டுக' எனக்கூறி, 'என் பொருட்டாக அவரெய்தியுள்ள துன்பத்தைப் போக்குதற்கு விரைந்து செல்' என அனுப்பினன். காட்டு வழியே நடந்துகொண்டிருக்கும் கோவலன் தன் தந்தைக்குத் தீட்டுமாறு வேறு ஓலையும் கருவியும் எங்ஙன் பெறுகிற்பான் எனக்கருதி, அடிகள் தமது மதிவன்மையால், இங்ஙனம் பெண்ணோலையை ஆணோலையாக்கி யளித்தனர் போலும்! இதிலிருந்து, தன் ஊரிலுள்ளார்க்குத் திருமுகம் போக்குமொருவன், அங்குள்ளார் பலரில் யாருக்கெழுத வேண்டுமென்னும் முறைமையும் வெளியாகின்றது. மாதவி தீதிலளெனத் தெளிந்த கோவலன், அவளை மதிப்பதற்கு இதைப் பார்க்கினும் இப்போது செய்யத்தக்கது பிறிதில்லையுமாகும். அன்றி, அதனைத் தன்பால் வைத்துக்கொண்டிருத்தலும் இப்பொழுது முறைமையின் றென்பது சிந்திப்பார்க்குப் புலனுகா நிற்கும்.

இனி கோவலற்குக் கோசிகன் கூறியனவாக முன் எழுதிய செய்தி களில், மாதவி முன்பொருமுறை கோவலற்குத் திருமுகம் போக்கின ளென்பதும் ஒன்றாகும். ஆண்டுத் திருமுக வாசகம் இம்முறையான் அமைக்கப் பெற்றிலதாயினும், அதனுலும் சில செய்திகள் உணர்ந்து கொள்ளப்படுதல் நோக்கி, அதன் வரலாற்றை இங்கே குறித்திடுகின்றோம்.

கோவலன் மாதவியுடன் கூடி இன்பந்துய்த்து வருகின்றகாலத்தில், காவிரிப்பூம்பட்டினத்து இந்திர விழா நடைபெற்றது. அவ்விழா முடிவின் உவா நாளிலே நகரத்துள்ள ஆடவரும் பெண்டிரும் கடலாடுதற்குச் சென்றனர். கோவலனும் மாதவியும் அங்ஙனமே ஊர்திகளிற் சென்று கடற்கரையையெய்தி, தாழை வேலியின் உள்ளிடத்தே, புன்னை நீழலி லுள்ள புது மணற்பரப்பில், சித்திரத் திரையை சுற்றிலும் வளைத்து மேல் விதானிக்கப்பெற்ற தந்தக்கட்டிலில் அமர்ந்திருந்தனர். அப்பொழுது மாதவியானவள், தோழியாகிய வசந்தமாலையின் கையிலிருந்த யாழை வாங்கி, இசையை எழுப்பி மெல்லிய விரல்கள் நரம்பின் மேற்படர, பொருந்திய இசைக்கூறுகளைத் தன் செவியான் ஓர்த்து, 'பணியாது?' எனக் கூறி, கோவலன் கையில் யாழை நீட்டினள். அவனும் அதை வாங்கி, காவிரியை நோக்கிய ஆற்றுவரி, கானல்வரி முதலிய இசைப் பாட்டுக்களை மாதவியின் மன மகிழப் பாடுவானாயினன். அங்ஙனம் பாடியவற்றைக் கேட்ட மாதவியானவள், அப்பாடல்கள் அகப்பொருட் சுவையுடன் கூடியிருந்தமையின்; கோவலன் வேறு மகளிர்பால் மனம் வைத்துள்ளா னெனத் திரியவுணர்ந்து, யாழினைத் தான் தாங்கி, தான் வேறு குறிப்பில ளாயினும், வேறு குறிப்புடையாள் போன்று அகப் பொருட்சுவை தழுவிய வரிப்பாட்டுக்களைப் பாடினள். அங்ஙனம் பாடியது கேட்ட கோவலன், யாழிசைமேல் வைத்து ஊழ்வினை வந்துருத்ததாகலின், 'யான் கானல் வரிபாடத் தான் அப்படிப்பாடாது, என்னையொழிய வேறொன்றின் மேல் மனம் வைத்து மாயமுடையாளாகிப் பாடினள்' என்றெண்ணி, அவளைத் தழுவிய கை நெகிழ்ந்தனனாய் விட்டுப்பிரிந்து, மாலைப்பொழுதிலே ஏவலாளர் சூழ்தரப்போயினன். மாதவியும், கையற்ற நெஞ்சினளாய் வண்டியிலேறிச்சென்று தன் மனையை அடைந்தாள். அடைந்தவள் வேனிற் காலமாகலின், அதற்குரிய வானுற உயர்ந்த மேனிலையில் நிலாமுற்றத்தே சென்று, யாழைக் கையிலெடுத்து, கண்டத்தாற் பாடி அது மயங்கி, யாழாற் பாடலுற்று, அதுவும் மயங்கிப் பின்பு, உலகமெல்லாம் தொழு திறைஞ்சப்படும் அவனது திருமுகத்தைக் கோவலற்கு விடுவிப்பேமென் னும் எண்ணமுடையளாயினள். திருமுகமெழுத அவள்கொண்ட கருவிகள் சண்பகம், மாதவி, பச்சிலை, பித்திகை, மல்லிகை, செங்கழுநீர் என்பவற்றால் நெருங்கத் தொடுத்த மாலையின் இடையே கட்டிய, முதிர்ந்த தாழம்பூவின் வெள்ளிய தோடும், அதற்கு அயலதாகிய பித்திகையின் முகையும், செம் பஞ்சிக் குழம்பும் ஆகும். பித்திகையரும்பை எழுதுகோலாகக்கொண்டு செம்பஞ்சிக் குழம்பிலே தோய்த்துத் தாழையின் வெண்டோட்டில் எழுதினளென்க. எழுதினவாசகம்:—

"மன்னுயி ரெல்லா மகிழ்துணை புணர்க்கும்
இன்னிள வேனில் இளவர சாளன்
அந்திப் போதகத் தரும்பெடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் செவ்விய னல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினும்

தணந்த மாக்கள் தந்துணை மறப்பினும்
நறும்பூ வாளியின் நல்லுயிர் கோடல்
இறும்பூ தன்று இஃதறிந் தீமின் ''

என்பது. இதனைத் தன் முற்றுத மழலைச் சொல்லால் பலகாற் பேசிப்பேசி எழுதி, வசந்த மாலையைக் கூவி, 'இம்மாலையிலெழுதிய பொருளையெல்லாம் கோவலற்கேற்பச் சொல்லி, அவனை இப்பொழுதே இங்கே கொண்டு வருவாயாக' என விடுத்தாள். அவ்வோலையைக் கொண்டு சென்று அவளும் கோவலற்குக் கொடுப்ப, அவன் 'மாதவி நாடக மகளாதலின் பலவாறாக நடிப்பது அவட்கு இயல்பன்றோ?' என்று கூறி மறுப்ப, அவள் இரக்கமுற்றுச் சென்று மாதவிக்கு அதனையுரைத்தனள். மாதவியும், 'மாலை வாராராயினும் காலை காண்குவம்' என மலரமளிமிசைத் துயிலின்றி யிருந்தனள். திருமுக வாசகத்திலுள்ள நயங்களை ஓர்ந்துணர்க. வாசகமே யன்றி, அதனை வரைந்த தாழை வெண்டோட்டு முடங்கலும், பித்திகைக் கொழுமுகையும், அலத்தகக் குழம்பும், மலர் மாலிகையும் காதலுணர்ச்சியைப் புலப்படுத்துவன காண்க. இனி, எழுதுங் காகிதம் அக்காலத் திருந்திலதேனும், வெண்ணிற இதழில் செந்நிறக் குழம்பு தோய்த்துக் கூரிய முகையால் எழுதப் பெற்றதெனுஞ் செய்தியானது, இப்பொழுது வளர்ச்சி யடைந்திருக்கும் காகித எழுத்து முறை இரண்டாயிர ஆண்டுகளின் முன்பே கருக்கொண்டிருந்ததென்பதைக் காட்டுகின்றது.

இனி, திருமுகமெழுதுவது குறித்த பிறிதொரு செய்தி சீவக சிந்தாமணியிற் காணப்படுகின்றது. அதனையும் ஈண்டுத் தருகின்றோம்.

தன்னை யாழில் வெல்வோரையே மணஞ்செய்து கொள்வதென் றிருக்கும் காந்தருவதத்தை என்னும் விஞ்சையர் நங்கையை யாழில் வென்று தன் கல்வியைத் தோற்றுவிக்கக் கருதிய சீவகன், அச்செய்தியைத் தன்றோழனாகிய புத்திசேனனால் கந்துக்கடனுக்கு அறிவிக்க அதனைக் கேட்டுணர்ந்த கந்துக் கடன், சீவகன் அறுபத்து நான்கு கலைகளையும் உணர்ந்தவனாதலைப் புத்திசேனனுக்குக் கூறி, அன்னனாயினும் கட்டியங் காரனது பகைமை அவனுக்குளது எனக் கூறும் அப்பொழுது, கோயிலி லிருந்து நாகமாலை என்பவளால் அனுப்பப்பட்ட தூதியொருத்தி வந்து, தன் கூந்தலாகிய உறையிற் பொதிந்த நீலமணி போலும் குவளையை எடுத்து நீட்டினள். அதனை அவன், மயிரில் முடித்த மலரென்றிகழாது, நாகமாலையின் குறிப்பால், ஒரு காரியமுளதென்று கருதி, அதனையேற்று அகவிதழினுள்ளிருந்ததொரு ஓலையை ஒடித்து வாசிக்கின்றான். அதனைக் கூறும் பாட்டு,

நல்லவ ளேக்க நாய்கன் றேர்ந்துபூங் குவளைப் போதின்
அல்லியுட் கிடந்த வோலை தாளது சலாகை யாதல்
செல்லுமென் றுய்த்து கொண்டு துகிலிகைக் கணக்கு நோக்கி
வல்லிதிற் சலாகை சுற்றி யோலையை வாசிக் கின்றான்.

என்பது. மறை பொருளாகத் திருமுகம் எழுத இம்முறை கையாளப்

பட்டிருக்கின்றது. ஒரு சலாகையில் ஓலையை வரிசையாக நீளச்சுற்றி, அதன்மீது வாசகத்தை வரைந்து, பின் பிரித்தெடுத்துச் சுருள் செய்து அனுப்புவது. இதனை நீட்டோலையாக வாசிக்கலுறின், எழுத்துக்கள் வெவ்வேறிடங்களிற் பிரிந்து கிடக்குமாகலின், வாசக உருவினைக் காணுதல் அமையாதாகும். ஆக, எழுதப்பட்டாருக்கு அச்சலாகை (கம்பி) யையோ அதனையொத்த பிறிதொன்றையோ உடன் அனுப்பியாதல், அதன் அளவினையும், வடிவினையும் தெரிவித்தாதல், அம்முறையானே அதனை வாசிக்குமாறு குறிப்பிடுதல் வேண்டும். நாகமாலை விடுத்த ஓலையோ மிகவும் வியப்பினை விளைப்பதொன்று. அவள், தான் எழுதிய ஓலையைக் குவளை மலரினுள்ளே வைத்துக் கொடுக்க, தூதியானவள் அதனைக் கூந்தலினுள்ளே பொதிந்து வைத்துக் கொணர்ந்தளித்தாள். இஃது இடையே எவ்வகையானும் எத்துணையும் வெளிப்படாது போற்றுதற்குச் செய்ததொரு சூழ்ச்சித்திறனாகும். குவளை மலரோ தாளுடன் கூடியதாயிருந்தது. அத்தாள் தான் ஓலையைத் துகிலிகைக் கணக்குப்படி சுற்றி வாசித்தற்கமைந்த சலாகையாகக் காணப்பட்டது. அம்முறையானே அவனும் அதனை வாசித்துணர்ந்தான்.

---

# குறிப்புரை

## I. வாழ்த்துப் பகுதி

### 1. பரம்பொருள் வாழ்த்து

நம் நாட்டில் எச் சமயத்தவரும், எச்செயலைச் செய்ய முற்படினும் எடுத்துக்கொண்ட அச்செயல் இனிது நிறைவேறற் பொருட்டுத் தத்தம் வழிபடு கடவுளையோ, எடுத்துக்கொண்ட செயலுக்கு ஏற்புடைக் கடவுளை யோ வழிபடுதலும் வாழ்த்துதலும் மரபு. நமது பாட நூலுக்கு முதலில் அணிகலனாய் விளங்கும் பரம்பொருள் வாழ்த்து தேசிய கவியாகிய பாரதி யார் இயற்றிய கவிதைகளில் ஒன்றாகிய புதிய ஆத்திசூடிக்கு வாழ்த்தாக விளங்குவதாகும். பரம்பொருள் மேலான பொருள். தமிழ் இலக்கிய மறு மலர்ச்சியில் பாரதியாருக்கு ஒரு தனிப்பெருமிடமுண்டு. இவர் பாடிய எண்ணற்ற பாடல்கள், தேசீய கீதங்கள், தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள், விநாயகர் நான்மணி மாலை, கண்ணன் பாட்டு, புதிய ஆத்திசூடி, முரசு, பாப்பா பாட்டு, பாரதி அறுபத்தாறு, குயில், பாஞ்சாலி சபதம், ஸ்வசரிதை முதலிய பல பிரிவுகளாகப் பதிப்பிக்கப்பட் டிருக்கின்றன. நாட்டுப் பற்று, தாய்மொழிப் பற்று, உரிமை உணர்ச்சி, கடவுளன்பு, ஒற்றுமை, ஒழுக்கம், பெண்கள் உரிமை, கைத்தொழில் மேன் மை முதலிய பல நற்பண்புகளை ஊட்டி, படிக்கும் ஒவ்வொருவரையும் தலை நிமிர்ந்து தமிழன் என நடக்கும்படி செய்வன இப்பாடல்கள். "சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்" என்று அவர் வேண்டியதுபோல, இன்று அவர் பாடல் கள், பள்ளிகளில் மட்டுமன்றி நாடெங்கும், ஊரெங்கும், தெருவெங்கும், முழங்குவதை நாம் காணலாம். இவர் எழுதிய பிற கட்டுரைகளும் வசனங் களும் கணக்கிலடங்கா.

### குறிப்புரை

முழுவெண் மேனி = முழுவதும் வெள்ளையாகிய திருமேனி. திருவெண் ணீறு அணிந்ததனால் வெளுத்த திருமேனி. கடவுள் ஒருவரேயாயினும் பல நாட்டு மக்களின் அறிவு, ஆற்றல்களுக்கு ஏற்றவாறு வெவ்வேறு வழி களில் வெளிப்படுவதால், சமயங்களும் பலவாயின. நபிகள் நாயகம், கிறிஸ்து பெருமான் ஆகியோரின் வழியாக மகமதிய சமயமும், கிறிஸ்துவ சமயமும் தோன்றின. அல்லல் = துன்பம். அமரவாழ்வு = என்றும் மழி வில்லாத வாழ்வு.

---

# 2. மாரிவாயில். சோமசுந்தர பாரதியார்.

## தமிழ்த்தாய் வாழ்த்து.

நாடு, ஆறு முதலியவற்றைப் பெண்ணாகவும், தெய்வமாகவும் உருவகப்படுத்துவதுபோலவே, மொழியையும் பெண்ணாகவும், தெய்வமாகவும், அம்மொழியைப் பேசும் மக்களின் தாயாகவும் போற்றிப் புகழ்வது கவி மரபு. சோமசுந்தர பாரதியாரும் அங்ஙனமே தமிழைத் தாயாகவும் தெய்வமாகவும் போற்றுகின்றார் என்க. இப்புலவரது வரலாற்றை மேல்வரும் பல்சுவைப் பகுதியில் 6-ம் பிரிவிற் காண்க. இது அவர் யாத்த 'மாரிவாயில்' என்னும் காவியத்திலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

## குறிப்புரை

தெய்வதம் = தெய்வம். உலகில் உள்ள பலமொழிக் குடும்பங்களினும், தமிழ்மொழிக் குடும்பம் (திராவிடமொழிக் குடும்பம்) மிகவும் தொன்மையும், தனிச் சிறப்பும் வளப்பமும் உடையதாதலானும், நூல் ஆராய்ச்சிக்குச் சிறந்த குறிப்புகள் தந்து மொழிநூற் கொள்கைகளை விளக்குவதானும், மொழிகள் குலத்தனி விளக்கு எனப்பட்டது. விழைந்து = விரும்பி. துமி = (திவலைத்) துளி. திருப்பாற்கடல் கடைந்து தேவர் அமிழ்கடைந்தெடுத்ததுபோல் தமிழ்ப் புலவரும் அசைக்கடலைக் கடைந்து (சீர்களுக்கு உறுப்பாகும் அசை) சொல்லமுதைப் பெறுகின்றனர் என்ற ஒப்புமை நயங் காண்க.

———

# II. அறவுரைப் பகுதி

## 1. திருக்குறள்

மக்கள் எல்லாரும் ஒப்ப ஏற்றுக்கொண்டு ஒழுகவல்ல முறையில் அமைந்துள்ள ஒருநூல் எம்மொழியில் இருப்பினும் அஃது அனைவராலும் போற்றிப் படிக்கப்பட்டுப் பல்வேறு மொழிகளிலும் பெயர்த்தெழுதப் படும். சமய, கால, தேச, நிற, மொழி வேற்றுமைகளைப் பொருட்படுத் தாது, யாவர்க்கும் பொதுவாகிய நல்லொழுக்க முறையை எடுத்துக்கூறிச் செல்வதே அதற்குரிய காரணமாகும். இம்முறையில் தலைசிறந்த நூல் திருக்குறளாகும், உலகம் போற்றும் தம் பெருநூலில் திருவள்ளுவர் அமைத்துப் போந்த ஒழுக்கமுறை இன்னாரென்ற வரையறையின்றி யாவரும் கையாளுவதற்கு உரியதாயிருக்கின்றது. தமிழுலகில் தோன்றிய எத்தனையோ நூல்கள் அழிந்தும், உருத்தெரியாமல் மாறுபட்டும் போக, தன்னகத்தே கொண்டுள்ள சமரசக்கொள்கைகளின் பெருமையால் இந் நூல்மட்டும் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளாய் வளர்பிறை போன்று, நாள்தோறும் பெருமை குறையாது திகழ்ந்து உலகத்தினருக் குப் பயனை அளிக்கின்றது. பண்டைக்கால ஐரோப்பிய உயர்தனிச் செம் மொழிகளிலும், தற்கால ஐரோப்பிய மொழிகளுட் சிறந்தவற்றிலும், தென் னாட்டு மொழிகளிலும், வடமொழியிலும், ஹிந்தியிலும் இந்நூல் பெயர்த்து எழுதப்பட்டிருத்தலின், இதன் பெருமையைக் கணித்தறிய வல்லார் யார்?

திருக்குறள், கடைச்சங்கம் மருவிய "பதினெண்கீழ்க் கணக்கு" என்னுந் தொகுதியில் ஒன்றாகும். பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் இவை என்பது.

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலையோ டாங்கீழ்க் கணக்கு"

என்னுஞ் செய்யுளால் அறியலாகும்.

இந்நூல் குறள் வென்பாக்களாலாகியதனால் குறள் எனப்பெயர் பெற்றது. திரு என்னும் அடைமொழி சிறப்புக்கருதிச் சேர்க்கப் பட்டது.

திருக்குறள், அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என் னும் மூன்று பெரும் பிரிவுகளையும், 133 அதிகாரங்களையும் கொண்டுள்ளது. ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்துக் குறள்கள் உள்ளன.

திருக்குறளுக்கு வழங்கும் வேறு பெயர்கள் :—தமிழ்மறை, பொது மறை, பொய்யாமொழி, திருவள்ளுவப்பயன், வாயுறை வாழ்த்து, உத்தர வேதம், தெய்வநூல், முப்பால் முதலியன.

திருவள்ளுவருக்கு வழங்கும் வேறு சில பெயர்கள்:—நாயனர், தேவர், முதற்பாவலர், தெய்வப்புலவர், பொய்யில்புலவர், பெருநாவலர் முதலியன.

திருக்குறளுக்கு உரை யெழுதியவர் பதின்மர்.—அவருட் பரிமேலழகர் எழுதிய உரையே சிறந்த தென்பர். திருக்குறளுக்குப் பின்வந்த தமிழ் ஆசிரியர்களில் அன்றுதொட்டு இன்றுவரை திருக்குறளின் கருத்துக்களையும் அடிகளையும் பொன்னேபோற் போற்றி எடுத்தாளாதவர் ஒருவருமில்லை. கடைச்சங்க நூல்களில் திருக்குறளைப்போல் தமிழ்நாட்டில் எங்கும் எல்லாரிடையும் வழங்கிவரும் நூல் வேறொன்றுமில்லை என்னலாம்.

திருவள்ளுவமாலைச் செய்யுட்கள் திருக்குறளின் பெருமையைக் கூறுவன. "ஆலும் வேலும் பல்லுக் குறுதி, நாலு மிரண்டும் சொல்லுக் குறுதி" என்னும் பழமொழியும் இதன் பெருமையைக் குறிப்பதற்குப் போதிய சான்ருகும்.

கடைச்சங்கத் திறுதிக்காலத்தில் திருக்குறள் எழுதப்பட்டது என்று அனைவருங் கருதி வருவதனல், இஃது இற்றைக்குச் சற்றேறக் குறைய இரண்டாயிரமாண்டுகளுக்குமுன் எழுந்த நூல் என்று கொள்ளலாம்.

வள்ளுவர் என்னுஞ் சொல்லையும், திருவள்ளுவ மாலையில் மாமூலனர் செய்யுளையும், சோமேசர் முதுமொழி வெண்பாவில் வருகின்ற "மெய்த்ததிரு வள்ளுவனர்" என்ற செய்யுளையும், திருவள்ளுவர் தம் தாய் தந்தையர் என்று வழங்கிவரும் ஆதி பகவன் என்பார் கதையையும், கபிலரகவல் கூற்றுக்களையும் கொண்டு திருவள்ளுவரை வள்ளுவர் குலத்தோடு தொடர்பு படுத்துவார் பலர். ஆதிபகவன் கதைக்கு மாருக யாளிதத்தனுக்கும் ஒரு புலைச்சிக்கும் மகனுகத் திருவள்ளுவரும் பிறரும் பிறந்தனர் என்று ஞானமிருதம் என்னும் நூல் கூறுகின்றது. கபிலரகவலும், கடைச்சங்கப் புலவரான கபிலர் எழுதியதுதானென்று துணிய இயலவில்லை. ஆதலால், திருக்குறளின் அகச்சான்றும், பிற சங்கநூற் சான்றும்கொண்டும், நிகண்டுகள் வள்ளுவர் என்னும் சொல்லுக்குக் கூறும் பொருள்களை நோக்கியும் நாம் திருவள்ளுவரது பெயருண்மையை அறியவேண்டியிருக்கிறது.

பிறப்பினல் உயர்வு தாழ்வு இல்லையென்றும் 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்' என்றும் திருவள்ளுவர் அறிவுறுத்துகின்ருர். அன்றியும், வள்ளுவர் ஆன்ற குடிப் பிறப்பும், அரசவைப் பழக்கமும் உடையவரென்பதை, "அறம் பொருளின்பங்களை

யும் அவற்றின் நுட்பங்களையும் திறம்பட விரிக்கும் அவர்குறள் பறை யறைகின்றதே! அவர்காலப் புலேயர், தமிழொடு ஆரியமும் பயின்று, வருணபேத மழித்து அறவோர் அறிஞருடன் பயின்று வந்தனர் என்று கொண்டாலன்றி, பறைக்குல வள்ளுவர் தமது திருக்குறள் காட்டும் அறி வும் கல்வியும் அடையுமாறில்லே. திருக்குறள் இயற்றற் கின்றியமையாத மதிநுட்பமும் நூலறிவும், அந்நூலாசிரியர் பறையர் குலத்திடையே பெற் றிருக்க வொண்ணுதென்பது ஒருதலே. ஆகவே வள்ளுவர் இப்பெற்றி யெல்லாம் பெறறற் கின்றியமையாத நற்குடிப்பிறப்பும் அறவோர் கூட்டுற வும் உடையராதல் அவசிய மன்றே?''

வள்ளுவப் பெயரும், இப்பொழுது அது குறிக்கும் ஆதிதிராவிடக் குலத்தைப் பண்டைக் காலத்துச் சுட்டியதோ என்ருல் அதுவுமில்லே.

மணிமேகலே பெருங்கதை முதலிய நூல்களிலும் பிரூண்டும் பெரு விழாக்களையும் மன்னர் மணமனைய நற்செய்திகளையும் பட்டத்துயானைப் பிடர்த்தலையிலிருந்து அகநகரில் அரசவீதிகளில் தெரிவிப்போரே வள்ளுவர் என்று கூறப்பட்டுள்ளது. இவர்கள் தாழ்ந்த குலத்தவரென யாண்டும் கூறப்படவில்லே. அன்றியும், திவாகரத்தில் "வள்ளுவன் சாக்கை யெனும் பெயர் மன்னர்க் குள்படு கருமத் தலேவர்க் கொன்றும்'' என்று வெளிப் படையாகக் கூறப்பட்டிருப்பதனுல், அக்காலத்து மன்னர்தம் உள்படுகரு மத் தலைவருக்கு இப்பெயர் சிறப்புப் பெயராகக் கொடுக்கப்படுவது என் பதில் ஐயமில்லே. அரசனனைய பெருமக்களுக்கு இக்காலத்து, அன்பும் நம்பிக்கையுமுடைய உட்கருமத் தலேவர் (Private Secretaries) இருப்ப தைக் காண்கிறேம். அதுபோன்றே, பண்டை அரசியலில் புறக்கருமத் தலேவருக்கு வேருக உட்கருமத்தலேவரும் இருந்திருக்கலாம். ஆகலின், வள்ளுவப் பெயர் திருக்குறளாசிரியர் காலத்து உள்படுகருமத்தலேவர் பதவி யைக் குறித்தது என்றும், நம் திருவள்ளுவர் பாண்டியமன்னர் அரசாங் கத்தில் இத்தொழிலிலமர்ந்திருக்கலாம் என்றும் கொள்ளுதல் கூடும். அரசி யல் அங்கவியல்களின் நுணுக்கங்களே ஆராய்ந்தெழுதிய திருவள்ளுவர் இவ் வாறு அரசியற் கருமங்களில் ஈடுபட்டிருந்தவர் என்றல் அமைவுடையதே.

அரசாங்க அமைச்சராக இருந்த திருவள்ளுவர் திருக்குறளே எழுதி மங்காப் புகழ்பெற்றபின், அவர் இயற்பெயர் மறைந்துபோகத் தம் சிறப் புப் பெயரால் வழங்கப்பட்டார் போலும். மேலும் நம்நாட்டில் பெரி யோர்களே இயற்பெயர் கூறி வழங்கும் வழக்கமுமில்லே. தமிழ்நாட்டில் இன்றும் இயற்பெயர் கூருமல், பிள்ளே, நாவலர், ஐயர், என்ருல் அவை யாரைக் குறிக்கும் என்பதைத் தமிழர்கள் நன்கு அறிவார்கள். இவை யெல்லாம் திருவள்ளுவர் என்பது குலப்பற்றிவந்த பெயரன்று என்பதை விளக்கும்.

'திருவள்ளுவர்' என்பதை இயற்பெயரென்றே சேனவரையர் முதலிய உரையாசிரியர் கருதியதாகவும் தெரிகிறது. தொல்காப்பியத்தில், கல்வி,

தவம் முதலியவற்றால் பெற்ற சிறப்புப்பெயர் முன்னும் இயற்பெயர் பின்னும் வருவது முறை என்ற நூற்பாவுக்கு எடுத்துக் காட்டாக "**தெய்வப் புலவன் திருவள்ளுவன், முனிவன் அகத்தியன்**" என்பனவற்றைக் காட்டியிருத்தலான் இது விளங்கும்.

இனி இவருடைய பெயரைப்பற்றிப் புலவர் புராணம், "வள்ளுவர் என்றார் பல்லோர் வளமையோ னெனல் ஓராரே" என்று கூறுகின்றது. இதைப் பின்பற்றிப்போலும் திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் "வள்ளுவர் என்பது வண்மையுடையவர் என்பதை விளக்கிநின்ற தாகலின், அது, வேதத்தில் இலைமறை காய்போல் பலவிடங்களிலும் மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள்களை யெல்லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத்து அருள்செய்தவர் என்னும் காரணம்பற்றி வந்த பெயராயிற்று" என்றனர்.

## குறிப்புரை

புறங் கூறாமை :—காணாத வழி, பிறரை இகழ்ந்து உரையாமை.

1. புறங் கூறாமையின் நன்மை இதிற் கூறப்படுகிறது. அல்ல=பாவங்களை. புறங்கூறாமை அக்குற்றங்களால் அழிக்கப்படாது மேற்பட்டுத் தோன்றும் என்பதாம்.

2. இவற்றுள் புறங்கூறலின் கொடுமை கூறப்படுகிறது. அழி என்ற சொல் இரு இடங்களிலும் அழீஇ என்று அளபெடுத்து அழித்து என்னும் வினையெச்சப் பொருளில் வந்தது. அழித்து என்பது இருவழியும் ஒளியைக்கொன்று என்னும் பொருளில் வந்தது. ஆக்கம்=மறுமைக் கண் எய்தும் பயன். கண்ணின்று=ஒருவன் எதிரே நின்று. கண்ணற= கண்ணோட்ட மற. முன்னின்று=முன்+இன்று எனப் பிரிக்க. எதிரில் இல்லாமல். பின் நோக்கா=பின்வரும் குற்றத்தை நோக்காத.

5-9. இவை ஐந்திலும் புறங்கூறுவார்க்கு எய்தும் குற்றம் கூறப்படுகிறது. அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை=(புறஞ் சொல்லுவானொருவன் அறத்தை நல்லது என்று சொல்லினும்) அது தன் மனமாரச் சொல்லுகின்றானில்லை என்பது. திறன் தெரிந்து=தன் பழி பலவற்றுள்ளும் மிக இழிந்தவற்றைத் தேர்ந்தெடுத்து. தன்னை ஒருவன் புறங்கூறினான் என்று கேட்டவன், கூறியவன் கூறிய அளவுக்கு மேலும், அவன் மன முளையும்படியான இழிந்த பழிகளை நாடி எதிரே கூறுவானாகலின் திறம் தெரிந்து என்றார். பகச்சொல்லி=தம்மைவிட்டு நீங்கும் வழியில் புறங்கூறி. கேளிரையும் என்பதில் உள்ள சிறப்பு உம்மை தொக்கது. துன்னியார்=தம்மொடு நெருங்கிப் பழகுபவர். தூற்றும்=பலருமறியப் பரப்பும். என்னை=யாது. ஐ-சாரியை. கொல்-ஐயத்தைக் காட்டும் இடைச் சொல். பொறை=உடற்பாரத்தை. எல்லாவற்றையும் தாங்குதல் நிலத்

TB
0-,6(S)

திற்கு இயல்பாயினும், இது பொறுத்தற் கரிது என்னும் கருத்தால் “ அற னேக்கி ஆற்றும் கொல்'' என்ருர்.

10. இதனுல் புறங்கூறுதலை ஒழிப்பதற்கு வழி சொல்லப்படுகிறது. அயலார் குற்றங் காணுவதைப்போல் தன் குற்றத்தையும் தான் கண்டு கொள்ள வல்ல நடுவுநிலைமை மிகவும் அருமையாதல் நோக்கிக் ‘ காண்கிற் பின் ' என்ருர்.

1. கல்வி. கற்றற்குரிய நூல்களைக் கற்றல். கற்கவேண்டும் என் பதும், கற்கவேண்டிய நூல்களும், கற்கும் முறையும், கற்றதனுற் பயனும் இதிற் கூறப்படுகின்றன. கசடு அற = பழுதற. பழுதறக் கற்றலாவது ஐயம், திரிபுகளை நீக்கி, மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயிறல். இதில், கற்கும் கருவிநூல்கள் கூறப்படுகின்றன.

2. எண் = கணிதம். எழுத்து = இலக்கணம். முதலிரண்டு ‘என்ப’ என்னும் சொற்கள் சொல்லப்படுவன என்று அஃறிணைப் பன்மைப் பெயராய் நின்றன. பின்னைய ‘ என்ப ’ என்பது உயர்திணைப் பன்மை வினையாய் நின்றது.

3. இதில் கற்ருரதுயர்வும், கல்லாதாரிழிவும் தொகுத்துக் கூறப் படுகின்றன.

4. கற்ருரதுயர்வு = வகுத்துக் கூறப்படுகிறது. தலைக்கூடி = சேர்ந்து. உள்ள = (இனி இவரையாம் எங்ஙனம் கூடுவோம் என்று) நினையுமாறு. புலவர் = கற்றறிந்தார்.

5. கற்ருரதுயர்வும் கல்லாதாரிழிவும் கூறப்படுகின்றன. உடை யார் = செல்வர். இல்லார் = நல்கூர்ந்தார்; வறிஞர். கற்ருர் என்பதற்குப் பிறகு தலையாயினுர் என்ற சொல்லை வருவிக்க.

6-10. இவை ஐந்து பாட்டாலும் கல்வியது சிறப்புக் கூறப்படு கிறது. கேணி = கேணியிலுள்ள நீர். சாந்துணையும் = இறக்குமளவும். பிறர் நாடுகளும் ஊர்களும் தம்முடையன போலவரும், என்பார் யாதானும் நாடாம், ஊராம் என்ருர். ஒருமை = ஒருபிறப்பு. எழுமை = ஏழு பிறப்புகள் அல்லது ஏழுவகைப் பிறவிகள். அவையாவன. ஊர்வன, நீர்வாழ்வன, பறவைகள், விலங்குகள், மரங்கள், மனிதர், தேவர். ஏமாப்பு = சென்று உதவுதல்; நன்னெறிக்கண் செலுத்துதல். காமுறுவர் = விரும்புவர். தாம் இன்புறுதலாவது = நிகழ்வில் (கற்கும்போது) சொற்பொருள்களின் சுவை நுகர்வதாலும், புகழ், பொருள், பூசைகளைப் பெறுதலாலும் எதிர்காலத்தில் அறம் வீடுகளைப் பயத்தாலாலும் இடையருத இன்பம் எய்துதல். உலகு இன்புறுதலாவது இப்படிப்பட்ட மிக்காரோடு கலந்து அறியாதன வெல்

லாம் அறியப்பெற்றோமே என்றும், (கல்வியின்பத்தால்) என்றும் இளமையா யிருக்கப்பெற்றோமே என்றும் உவத்தால். கேடுஇல் = அழிவில்லாத. விழு = சீரிய, மேலான. மாடு = செல்வம். கல்விக்கு அழிவில்லாததாவது, பங்காளிகள் (தாயத்தார்) கள்வர், வலியர், அரசர் என்றிவராற் கொள்ளப் படாமையும் வழிபட்டார்க்குக் கொடுத்தழிக் குறையாமையுமாம்.

## 2. நாலடியார்

சங்கமருவிய பாடல்களைச் சான்றோர்கள் பத்துப் பாட்டு, எட்டுத் தொகை பதினெண்கீழ்க் கணக்கு என்றெல்லாம் தொகைகளாகத் தொகுத்தனர். அவற்றுள் பதினெண்கீழ்க் கணக்கில் முதலாவதாக வைத்தெண்ணப்படுவது நாலடியார். சிறந்த அறவுரைகளும் அறிவுரைகளும் தன்னகத்தே கொண்டுவிளங்கும் இத்தமிழ் நூல் "நாலுமிரண்டும் சொல்லுக்குறுதி" யெனத் திருக்குறளோடு ஒப்பமதித் தெண்ணத்தகுவதாம். 'ஆர்' என்னும் உயர்வுச் சிறப்புவிகுதி வந்தது காண்க. திருக்குறள் போலவே முப்பாலாய் விளங்கும் இந்நூலுக்குப் பதுமனர் என்னும் புலவர் பாகுபடுத்தி அதிகார அடைவு முதலிய வகுத்துத் தொகுத்தார் என்பர். அறத்துப்பாலில் 'கல்வி'யிலிருந்து பொறுக்கி எடுக்கபட்ட ஐந்து செய்யுட்கள் நமக்குப் பாடமாக வந்துள்ளன.

நாலடியாரை முற்றத்துறந்த சமணமுனிவர்கள் பலர் இயற்றினர். குறள் வெண்பாக்களாலாகிய நூல் குறள் என்றே ஆகுபெயராய்ப் பெயர் பெற்றுர்போல், நாலடியால் வரும் விருத்தம் முதலிய பிற பாடல்களைக் குறிக்காமல் நேரிசை, இன்னிசை வெண்பாக்களையே குறிக்கும் 'நாலடி' என்ற சொல், பின் அவ்வெண்பாக்களால் ஆகிய நூலையே கருவி ஆகுபெயராய் உணர்த்திற்று. இது பலரும் வேற்றுமையின்றி ஏற்றுக் கொள்ளுவதற்குரிய பொது அறவுரைகள் பலவற்றைக் கொண்டதாயிருக்கிறது.

### குறிப்புரை.

1. இம்மை = இப்பிறப்பின் பயனாகிய மெய்யுணர்வை. எம்மை = எத்தன்மையான. மம்மர் = மயக்கம் (அறியாமை). கல்வியை மருந்தாக உருவகப்படுத்தி, மம்மரை நோயாக உருவகப்படுத்தாததால் 'ஏக தேச உருவகம்'.

2. களர் நிலம் = உவர் நிலம். நெல்லின் = நெல்லைப்போல் அல்லது நெல்லைவிட. 3. உழி = இடத்தில் இருந்து. கோட்படா = கவரப்

படமாட்டது. வாய்த்து ஈயில்=கிடைக்கப்பெற்று, பிறருக்குக் கொடுத்தால். தீவாயில் எனமாற்றி, நெருப்பினுல் அழியாது என்று கொள்ளினுமாம். செறின்=கோபித்தாலும். வவ்வார்—பறித்துக் கொள்ள மாட்டார்கள். எச்சம்=ஆக்கம். விச்சை=கல்வி. 'கேடில்விழுச் செல்வம் கல்வி ஒருவற்கு, மாடல்லமற்ற பிற' என்ற குறட்பாடப் பகுதியோடு ஒப்பிடுக. இதில் வேற்றுமையணி பயிலுவது காண்க.

4. தெள்ளிதின்=தெளிவாக. அமைவுடைய=சாரமாகவுள்ள (ஞான நூல்களையே). குருகு=அன்னப்பறவை.

5. தவலரும்=தவறுதலில்லாத. இகல்=பகைமை. எஃகு=அறிவுக்கூர்மை. குழீஇ=கூடியிருந்து. குழூமி என்னும் சொல் குழீஇ என அளபெடுத்தது. சொல்லிசையளபெடை. நகலின்=மகிழ்தலைப்போல்; மகிழ்தலைக்காட்டிலும். உம்பர்=மேல். அதாவது விண்ணுலகத்தில். உறைவார்=வாழும் தேவர், பதி=அமராவதி.

---

# 3. புறத்திரட்டு

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கம்வரை வாழ்ந்த புலவர்கள் யாத்த தமிழ் நூல்களையும், கவிதைகளையும், அவற்றின் சொல், பொருள் நயங்களையும் முற்றும் முடிய ஒருவர்கற்றுச் சுவைத்தல் என்பது எல்லோருக்கும் இயலாதத் தொன்றும். ஆதலால் அப்பெரு நூல்களிற் பலவற்றினின்றும் திரட்டப்பட்ட ஒரு நூல் இன்றியமையாது வேண்டப் படுவதாயிற்று. புறத்திரட்டு என்னும் இந்நூல் இக்நோக்கம் கருதியே 15-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுந்தது. இதைத் தொகுத்தோர் திருக்குறளைப் பின்பற்றியே நூலின் பிரிவுகள், அதிகார அடைவு, நூலின் வைப்புமுறை, முதலியவற்றைச் செய்திருக்கின்றார். நாரத சரிதை இரும் பல் காஞ்சி, ஆசிரியமாலை முதலிய இறந்துபட்ட நூல்களிலிருந்து பாடல் கள் திரட்டப்பட்டிருப்பதாலும், வளையாபதி, குண்டலகேசி, முத்தொள் ளாயிரம், தகடூர்யாத்திரை முதலிய நூல்களிலிருந்து மேற் கோள்கள் வருவ தாலும், தமிழ் இலக்கியத்துறை ஆராய்ச்சி யாளர்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும். இதுவே, அந்நூல்கள் இறவாமல் அக்காலம்வரை இருந்து வந்தன என்று நமக்கு எடுத்துக் காட்டிக்கொண்டிருக்கிறது.

நமக்குப்பாடமாக வந்துள்ள செய்யுட்கள் அறத்துப் பாலில் 33-ம் அதிகாரமாகிய "பொய்யாமை" யிலிருந்து எடுக்கப்பட்டனவாகும்.

## குறிப்புரை

1. ஊன்கெடினும் = சதை அழியினும். இடை மிடைந்த = நடுவிற் கலந்த.

2. எச்சம் = ஆக்கம்; பொருள். எஞ்சி நிற்பது என்று பொருள் கொண் டால் மக்கள், புகழ் முதலியனவும் குறிக்கும். மலர்மகள் = செந்தாமரை மலரில் உள்ள திருமகள். (செல்வம்) வெண்டா மரை மலரில் இருக்கும் கலை மகள் என்று கொண்டால் (கல்வி) 3 பொய்யின்மை = மெய். பூண்டு = அணி யாகக்கொண்டு. வைகல் = நாள்தோறும். கௌவையில்லுலகு = துன்பமற்ற உலகம். (வீடு) 4. செல்லல் = துன்பம். நலிவு = துன்புறுதல். கடிந்து ஓம்புமின் = ஒழித்துப் பரிகரியுங்கள். 5. புறத்திடுமின் = நீக்குங்கள்.

---

# III. தொடர் நிலைச்செய்யுட் பகுதி

## 1. மணிமேகலை

செந்தமிழ் மொழியிற் சிறந்து விளங்கும் காவியங்களில் ஐம்பெருங் காவியங்கள் பலராலும் போற்றப்படுவன. அவற்றுள் தலை சிறந்தனவாய்க் காலத்தாலும் முந்தியனவாயுள்ளன மணிமேகலையும் சிலப்பதிகாரமும். கடைச் சங்கப்புலவரில் ஒருவராகிய சீத்தலைச் சாத்தனுர் இயற்றியது மணிமேகலை. சிலப்பதிகாரத்து இவர் தண்டமிழ்ச் சாத்தன், தண்டமிழா சான், நன்னூற்புலவன் என்றெல்லாம் பலபடியாகப் புகழப்படுகின்றூர். சாத்தனுரின் சீத்தலையைப்பற்றிய கதை ஒருபுறமிருப்ப, இவர் சீத்தலை என்னும் ஊரிற் பிறந்தார் என்றும் கூறுவர். சிலப்பதிகாரத் தலைவனுகிய கோவலனது மகள் மணிமேகலை என்பளின் வரலாறுதலின் இந்நூல் அப் பெயர் பெற்றதோடு சிலப்பதிகாரத்தோடும் தொடர்புடையது. மணிமேக லைத் துறவென்று இதுபெயர் பெற்றது. இதிற் கூறப்பட்டுள்ள வரலாறு நிகழ்ந்த காலமும், இந்நூலாசிரியர் காலமும் ஒன்றே. ஆதாவது கி. பி. இரண்டாம் நூற்றூண்டின் பிற்பகுதி என்பர். நமக்குப் பாடப்பகுதியாக வந்திருப்பது பதினூறுவது காதையாகும்.

மணிபல்லவத்தில் கோமுகி என்னும் பொய்கையினின்றும் வெளிப் பட்ட 'அமுதசுரபி' என்னும் வற்றுத பாத்திரத்தைப் பெற்று, அதைக் கொண்டு புகார் நகரில் பசிப்பிணியைப் போக்கப் புறப்பட்டு, அதில் முதன் முதல் கற்புடைய மாதர் இடும் ஐயத்தையே ஏற்கவேண்டும் என்று மணிமேகலை சொன்னுள். அதைக்கேட்ட உலக அறவி என்னும் அம்ப லத்தில் தங்கியிருந்த வித்தியாதரப் பெண்ணுகிய காயசண்டிகை கற்புடை மாதர்களுள் மிகமேம்பட்டவளாகிய ஆதிரையின் கையால் முதன் முதல் பிச்சை ஏற்றல் நலம் என்று கூறி ஆதிரையின் கற்புமேம்பாட்டை ஏற்ற எடுத்துக் காட்டுகளோடு விளக்கினுள். அவள் கற்பின் சிறப்பே ஆதிரை பிச்சையிட்ட காதையில் விளக்கப்படுகிறது. இதில், நம் பகுதி அவள் கணவனுகிய சாதுவன் சிறப்பைத் தெரிவிக்கிறது. வேற்று நாடு சென்று பொருள்தேட எண்ணிச் சில வணிகருடன் கப்பலேறிச் சென்று, கப்பல் கவிழ்ந்து, நாக நாட்டிற்கு அடித்துக்கொண்டுபோகப் பட்ட சாதுவன் நாகர் குருவைக்கண்டு, அவனுக்கு நல்ல அறவுரைகளை எடுத்துக் கூறுவ தாகும்.

### குறிப்புரை

1. கோறல் = கொல்லுதல். கயக்கறு மாக்கள் கலக்கமற்ற அறிவினையுடையோர். 2-3. இவ்வடிகளில் "உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்னும் குறளின் சொல்

லும் பொருளும் பயிலுவனகாண்க. சாதல் உறங்கலும், பிறத்தல் விழித்தலுமென நிரனிறை.

5. அருநரகு = பொறுத்தற் கரிய நரகம். மீளுவதற்கரிய நரகமுமாம் 6. உரவோர் = அறிஞர்.

7. சடுநகை எள்ளல் பற்றிப் பிறந்தது. 10. எவ்வணம் = எவ்வாறு?

11. செவ்வனம் = நன்கு. 12. உற்றதை = உறுகின்றதனை; தட்பம் வெப்பம் முதலிய ஊற்றினை உணர்தல். 14. தடிந்து = வெட்டி. 30. உடைகலமாக்கள் = கடலிற் மரக்கலம் உடையப் பட்ட மக்கள்.

31. ஓம்பி = காத்து. மூத்து விளிமா = முதுமையுற்று இறக்கும் விலங்கு. 38. விரைமரம் = சந்தன மரங்கள். 39. நிதிக் குப்பை = பொருட்குவை. எடுத்தனன் = எடுத்து. முற்றெச்சம். 41. வங்கம் = மரக்கலம்.

47. புனையா ஓவியம் = அணிசெய்யப்படா ஓவியப்பாவைபோல. வண்ணங்கொண்டெழுதாத வடிவைக் கோட்டின ஓவியம் என்றுமாம். பிச்சையேற்கும்போது துறவறத்தினர் மோனமாக நிற்றல் வேண்டும் என்பர் ஆதலால் "புனையா ஓவியம் போல" என்றார்.

## 2. சிலப்பதிகாரம்

'நெஞ்சை அள்ளும்' சிலப்பதிகாரம் என்று போற்றப்பெற்று ஐம்பெருங் காவியங்களுள் ஒன்றாக விளங்கும் இது சேர மன்னன் நெடுஞ்சேரலாதனது மைந்தரும், சேரப் பெரு மன்னராகிய செங்குட்டுவனது தம்பியாருமாகிய இளங்கோவடிகள் இயற்றியது. இளமையிலே 'குணவாயிற் கோட்டத்து', அரசு துறந்திருந்தமையின் 'அடிகள்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார். சாத்தனாரின் நண்பர். "அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றா"கும்; "உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்து"வர்; "ஊழ்வினை உருத்து வந்தூட்டும்" என்னும் உண்மைகளைக் கண்ணகியின் சிலம்பு காரணமாக இவர் பாடுதலின் இந்நூல் சிலப்பதிகாரம் என்னும் பெயர் பெற்றது என்பர். இவரது காலம் கடைச்சங்கத்திறுதியாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டு எனக்கொள்வர். இது இயலிசை நாடகமாகிய முத்தமிழும் விரவி வருதலின் இயலிசை நாடகப் பொருட்டொடர்நிலைச் செய்யுளாகும். இளங்கோ சமயப்பொது நோக்குடையவர் என்பதும், இவர் நடுநிலையோடு எழுதவல்லவர் என்பதும் நூலைப்படிப்போருக்குப் புலனாகாது போகாது.

நம் பாடப்பகுதி இந்நூலின் பதினைந்தாங் கதையாகும். முப்பகுதிகளில் நடுவதாகிய மதுரைக் கண்டத்திலுள்ளது. புகார்க்காண்டம் வஞ்சிக் காண்டம் என்பன பிற பகுதிகளாம்.

கவுந்தி அடிகளோடு மதுரைவந்து புறஞ்சேரியில் தங்கினர் கோவலனும் கண்ணகியும். புறஞ்சேரியில் இருப்பது தகாது; ஊருக்குள் போதலே நன்று என்று அடிகள் கூறுங்காலை, ஆண்டுவந்த மாதரி நல்லாளிடம் கண்ணகியை அடைக்கலமாக அடிகள் ஒப்புவித்த செய்தியைத் தெரிவிக்கும்.

## குறிப்புரை

1. புறத்துறை=புறம்பின்கண் பள்ளி. அரைசர் பின்னோர் வாணிகர். உரையில்=(மாசாத்து மகன் என்னும்) புகழால். 13. ஐயனுக்குப் பெண்பால் ஐயை. 14. ஆப்பயன்=பால் முதலியன. 15 கொடும்பாடு= கொடுமை. 16. தீதிலள்=மனத்தில் அழுக்காறு இல்லாதவள். செவ்வியள்=மனக்கோட்ட மில்லாதவள். 21. பெறுநரின்=பெற்றூர் போல 28. உடீஇ=உடுத்து. தொல்லோர் சிறப்பின்=பழையோராகச் சிறப்பித்துக் கூறப்பட்ட ஆயம். 32. வண்ணச்சீறடி மண்மகள் அறிந்திலள்=அழகிய சிறிய அடியை முன் மண் மகளும் கண்டறியாள். அதாவது அகம்விட்டுப் புறப்பட்டறியாள். இவள் கால் கொப்புளங்கண்டு நிலத்திற் பாவவில்லை, என்றுமாம். 35. தன்றுயர் காணா=தனது துயரெனவேறாகத் தனித்துக் காணாத. (கணவனது துயரைத் தன் துயராகவே கருதி என்க.)

46. முளையிள=இளமுளை என மாற்றுக. இளைய முளைபோன்ற. முதுக்குறை=சிறிய பருவத்தே பெரிய அறிவினையுடைய. 47. செல்சுடர்= சுருங்கின சுடரையுடைய. 49. மறித்தோள் நவியம்=ஆட்டு மறியையும் கோடரியையுமுடைய தோளிலே. 51. மிளை=காவற்காடு. கிடங்கு=அகழி. வளைவிற்பொறி=வளைந்து தானே எய்யும் எந்திரவில். 52. கரு விரல் ஊகம்=கரிய விரலையுடைய குரங்குபோலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறி. 53. பரிவுறு வெந்நெயும்=காய்ந் திறைத்தலாற் சேர்ந்தாரை வருத்தும் நெய்யும். பாகடு குழிசியும்=செம்புருக்கும் மிடாவும் (அல்லது) அங்ஙனம் இறைத்தற்குப் பாகு காயும் குழிசிகளுமாம். 55. தொடக்கு= கழுக்கோல்போலக் கழுத்திற்பூட்டி முறுக்கும் சங்கிலியும். (கயிற்றுத் தொடக்கும் ஆகும்.)

56. கழு=கழுக்கோல். புதை=அம்புக்கட்டு. புழை=(அம்பு வைக்கும்) அறைகளும். 61. ஞாயில்=குருவித் தலைகள். நாட்கொடி=நாள் தோறும் வென்று வென்று எடுத்தகொடி. நுடங்கும்=அசையும். கோவலர் மடந்தை=மாதரி. (இடைக்குலப் பெண்.)

## 3. பெரிய புராணம்

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் கடைசியாகச் சேர்க்கப்பட்டுள்ள இந்நூல், பெருமை பெற்ற சிவனடியார்களது வரலாற்றை யுணர்த்துவது. பெரிய என்னுஞ் சொல் பெரிய அல்லது விரிந்த என்னும் அளவைக் குறிக்காது, தன்மையை யுணர்த்துகின்றது என்று கொள்ளலே சிறப்புடையது. பெரிய என்பது உருவம், வலிமை, செல்வம், பதவி, பட்டம் முதலிய வற்றால் பெரியார் என்று பொருள்படாமல், மக்களுள் பெரும்பாலோர் செய்வதற்கரிய செயல்களைச் செய்து பெருமைபெற்ற சிவனடியாரது பெருமையைக் குறிக்கும். ஆசிரியரும் தமது நூலின் அவை யடக்கத்தில் "அளவிலாத பெருமைமையராகிய, அளவிலாவடியார்புகழ் கூறுகேன்" என்றார். திருக்குறளில் வரும்,

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"
"பெருமை யுடையவ ராற்றுவ ராற்றின்
அருமை யுடைய செயல்"

என்னுங் குறள்களுக்கு, இச் சிவனடியார்களை எடுத்துக்காட்டாக்கலாம்.

புராணம் என்னும் சொற்குப் பழமையுடையது என்பது பொருள். ஈண்டு, பழைய வரலாறு அல்லது கதை என்னும் பொருட்டாய் நூலுக்குப் பெயராயிற்று. இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் 'திருத்தொண்டர் புராணம்' என்பது. இதை,

"இங்கித னாமங் கூறி னிவ்வுல கத்து முன்னாட்
டங்கிரு ளிரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய விருளை யேனைப் புறவிருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போனீக்குத் திருத்தொண்டர் புராணமென்பாம்"

என்னும் பாயிரச் செய்யுளால் அறியலாகும். 'பெரிய புராணம்' என்னும் பெயர் இந்நூலுக்கு எக்காலத்து, யாரால் இடப்பட்டது என்று அறிவதற்கில்லை. ஆனால், 'பெரிய புராணம்' என்பதைக் குறிக்குங் குறிப்பாகிய 'மாக்கதை' என்னுஞ் சொற்றொடர் "எடுக்கும் மாக்கதை" என வரும் நூற்பாயிரச் செய்யுளில் காணப்படுகின்றது.

சிவனடியார் (தனியடியார் அறுபத்துமூவரும், தொகையடியார் ஒன்பதின்மருமாகிய) எழுபத்திருவரது வரலாறுகள் இதனுள் அடங்கியுள்ளன. அன்பின் பெருமை, பயன் ஆகிய இவை அங்கையினெல்லி

போல இனிதின் விளங்கவும், பக்திச்சுவை ததும்பி வழிந்தோங்கவும், ஏனைச் சுவைகள் ஆங்காங்கு தோன்றவும் அமைந்த இவ் வரியநூல், பலவகை மரபுகளினுந் தோன்றித் திகழ்ந்து, பயன்கருதாது பேரன்புடன் இறைவனை வழிபட்டு, அவன் திருவருள் பெற்ற சிவனடியாரின் வரலாறுகளைத் தொகுத்து இனிய செந்தமிழ் நடையில் கூறுவது. சமயத் தொடர்பான நூலாயிருப்பினும், இலக்கிய நயங்களும் சுவைகளும் பொருந்திய சிறந்த நூல்களில் ஒன்றாக இது விளங்குகின்றது. இந்நூலிலுள்ள பாக்கள் படிப்போர்க்குங் கேட்போருக்கும் ஓர் உயர்ந்த உணர்ச்சியை எழுப்பிப் படிக்குந்தோறுங் கேட்குந்தோறும் பின்னும் புதிதாய் இன்பந்தருவனவாயுள்ளன. இரும்புக்கடலை போன்ற, அல்லது வழங்கும் உரைபோன்ற பாக்களாக இல்லாமல் கதலிபாகமாய்ப் படிக்கப் படிக்க வாய் மணப்பனவாக வுள்ளன.

சைவசமய ஆசிரியர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனர் **திருத்தொண்டத் தொகை**யில் சிவனடியார்களின் அடிமைத் திறத்தைத் தொகுத்துப் பாடினர். பின்னளில், சைவத் திருமுறை வகுத்த **நம்பியாண்டார் நம்பி**கள், அதை ஒட்டி வகைசெய்து **திருவந்தாதி** பாடினர். இவையிரண்டையும் விரித்தே திருத்தொண்டர் புராணத்தைத் தாம் பாடியதாகச் சேக்கிழார் கூறுகின்றார். தேவாரங்கள், காரைக்காலம்மையார் பிரபந்தங்கள், திருமூலர் திருமந்திரம்; கழறிற்றறிவார் பொன் வண்ணத்தந்தாதி, தெய்வவுலா முதலிய நூல்களையும் ஆராய்ந்து ஆதாரமாகக் கொண்டு சேக்கிழார் இப் புராணம் பாடினர் என்பது ஆராய்ச்சி வல்லார்க்குப் புலப்படும்.

இக்நூலாசிரியாகிய **சேக்கிழார்**. ''சான்றோருடைத்து''; எனத் தமிழ் மூதாட்டியார் அறுதியிட்டுச் சாற்றிய பண்டைமேம்பாடுடைத் **தொண்டை நன்னாட்டின்கண்**, 24 கோட்டங்களுள் ஒன்றாகிய **புலியூர்க் கோட்டத்**துள், **குன்றத்தூரில் தாளாண்மைமிக்க வேளாண்மரபில் சேக்கிழார் குடியில்** பிறந்து **அருண்மொழித்தேவர்** என்னும் பிள்ளைத் திருநாமத்தோடு வளர்ந்தார். சேக்கிழார் என்பது குடிப்பெயர். இப்பெயரே இவருக்குப் பிற்காலத்தில் சிறப்பாக வழங்கியது. இவரது தம்பி **பாலருவாயர்**. சேக்கிழாரது பெருமையைக் கேள்விப்பட்டு, அக்காலத்துச் சோழவரசன் (இரண்டாம் குலோத்துங்கன்) இவரை வரவழைத்து, இவரது கல்வி, கேள்வி, குணநலம் முதலியவற்றை வியந்து, தன் முதன் மந்திரியாக்கி, ''உத்தம சோழப் பல்லவன்'' என்னும் பட்டப் பெயரையுங் கொடுத்தான்.

சேக்கிழார் தமது வேலையில் தவறின்றி நடந்துவருகையில், சமண சமயம் மிக்கோங்கிச் சைவத்தை அடக்கி நின்றது. அரசனும் ஒருவாறு

சைவசமயத்தைப் போற்றாது சமண நூல்களில் ஈடுபட்டிருந்தான். இது கண்ட ஆசிரியர், சமயம் அறிந்து இம்மை மறுமைப் பயன்களைத் தரவல்ல சிவ கதைகள் பல இருக்கின்றன என்று சிவனடியார்களின் பெருமையையும் தெய்வத்தன்மையையும்பற்றிக் கூற, அரசன் அவ்வடியாரது அரிய செயல்களை எல்லாம் விரித்து ஒரு புராணமாகப் பாடித் தரும்படி அவரைக் கேட்டுக்கொண்டான். அப்படியே அவரும் திருச்சிற்றம்பலஞ் சென்று, கடவுள் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுக்க, ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து பெரிய புராணத்தைச் செய்து முடித்தனர். கடவுளருளிய அசரீரியின்படியே சோழனும் தில்லைக்குச் செல்ல, அங்கு, தில்லை மூவாயிரவர் முன்னிலையில் அரசனும் அன்பருங்கேட்க, சேக்கிழார் புராணத்தை அரங்கேற்றினர். அரங்கேற்ற முடிவில், புராணத்தையும் ஆசிரியரையும் யானைமீது ஏற்றி, தானே ஆசிரியருக்குப் பின்னிருந்து கவரி இரட்டி, வீதி வலம் வந்து ஆசிரியர்க்குத் "தொண்டர்சீர் பரவுவார்" என்னுஞ் சிறப்புப் பெயரையுங் கொடுத்து அரசன் பெருமை செய்தான். சேக்கிழாரது காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பர்.

பெரிய புராணம் இரண்டு காண்டங்களாகவும், ஒவ்வொரு காண்டமும் பல சருக்கங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் நம் பாடப் பகுதி முதற்காண்டத்தில் தடுத்தாட்கொண்ட புராணத்தில் உள்ளது. நம்பி ஆரூராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருமணப் பந்தரில் சிவபெருமான் முதிய மறையவர் வடிவில்வந்து திருமணத்தைத் தடுத்து ஆட்கொண்ட செய்தியைக் கூறுவது.

## குறிப்புரை

1. தெள்ளும்=இனிய. சங்கம்=மணச்சங்கு. ஒருமணம்=ஒப்பற்ற திருமணம்.

2. கண்ணிடை கரந்த கதிர்=கதிர் கண்ணிடை கரந்த எனமாற்றுக. ஒளி பொருந்திய நெற்றிக் கண்ணை இடையில் மறைத்த. வெண்படம்=வெள்ளிய ஆடை. சழங்க=துவள. குளிர்ச்சி பொருந்திய பிறைமதி முழு மதியாகி வெண்ணிலவு பொழிவது போன்றிருந்தது வெண்ணரை. 3. ஆதபம்=வெயில். 4. பண்டி=வயிறு. சரி=தொங்குகின்றன. சழங்கல் உடை=நழுவும் ஆடை. குசை=தருப்பை. (புல்) வேணு=மூங்கில். 6. நம்பி=நம்பியாரூரர். முந்தை=பழைய. சிவ ஞானதீக்ஷை முறைகளில் கண்ணால் அருளோடு நோக்கல், வாயால் சொல்லல், கையால் தொடுதல், ஆகிய மூன்று உண்டு. அவற்றுள் தொடக்கத்தில் முதலிரண்டும் ஆனமை இப்பாவால் அறியலாம். மூன்றாவது பின் நிகழும். 7. மன்றல்=திருமணம்.

மடங்கல்=சிங்கம். இவண்=இங்கு. "நன்று உமது நல்வரவு தங்கள் தவம்," என்று சொல்லி, என்று பொருள் கொள்ளுக அன்றி; "நன்று உமது நல்வரவு. நங்கள் தவம் என்ற்ற நின்றது இவண்" என்றுமாம். இவண் = இங்கு.8.பிஞ்ஞகன் = சிவ பெருமான்.(சடைக்கோலமுடையோன்) முன்னுடையது = ஆண்டான் தன்மை ஐயரிடத்தும், அடிமைத் தன்மை ஆரூரரிடத்தும் தொன்று தொட்டே ஏற்பட்டன வாதலின் முன்னுடையது என்றார். வேள்வி= திருமணம். 9. நிகர் = ஒப்பு. எல்லை முடிவு இல்லான் = முதலு மிறுதியுமில்லாத ஆண்டவன். 10. மறையோர் = மறையோர்களே! விளி.

வெகுண்டார் = கோபித்துக் கொண்டார். நக்கார் = சிரித்தார். 12. நுடங்கி = தள்ளாட. ஏடா. அடிமையை அழைக்கும் முறை. 13. மாசிலா = குற்ற மற்ற. வள்ளல் = நம்பியாரூர். ஆசில் = குற்ற மில்லா. 14. வித்தகம் = விளையாட்டுமொழி. சாமர்த்திய மொழியுமாம். பணியை நினைப்பூட்டிய வாறு. 16. காணற்பாலையோ = கண்டு உணர்தற்கு வல்லையோ? அவைமுன் = சபைமுன். காட்ட = காட்டப்பட்ட பிறகு. நாவலூரர் ஆண்டவனருளால் இன்னும் மெய்யுணர்வு பெறாமையால் வெகுண்டெழுந்து தொடரலுற்றார் என்க. 17. ஆவணம் = அடிமை ஓலை. காவணத்திடையே = பந்தரின் ஊடே. பூவணத்தவரை = அழகிய நிறத்தை உடையவரை. திருப்பூவணம் என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ளவரை. ஏவணச்சிலையினர் = அம்பு பூட்டிய மேரு என்னும் வில்லையுடையவரை. 18. எழுதும் ஆள் ஓலை = எழுதப்பட்டிருக்கும் அடிமை ஓலை. கீறி = கிழித்து 19 உழைநின்றார் = அருகில் நின்றவர்கள். பிணங்குகின்ற = சண்டை யிடுகின்ற. 20. இருப்பும் = இருப்பிடம். சேயது அன்று = தொலைவில் இல்லை. அறத்தாறு = அறநெறி. தருமவழி. நிரப்பினன் = உறுதிப் படுத்தினன். 21. குழை = குண்டலம் (காதணி) கோது = குற்றம். பழைய மன்றாடி = பழகிய அற மன்றத்தில் (நியாயசபையில்) வழக்காடி. அம்பலத்தாடி என்ற பொருளும் கொள்ள இடமுண்டு. 22. ஆதியில் மூலஓலை = ஆதியிலே எழுதிக் கொடுத்த முதல் ஓலை. பிரணவ மந்திரம் என்னும் குறிப்பும் இருக்கிறது. 23. திரிமுகம் திரிகின்ற அதாவது இழுக்கின்ற முகமுடைய. 24. வேதபாரகர் = மறையவர்களில் மிக்கார்.

25. இசைவு = பொருத்தமுடையது. 26. தனியாய் = துணையில்லாமல். ஆண்டவன் தத்துவக்கட்டில்லாதவன் என்பது தொனிக்கிறது. 27. சார = பொருந்து மாறு; ஏற்குமாறு. அசைவில் = மனக்கவலையற்ற. (என்னநேருமோ என்ற) அசைவற்று என்றுமாம். 28. மனத்தினால் உணர்தற் செட்டாமாயை = அந்தணர்க்கு அந்தணர் அடிமையாதலும்,

அதற்கென ஓலையும், உலகில் நேராத வழக்கை மறையோர் கேட்க இசைந்ததும், பிறவும் உணர்விற் கெட்டாமாயை என்றபடி. ஆண்டவன் அருள் ஆடல் பசு பாச உணர்விற் கெட்டாதது என்பது கருத்து 29. செவ்விய=நடு நிலை உடைய. ஏற்ற=ஏற்றி உறுதிப்படுத்த. 30 ஆட்சியில்=நடை முறையில் (அநுபவத்தில்) ஆவணத்தில்=ஓலையில் (எழுத்தில்) அயலார்தங்கள் காட்சியில்=சான்றில் (சாட்சியில்). மூட்சியில்=மூண்டு எழுந்த கோபத்தில். படி ஓலை=முதல் ஓலையைப்பார்த்து எழுதிய ஓலை. 32. இருள் மறை மிடற்றோன்=கரிய நஞ்சை மறைத்த கழுத்தை உடைய சிவ பெருமான். கரணத்தானும்=கணக்கனும். 33. செய்கை=எழுதிக் கொடுப்பது. செய்கைப் பெருமுனி என்று கொண்டு=ஒழுக்கமும் பெருமையு முடைய முனி என்றும் பொருள்படும். இருமையால்=உள்ளும் புறமும்.

34. மேல் எழுத்திட்டார்கள்=சான்றுக்கை யெழுத்து (சாட்சி) இட்டார்கள். பேரனுர்=பாட்டனுர். தேசு=அழகு, 35. இவனே காண வல்லான்=இவன் சிறுவனுதலின் பாட்டன் கையெழுத்தை அறியவல்லான் அல்லன் என்றபடி. 36. மருண்டது=மயக்கம். 38 வருமுறை=தலை முறையாக வந்து கொண்டிருக்கும். வாழ்க்கையும்=வாழ்க்கைக்குரிய நிலம், புலம், பொருள் முதலியன.

39. திருவருட்டுறை=திருவெண்ணெய் நல்லூர்க்கோயிலின் பெயர். 40. நம்பர்=சிவபெருமான். தனித்தொடர்ந்தழைப்ப=தனியாகப் போய் அழைக்க; தத்துவங்களினின்று விடுதலையடைந்து அழைக்க,உம்பர்=விண். 41. முன்பு=திருக்கயிலையில் சுந்தரர் அணுக்கத்தொண்டராயிருந்தார். முன்னிய=மனத்தாற் கருதிய. வேட்கை=காதல் (கயிலையில் சேடிமார்மீது காதல் கூர்ந்தது.) 42. கேளா=கேட்டு. செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். புளகம்=மயிர்ச்சிலிர்ப்பு. மன்றுளீர்=முன்னே "பழைய மன்ருடி" என்றது இங்கே நம்பியாரூரருக்கு விளங்கலாயிற்று. 43. ஓசை ஐந்து=தோல், துளை, நரம்பு, மிடற்று, கஞ்சக் கருவிகளின் ஓசை. அண்ணல்=பெருமையிற் சிறந்த ஆரூரர். 44.சொற்றமிழ்=இன் சொற்றமிழ்; புகழ்த் தமிழ். 48. மெய்த் தாயினும் இனியான்=உமையம்மையார் திருவருள். அத் திருவருள் தாய்மையைக் குறிப்பது. அத்தாய்மை உலகிலுள்ள உயிர்த்தாய்மைகட் கெல்லாம் வற்ரு ஊற்ருயிருத்தலானும், அதற்கு ஒத்ததும், மிக்கது மாய தாய்மை யாண்டும் இல்லாமையானும், "மெய்த் தாயினும் இனியான்" என்ருர். 49. புரம்=முப்புரம். 50 மணம் அழியும் திருமணம் தவறிய. சிவவேதியன் மகள்=சடங்கவி சிவாசாரியார் மகளாகிய மணமகள். உணர்வழி=நினைக்கும் (தியானிக்கும்) வழி. அயலோர் தவமுயல்வர் = நம்பியா ரூரரைத் தியானிப்பதால் சிவபதம் எளிதில் கூடும். இதை அறியாத பிறரே தவமேற் செல்வர் என்பது கருத்து.

---

# 4. கம்பராமாயணம்.

சொற்சுவை, பொருட்சுவை செறிந்து விளங்குஞ் சிறந்த காவியங்களுள் கம்பராமாயணம் ஒன்று என்பது இலக்கிய ஆராய்ச்சியாளர் பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதோர் உண்மையாகும். அவரவர் அறிவாற்றலுக்கு ஏற்றபடி, உலக அநுபவம் முதிரமுதிர, கம்பராமாயணத்தைப் படிக்குந்தோறும் புதிய புதிய நயங்கள் மேன்மேலும் தோன்றிக் கொண்டிருக்குமென்று கம்பராமாயணத்தைக் கற்று அதன் சுவையில் ஈடுபட்டவர்கள் கூறுகின்றனர்.

கம்பராமாயணச் செய்யுட்களின் நடை, தெளிவு, செறிவு முதலிய குணங்கள் பொருந்தி, நவின்றோர்க் கினிமை பயப்பதாய்ச் செல்கின்றது. கவியைக் கோதாவரி நதியின் நீரோட்டத்திற்கு உவமையாகக் கம்பர் கூறியாங்கு, அவர் கவியும், இன்னோசையும், பொருளாழமும், தெளிவும், ஆற்றொழுக்கு முடையதாயிருக்கின்றது. சுருங்கச் சொல்லல் முதலிய அழகுகளைக் கொண்டுள்ள கம்பர்கவிகள், ஆங்காங்கே உவமை உருவகம் முதலிய பொருளணிகளையும், ஓரோவழி மடக்கு, சிலேடை முதலிய சொல்லணிகளையும் கொண்டு விளங்குகின்றன. நகை, அழுகை முதலிய ஒன்பான் சுவைகளும் ஒருங்கே அமைந்து மக்களியற்கை, உலகவியற்கை, இயற்கைப்பொருளழகு, தெய்வ அன்பு முதலியனவும் செறிந்து விளங்குகின்றன. "விருத்தமென்னும் ஒண்பாவிற் குயர்கம்பன்" என்ற பாராட்டிற்கேற்ப, கம்பரது விருத்தப்பாடல்கள் ஈடும் எடுப்பு மற்று விளங்குகின்றன.

கம்பரது பிறப்பு வளர்ப்புக்களைப்பற்றிய வரலாறு இருளிற் புதைபட்டுக்கிடக்கின்றது. இவர் சோழவள நாட்டில் திருவழுந்தூரில் ஆதித்தன் என்பவருக்குப் பிள்ளையாகத் தோன்றினர் என்பர். "சீரார் குணாதித்தன் சேயமையப் பாடினன்", "சீரணி சோழநாட்டுத் திருவழுந்தூரில் வாழ்வோன்", "மன்றே புகழும் திருவழுந்தூர் வள்ளல்" என்பன போன்றவை இதை வலியுறுத்தும். கம்பர் உவச்சர் குலத்தவரென்று ஒரு சாராரும் வேளாளர் குலத்தவரென்று மற்றொரு சாராரும் கூறுகின்றனர். ஆசிரியர் செல்வக்கேசவராய முதலியாரவர்கள், திரு அபிடேகப் படலத்தில் "வெண்ணெயூர்ச் சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி" என்று பாடி யிருப்பதும், நம்மாழ்வாரைக் "குருகூர்எங் குலக்கொழுந்தே" என்று பாராட்டியிருப்பதும், ஏரெழுபதில் "உழுங்குலத்திற் பிறந்தாரே உலகுய்யப் பிறந்தாரே" என்று பலபடியாக உழுதொழிலையும் வேளாளரையும் சிறப்பித்திருப்பதும் கொண்டு, கம்பரை வேளாளர் என்னலாம் என்றார்; அன்றியும் "திருவழுந்தூருவச்சன்" என்பதனினும் "திருவழுந்தூரில் வாழ்வோன்" என்னும் பாடமே சிறந்தது என்றார்.

கம்பர் என்னும் பெயர் குலம்பற்றிவந்ததென்றும், நாடு பற்றி வந்த தென்றும், திருவழுந்தூர் காளிகோயிற் கொடிமரத்தடியிற் கிடந்ததால் வந்ததென்றும், கூறுவர். காஞ்சியில் எழுந்தருளியிருக்கும் இறைவனது பெயராகிய 'ஏகாம்பரநாதர்' என்பதன் மரூஉப்பெயரே 'கம்பர்' என்பது என்று சிலர் கொள்ளுவர். கம்பர் என்னும் பெயர் சாசனங்களில் இயற்பெயராய் வழங்கியிருப்பதை நாம் காண்கின்றோமாதலின், இதை இயற்பெயராகவே கொள்ள இடமுண்டு. கம்பர் இளம்பருவத்திலேயே, திருவெண்ணெய் நல்லூரில் பெருஞ்செல்வராயும், சிறந்த வள்ளலாயும் விளங்கிய சடையப்ப முதலியாரை அடைந்து, அவரால் ஆதரிக்கப்பட்டு, பெரும்புலமை யுற்று விளங்கினர். கம்பர், தம்மை ஆதரித்த அவ் வள்ளலை, நன்றியறிதற் காரணமாகப் பத்து இடங்களில் புகழ்ந்துள்ளார். தாய் நாட்டிலும், தாய்மொழியிலும் இவருக்கிருந்த அளவு கடந்த பற்று ஆங்காங்கே செய்யுட்களில் பொதிந்து கிடக்கின்றது. "பொன்னிநாட்டுவமை வைப்பைப் புலன்கொள நோக்கிப் போனான்". "காவிரி நாடன்ன கழனி நாடு," "என்று முள தென்றமிழ்," "ஏழுலகும் புகழ் முத்து முத்தமிழ்," "தமிழெனும் அளப்பருஞ் சலதி" என்று வருங் கம்பர் வாக்குகள் இதனைப் புலப்படுத்தா நிற்கின்றன.

கம்பரது புலமை நம்மனோரால் அளவிடற்கரிய ஆழமும் அகலமுமுடையது. "கல்வியிற் பெரியன் கம்பன்" என்று இலக்கணங்களில் ஐந்தாம் வேற்றுமை ஏதுப்பொருளுக்கு உதாரணமாய் வருவதும், 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்" என்னும் முதுமொழியும்' "கம்ப நாடன் கவிதையிற்போற் கற்றோர்க் கிதயங் களியாதே" என்ற கூற்றும், பிறவும் கம்பரது புலமை மாட்சியை விளக்குகின்றன.

கம்பர் இராமாயணம் பாடுவதற்குப் பல காரணங்கள் கூறப்படினும், அகச்சான்றை நோக்குமிடத்து, அவருக்கு இராமபிரான் மீதிருந்த பேரன்பே முக்கிய காரணம் என்பது தெற்றெனவிளங்கும். வடமொழியிலுள்ள இராமாயணத்தைத் தமிழில் எழுதவேண்டும் என்னும் ஆர்வமும் இவரை இம்முயற்சியில் ஈடுபடுத்திற்று.

"ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ"

என்னும் கம்பர்வாக்கை நோக்குக.

வால்மீகிமுனிவர் அருளிய இராமாயணத்தின் கதைப் பகுதிகளை மட்டும் தழுவிக்கொண்டு, கம்பர் நூற்போக்கில் தமது நாடு, மொழி, காலம் முதலியவற்றிற்கு ஏற்ற ஒழுக்கமுறை, நடை, உடை, பாவனைகளை, அமைத்துக் கூட்டியும் குறைத்தும் பாடியுள்ளார்.

கம்பரது காலம் கி. பி. 9-ம் நூற்றுண்டு என்று ஒரு சாராரும், 12-ம் நூற்றுண்டின் பிற்பகுதி என்று மற்றொரு சாராரும் கூறுகின்றனர். பன்னிரண்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியே இவர்காலம் என்ற கொள்கை நிலைபெற்ருல், இவர் ஒட்டக்கூத்தர் காலத்தவராவர். விக்கிரம சோழன், இரண்டாங் குலோத்துங்கன், இரண்டாம் ராஜராஜன் ஆகிய சோழமன்னர் மூவர் காலத்தும் அன்னோர் அவைக்களத்துத் தனிப்புலமை நடாத்தி, "மூவருலா"வும் பாடியுள்ளார் ஒட்டக்கூத்தர். புகழேந்தியும் இரண்டாம் ஔவையாரும் இவர்காலத்தவரே என்று கொண்டு இம்மூவரையும் குறித்துப் பல கதைகள் வழங்குகின்றன.

கம்பர் பாடியதாக வழங்கும் ஏனைய நூல்கள் சடகோபரந்தாதி, ஏரெழுபது, சரசுவதியந்தாதி முதலியன.

கம்பராமாயணம் என்பது கம்பரது ராமாயணம் என விரியும். ஆரும்வேற்றுமைத் தொகை. கம்பன் என்னும் சொல்லோடு ராமாயணம் என்ற சொல் புணரும்போது நிலைமொழி ஈறு கெட்டது. 'சில விகாரமாம் உயர்திணை' என்ற விதியில் இது அடங்கும்.

ராம - அநயம் என்ற இரு வடசொற்களும் புணர்ந்து ராமாயணம் என்றுயின.

'ராம' என்னுஞ் சொல், தனது நற்குண நற்செயல்களினுலும், திருமேனி யழகினுலும் எல்லோர்மனத்தையும் இன்புறச் செய்பவன் என்று பொருள்படும். அயநம் = அறிவிப்பது; அதாவது வரலாறு; இராமனது வரலாறு என்பதாம். அயநம் என்பதற்கு இடம் அல்லது பொருள் என்று கொண்டு இராமனைப் பொருளாகக் கொண்ட நூல் என்றும் கூறலாம். அநயம் என்பதை நெறி அல்லது வழி என்று கொண்டு இராமனை அறியக் கருவியாக (வழியாக) உள்ள நூல் என்றும் கூறுவர். கம்பர் தம் நூலை 'இராமவதாரம்' என்று குறித்துள்ளார்.

கம்பராமாயணத்தில் ஆறு காண்டங்கள் உள்ளன. அவை பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்பன

நம் பாடப் பகுதி அயோத்தியா காண்டத்தில் உள்ளது. காண்டம் பெரும் பிரிவு. படலம் சிறுபிரிவு. பதினுன்கு ஆண்டுகள் காட்டில் வதிவதற்குப் புறப்பட்ட இராமன் அயோத்தி நகரத்தை விட்டு நீங்கும் செய்திகளைப்பற்றிக் கூறும் இப்படலம்.

## குறிப்புரை

1. கைகேயின் அரண்மனையிலிருந்து கோசலையின் அரண்மனைக்குச் செல்லும் இராமனது தோற்றம் இதில் சுருக்கமாகக் கூறப்படுகின்றது. முடி புனைந்து தன்வாழ்த்தைப் பெறுவதற்கு வருவான் இராமன்என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் கோசலைமுன், இராமன் செல்லும் தோற்றத்தையும், தான் காடு போகும் செய்தியை இராமன் தாய்க்கு அறிவுறுத்தும் செய்தியையும் முதல் ஆறுபாடல்களிற் காணலாகும். குழைக்கின்ற = வீசுகின்ற. கவரி = வெண்சாமரை. மழைக்குன்றம் = மேகங்கள் தங்கப் பெற்ற மலையை. மௌலி = திருமுடி (கிரீடம்). கவித்தனன் = கவித்து; சூட்டிக்கொண்டு. முற்றெச்சம்.

2. நளினபாதம் = தாமரை மலர்போன்ற திருவடி. குழைந்து = (மனம்) நெகிழ்ந்து; வருந்தி.

3. மானவன் = மனு மரபில் வந்தவன்; இராமன். துங்க = உயர்வுடைய. 4. மறுவில் = குற்றம் அற்ற;

6. தோமில் = குற்றமற்ற. ஏயது = ஏவியது. 7. மாண்ட = மாட்சி மிக்க.

8. குழை = காதணி. தூங்கு = (தொங்கி) அசைகின்ற. இளைத்தாடி கைத்தாள். இளைத்தாள் + திகைத்தாள் எனப் பிரிக்க. 9. வருத்த மிகுதியைக் காட்ட 'அஞ்சும்' என்னும் சொல் அடுக்கிவந்தது

10. கையை நெரித்தல், வயிற்றைப் பிசைதல் முதலியன வருத்த மிக்கார் செய்பவை. பெய்வளைத்தளிர் = வளையல்கள் நெருங்கிய தளிர் போன்ற (மெல்லிய) கைகளால். தளிர் = உவமை ஆகுபெயர். வெய்துயிர்க்கும் = வெம்மையான மூச்சை விடுவாள்.

11. பொன் பிழைக்க = செல்வம் தவறிப்போக. பொதிந்தனர் போல = (முகத்தை) மூடிக்கொண்டு வருந்துபவர்போல்.

12. இற = அழியும்படி. இறத்தல் என்றும் கொள்ளலாம். தெய்வதங்காள் = தெய்வங்களே! இராமனைப் பிரியும் தாய்க்குக் கன்றைப் பிரியும் பசுவை உவமை கூறினர்.

13. வாடனை = (உற) வாள் + தனை எனப்பிரிக்க. எனு = என்று. எனு தேற்றுவான் என்று அடுத்த பாட்டு இறுதியோடு இயையும். 14. பொற்புறுத்தன = அழகியன. கற்புறுத்திய = கல்லின் தன்மையை உறுதிப் படுத்திய. அதாவது கோசலையின் கற்பு கல்லின் உறுதிபோன்று மிகவும் உறுதியுடையது என்க.

15. பிறந்து+யான்; என்பது+யாவதோ எனப் பிரிக்க. இவற்றுள் வரும் இகரங்கள் குற்றிய லிகரங்களாம்.

16. ஒன்றுமோ என்ற சொல் ஒண்ணுமோ என வந்தது. பொருந்துமோ? தகுமோ என்பது பொருள்.

17. என்பது+யானும்=என்பதியானும். கொண்டனை போகு= உடன் அழைத்துக் கொண்டுபோ. கொண்டனை-முற்றெச்சம்.

18. துணிவதே=துணிவது தகுமா. ஏ-வினுப் பொருளில் வந்தது. 18. எம்பி=எனது தம்பி. திருவின் = திருவினின்றும்; அரசுரிமையினின்றும்.

20. பத்தும் நாலும் பகலலவோ-பதினான்கு பகல்கள்போலும்: மிக விரைவிற் கழிந்துவிடும் என்னும் கருத்து குறிப்பாய் உணர்த்தப்படுகிறது. மனிதர்க்கு ஓராண்டு. தேவர்க்கு ஒரு நாளாகும் என்ற குறிப்பும் உண்டு. பதினான்கு ஆண்டுகள் என்றால் மிக நீண்டகாலம் என்று தோன்றுமாதலால் இங்ஙனம் கம்பர் சுருக்கிக் கூறினர் என்க. முன்னும் 6-ம் செய்யுளில் பதினான்கு ஆண்டுகள் என்னமல் "ஆண்டு ஓரேழிரண்டேழு" என்று இராமன் கூறியது காண்க.

21. உரை பதைப்ப=பேச்சு பதைப்ப. (தடுமாற) மறுகிற்று= புரளலாயிற்று. கடல் உற்றது=கடலை ஒத்தது; கடலைச் சென்று சேர்ந்தது எனினுமாம்.

22. அருங்கலம்=பெறுதற்கரிய அணிகலன்கள். ஊதை=பெருங்காற்று. ஓசி=அசைகின்ற.

23. காவா=பாதுகாவாமல். காவாது என்பதன் ஈறுகெட்டது. மாவாதம்=பெருங்காற்று

24. பூவை=நாகணவாய்ப் பறவை. பூசை=பூனை.

25. புனற்புள்=நீர்வாழ் பறவைகளும். கள்=தேன். கால்வயப் போர்=தேரிற் பூட்டப்படுகின்ற வலிமையுள்ள போருக்கு உரிய. மா= குதிரைகள். கால்=சக்கரம். அது சினையாகு பெயராய்த் தேருக்கு ஆயிற்று. கால்=காலில் வலிமைமிக்க எனினுமாம். அல்லது காலாள் ஏறும் குதிரை என்றாலும் பொருந்தும். 28. ஓவாது=இடைவிடாமல். நிணகரார்=நீள்+ நகரார் எனப் பிரிக்க. 29. நன்று நன்று என்னும் அடுக்கு "பிற குறிப்பால்" தீமையாக உள்ளது என்னும் பொருள்படும். 30. நிருபன்=அரசன். இருந்தவா=இருந்தவாறு என்பதன் கடை குறைந்தது. தன்னேரிலாத= தனக்கு ஒப்பு (தன்னையன்றி வேறு இல்லாத) 31. இளையோன்=இலக்குமணன். தம் முனை=தம் முன்னை. தனக்கு முன் பிறந்தோனை. 32. சிறு

நாயின் குட்டன்=இழிவுள்ள நாய்க்குட்டி. நக்கான்=சிரித்தான். இங்கு கூறிய உவமையிலிருந்து, இராமனுக்கு உரிய நாட்டைப் பரதனுக்குக் கொடுத்தது என்னும் பொருளைப்பெற வைத்திருப்பதால் இதில் பிரிது மொழிதலணி பயிலுவது காண்க. 33. பரம்=சுமை. (பாரம்). என என் பதில் 'அ' ஆறும் வேற்றுமை உருபு.

34. எண்ணுட்டவர்=எண்ணத்தக்க (பலவாகிய) நாடுகளிலுள் ளரரும். மண்ணுட்டுநர்=மண்ணைப் படைப்பவர். காட்டுநர்=காப்பவர். வீட்டுநர்=அழிப்பவர். (மும்மூர்த்திகள்) 35. சிற்றவையால்=சிற்றன்னை யாகிய சுமித்திரையிடத்தில். ஆற்றற்றுணை=ஆற்றல்+துணை எனப்பிரிக்க. இலக்குமணனின் வில்லை மேகமாகவும், (புயல்=மேகம்) வில் நாணின் ஒலி யை இடியாகவும் உருவகித்தார்.

36. என் அத்த=எனது ஐயனே! (குழந்தாய் என்றுமாம்) இறை யேனும்=ஒரு சிறிதேனும். 37. மையிர்=மைபோல அல்லது மையைவிட. துய்யை=பஞ்சை. சுடுவான்=சுடுவதற்கு. வான் விகுதி, பெற்ற வினையெச் சம். 38. வலக்கார் முகம்=வெற்றியுடையவில். கோடி=பெற்றுக்கொள். 39. வளையா வரு=வளையாது வரு. மாறுகாமல் நடக்கின்ற. நிலத்து= இடத்தில் (மனத்தில்) எங்ஙன்=எப்படி.

40. நித்திலம்=பற்கள். சேண்டான் = சேண்+தான். அகலம் பொருந்திய (இடமகன்ற). 41. மின் குற்றொளிரும்=மின்னலை வென்று விளங்குகின்ற. வெயிறீக் கொடு=வெயில்+தீ+கொடு=வெயிலினுலும், தீயினுலும் செய்தாற்போன்ற. (கொடுமை வாய்ந்த). 42. என்னை=என்+ ஐ ஐ. சாரியை. என்ன என்பது பொருள். 43. காண்டி=பார்ப்பாயாக. முன்னிலை ஒருமை வினைமுற்று. 44. ஆய்தந்து=ஆராய்ந்து. நீ தந்தது= நீ இப்போது சொன்னது. நிலாதது அன்றே=இல்லாத தல்லவா. 45. கைம்மறித்தான்=கையை (மேலே தொழில் செய்யும்படி) அசைத்தான். (அன்றி) இராமன் வார்த்தையைத் தடுத்துக் கூறினுன் என்றுமாம். மிலைந் தானை=அணிந்தானை. 46. விரதம்=தவம். 47. மையல்=மயக்கம். வாகை= வெற்றி. கதம்=கோபம்.

48. செல்லும் சொல்=கேட்போர் காதில் ஏறவல்ல (கைகூட்டு விக்கும்) சொல். 49. தென்மொழி வடமொழி இரண்டையும் கம்பர் இணைப்பது காண்க. தென்சொற்கள் தந்தான் என்று கொண்டு, இனிய சொற்களைப் பேசினுன் என உரைப்பாரு முளர்.

## 5. வில்லி பாரதம்

பரத குலத்தவர்களாகிய பாண்டவர் துரியோதனர்களின் வரலாற் றைக் கூறும் நூல் பாரதம். நமக்குப் பாடமாக வந்துள்ளது, அருச்சுன னது மகனுகிய அபிமன்யுவுக்கும், சயத்திரதனுக்கும் நடந்த போரையும்

அதில் அபிமன் இறத்தலையும், அதைக்கேட்ட அருச்சுனனும் தருமனும் வருந்துதலையும் குறிக்கும் பகுதியாகும். துரோண பருவத்தில் பதின்மூன் ரும் போர்ச்சருக்கத்தில் உள்ளது.

இதை இயற்றிய வில்லிபுத்தூராழ்வார் திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் வாழ்ந்த வீரராகவன் என்பாரின் மைந்தராவர். வடமொழியும் தென்மொழியும் நன்கு கரைகண்டவர். இவர் திருமால் சமயத்தைப் பின் பற்றியவர். ஸ்ரீ வில்லிபுத்தூரிற் பிறந்த பெரியாழ்வாரின் பெயரையே (வில்லிபுத்தூராழ்வார்) இவருக்குப் பெற்றோரிட்டனர். அக்காலத்துத் திருமுனைப்பாடி நாட்டை ஆண்ட வரபதியாட்கொண்டான் என்னுமரசர் செந்தமிழ்ப் புலவர்களைப் போற்றிவந்தார். ஆழ்வாரை நோக்கி "நீயும் நானும், பிறந்த திசைக் கிசைிறப்பப் பாரதமாம் பெருங்கதையைப் பெரி யோர் தங்கள், சிறந்த செவிக் கமுதமெனத் தமிழ்மொழியில் விருத்தத்தாற் செய்க" என்று வேண்டிக்கொண்டதாலும், "மன்னுமாதவன் சரிதமும் இடையிடை வழங்குமென்னு மாசையால் யானுமீதியம்புதற் கிசைந்தேன்" என்று இவரே கூறுமாறு, கண்ணன் சரிதத்தைப் பாடவேண்டும் என்று ஆர்வ மிகுதியாற் பிடித்துந்தப்பட்டதாலும் இந்நூலை இவர் எழுதினர் என்க. இச் செய்திகள் இவர் மகனர் வரந்தருவார் எழுதிய சிறப்புப் பாயிரத்தாலும் ஆசிரியர் எழுதிய தற்சிறப்புப் பாயிரத்தாலும் விளங்கும்.

## குறிப்புரை

1. ஒரு கைகொண்டு = ஒரு கையைக்கொண்டே. (துரோணன் அபிமன்னனின் ஒரு கையை முன் வெட்டி வீழ்த்திவிட்டதால் ஒற்றைக் கையாலேயே அபிமன்னன் போர்புரிந்தான் என்க). ஒருபடி = இன்றை ஒருநாளை. விளிய = இறக்கும்படி. 2. உன் மருகனும் = உனக்கு (சயத்திர தனுக்கு) மருமகனை இலக்கணனும் (துரியோதனன் மகன்). மகபதி மகன் = இந்திரனது மகனை அருச்சுனன். பசுபதி = சிவபெருமான். உருகெழும் = அச்சம் விளங்குகிற.

3. உரகவெங்கொடி = கொடிய பாம்புக்கொடி. துரகதம் = குதிரை. வலவனை = ஒட்டியை; செலுத்துபவனை. வண்புனல் = நீர்மிகுந்த (சிறந்த) கங்கையைத் (தலையில் ஏந்திய)

4. மறலி = கூற்றுவன்; (யமன்). உருமெறிந்தது ஒத்து = இடி இடித்தாற்போன்று. 5. திருகி சுழற்றி. அனிலம் = காற்று. கனம் அதிர்வன = மேகங்கள் முழங்குவன. அண்டபித்தியும் = அண்டகோளத் தின் சுவர்களும். வயம் = வெற்றி. உடற்றினர் = போர் செய்தனர்.

6. பொற் பிதிர்பட = பொன் தூளாக. இப்பாட்டில் 'டகர' ஓசை பலமுறை இடையிட்டுவந்து ஓசை நயம் கொடுப்பது காண்க.

7. மருதிரண்டு = இரண்டு மருதமரங்கள். விபுதர் = தேவர். முனை = போரில்.

8. இவுளி = குதிரை. துவசம் = கொடி. சரபம் = (சிங்கத்தையும் கொல்லவல்ல) ஒரு விலங்கு.

9. பதயுகங்கள் ஒத்திய = இரண்டு கால்களையும் உறுதியொடு வைத்த. கணம் = கூட்டம். பணம் = படம். புயங்கர் = நாகர். எதிர் கொடண்ட மொத்திய = எதிர் எதிரிற்கொண்ட கதை தாக்குவதனுலுண் டான. எதிர்கொள் + தண்டம் + மொத்திய எனப்பிரிக்க. இபம் = யானைகள். கதியில் = வேகமாக. சித்திரம் = புலி. கதுவி = பற்றி. மண்டலித்து = சுழன்றுவந்து.

10. உலேவிறண்டினில் = உலேவில் + தண்டினில் எனப்பிரிக்க. பரிசனன் மதலே = வாயுவின் பிள்ளையாகிய வீமன்.

11. கழுதினங்கள் = பேய்களின் வகைகள். கவந்தம் = உடற் குறைகள் (முண்டங்கள்) பவுரி = தானே சுழன்ருடுங் கூத்து. உததி = கடல்.

12. முற்றெறுதலின் = முன் + தெருதலின் எனப்பிரிக்க. நிருப துங்கன் = அரசரிற் சிறந்த துரியோதனனது மைத்துனன். உடன் பிறந்தவள் கணவனுன சயத்திரதன் 13. தெறுவது = அழிப்பது. பற்குனன் = அருச்சுனன். பவனன் = வாயு. கிரி = மேருமலே. 14. தரியலன் = பகைவன். மறிந்தது = சாய்ந்தது. 15. புயங்க கேதனன் = பாம்புக்கொடியோனுகிய துரியோதனன். 16. சக்கரம் பிளந்தவாறும் = (பகைவரிட்ட) சக்கர வியூகத் தைப் பிளந்த தன்மையையும். துக்கரமான = செய்ய ஒண்ணுத (தெய்வத் தன்மையுள்ள). கொன்றைத் தொடையல் = கொன்றைமாலே. (துரியோதன் கூற, சயத்திரதன் சிவபெருமானருளிய கொன்றை மாலேயை எறிய, அது குறுக்கிட்டதால் அபிமன்னன் அதை மிதித்துக் கடந்துசெல்லாமல் அங்கு நின்றுகொண்டே பகையை முறியடித்து மடிவதாகத் துணிந்ததை இது குறிக்கிறது). உருத்து = கோபித்து.

17. பன்னக அரசன் = அரவரசன். மதலே = பிள்ளை; இராவான்.

19. தந்திரம் = சேனே. அந்தரம் = மேல் உலகு. மைந்து = வலிமை; களிப்பு. 20. பிதாமகன் = பாட்டன். (இந்திரன்).

---

# IV. பல்சுவைப் பகுதி

## 1. புறநானூறு

ஒரு நாட்டின் பழைய வரலாற்றை அறிவதற்கு, அந்நாட்டிலுள்ள பண்டைக் கட்டிடங்களும், கல் வெட்டுக்களும், செப்புப் பட்டையங்களும், பண்டைய நாணயங்களும், அந்நாட்டைப்பற்றிப் பிறநாட்டார் எழுதி வைத்தவைகளும், பிறவும் முக்கிய சான்றுகளாயிருப்பினும், பழைய இலக்கியங்களே அவற்றினுஞ் சிறந்ததொரு சான்றாகும் என்று ஆராய்ச்சி யாளர் கொள்கின்றனர். அம்முறையில், பல்லவர்கள் ஆட்சித்தொடக்க மாகிய கி. பி. மூன்றும் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ்நாட்டின் வரலாற் றை யுணர்வதற்கு அக்காலத்து எழுந்த நூல்களே நமக்கு உதவி புரிவன வாகும். அப்படிப்பட்ட நூல்களுள் தலைசிறந்து விளங்குவன பத்துப் பாட்டு, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு முதலியன.

புறநானூறு என்பது, கடைச்சங்க காலத்தில் பாடப்பெற்ற செய் யுட்களையும், கடைச்சங்க காலத்துக்கும் முன்பே பாடப்பெற்று அப் போது வழங்கிவந்த செய்யுட்களையும் சேர்த்துத் தொகுத்ததொரு தொகை நூல். புறப்பொருள்பற்றிய நானூறு பாடல்களாலாகியதனால் புறநானூறு என்று பெயர் பெற்றது. இது புறம் எனவும், புறப்பாட்டு எனவும் வழங் கும். புறநானூறு எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. எட்டுத்தொகை நூல்களாவன:—நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன.

புறநானூற்றால், பண்டைக்காலத்துத் தமிழ்நாட்டை யாண்ட முடி யுடை மன்னர், சிற்றரசர், சேனைத்தலைவர், வீரர், வள்ளல்கள் முதலிய பலர் வரலாறுகளும், கடைச்சங்கப்புலவர் பலரின் வரலாறும், அக்காலத் தாரின் நடையுடை எண்ணங்களும், அரசியல்முறை, போர்முறைகளும், சமயநெறி, பழக்க, வழக்கங்களும், பிறவும் நன்கு புலப்படும். இந்நூலி லுள்ள பாட்டுக்களைப் பாடிய புலவர் அனைவரும் ஒருகாலத்திருந்தவரல்லர்; ஒரு குலத்தவரு மல்லர்; ஒரு நாட்டினரும் அல்லர். பாடியவர்களுள் அந்தணர் சிலர், அரசர் சிலர், வணிகர் பலர், வேளாளர் பலர், பெண்பா லாரும் சிலர் உளர்.

கடைச்சங்கநூல்களெல்லாம் தொழில் பொருள், அளவு, பாட்டு என்பனபற்றித் தொகுக்கப்பட்டன. அவற்றுள், புறநானூறு பொருளால் தொகுக்கப்பட்டது. இங்கு பொருளாவது அறத்தையும் பொருளையுங் குறிக்கும் புறப்பொருள்.

## குறிப்புரை

1. பொதுவியல்:—புறத்திணைகளில் எல்லாத் திணைகளுக்கும் பொதுவாகிய இலக்கணங்களைத் தொகுத்துக் கூறுவது. பொருண் மொழிக் காஞ்சி:—முனிவர் தெளிந்த பொருளை (உயிருக்கு இம்மை மறுமைகளில் உறுதி தருகின்ற பொருளை) ஒருவனுக்குக் கூறுதல். உண்டால் அம்ம=ஆல், அம்ம, அசைகள். அம்ம=வியப்பிடைச் சொல்லுமாம். 'இவ்வுலகம் பிறர்க்கென முயலுநர் உண்மையான் உண்டு' எனக் கூட்டுக. "பண்புடையார் பட்டுண்டுலக மஃதின்றேல். மண்புக்கு மாய்வது மன்" என்னும் குறளின் சொற்பொருளொடு ஒப்பிடுக. தமியர்=தனியாக. துஞ்சலுமிலர்=மடிந்திருத்தலுமிலர். அயர்விலர்=மனக் கவற்சியில்லார்.

2. வாகை:—வாகைப்பூவைத் தலையிலேசூடிப் பகைவரைக்கொன்று ஆரவாரித்தல் (வெற்றிமாலை சூடல்.) மூதின் முல்லை:—வீரர்க்கல்லாமல் அம் மறக்குடியிற் பிறந்த மகளிர்க்கும் கோபமுண்டாதலை மிகுத்துச் சொல்லுதல். இப்பாட்டால் பண்டைத் தமிழரின் வீரமும் வீரத் தாய்மாரின் திறமும் விளங்குவது காண்க. இவள்=போர்க்கோலஞ்செய்து மகனைப் போர்க்கனுப்பும் தாய். இவள் தன் ஐ=இவளுடைய தமையன். எறிந்து=அழித்து. நெருநல்=நேற்று. விலங்கி=தடுத்து. வெளிது=வெள்ளிய ஆடை. பாறு மயிர்=விரிந்த மயிர். இதைப்பாடிய மாசாத்தியார் நல்லிசைப் புலமை மெல்லியலாராவர்.

## 2. நந்திக் கலம்பகம்

திருவருணைக் கலம்பகக் காப்புச் செய்யுளில் "கலம்பகப் பாமாலை" என வருதலால், பலவகைப் பூக்களாலாகிய மாலைபோலப் பலவகைப் பாக்களைக் கொண்டு அமைக்கப்பட்ட பாமாலையைக் கலம்பகம் எனப் பண்டையோர் வழங்கினர் என்று தெரிகின்றது. "கலம்பகம் புனைந்த அலங்கலந் தொடையல்" என்னும் அடியினும் 'கலம்பகம்' என்னுஞ் சொல் இப் பொருளில் வழங்கியிருத்தல் காண்க. இவ்வாறு பொருள் கொள்ளும் போது இது 'கதம்பகம்' என்னும் வட சொல்லின் திரிபு என்று கொள்ளலாம் என்பர். ஆனல் கலப்பு+அகம் எனப்பிரித்து, மெலித்தல் விகாரம் பெற்ற தாக்கிப் பல உறுப்புக்களும் கலத்தலைத் தன்னகத்தே உடையதென்று கூறுதலே சால்புடைத்து.

கலம்பகம், புயவகுப்பு, அம்மானை, தவம், குறம், மறம் முதலிய உறுப்புக்களையுடையது எனப் பாட்டியல்கள் கூறுகின்றன. கலம்பகங்களில் மிகப் பழையதாகிய இந்நந்திக் கலம்பகத்தில் 18 உறுப்புக்கள் இல்லை. பிற்காலக் கலம்பகங்களில் 18 உறுப்புகளுக்கு மேலும் உள்ளன. வெண்பா முதலிய பாக்களும், பாவினங்களும் விரவச் செய்யுட்கள் கலம்பகத்தில் அந்தாதித் தொடையாய் அமைந்து வரும்.

நந்திக் கலம்பகம் என்பது "நந்தியைக் குறித்தியற்றப்பட்ட கலம்பகம்" என்று பொருள்படும். இதிற் கூறப்பட்ட நந்தி பல்லவகுல வேந்தரில், வந்து, கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் 825 முதல் 850 வரை அரசாண்ட மூன்றும் நந்தி வர்மனாவான். இவன் தெள்ளாற்றில் வரகுண பாண்டியன் முதலிய பகைவரை வென்று முறியடித்ததனால் இவனைக் கல்வெட்டுகள் எல்லாம் "தெள்ளாறெறிந்த" நந்தி வர்மன் என்று குறிக்கின்றன. இக்கலம்பகத்தில் நந்தியின் கல்வி, கொடை, வீரம் முதலியன சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கின்றன. இதன் ஆசிரியர் பெயர் வரலாறு முதலியன ஒன்றும் தெரியவில்லை.

## குறிப்புரை

1. **மறம்** :—ஓர் அரசன் மறவர் மகளைத் தனக்கு மணம்பேசி வருமாறு ஒரு தூதனை விடுக்க, மறவர் மணத்தினை மறுத்து அவ்வரசனையு மிகழ்ந்து கூறியதாகப் புலவர் பாடுவது. நந்தியின் பகையரசாது யானைகளைக் கொன்று அவற்றின் கொம்புகளைத் தம் வீட்டின் குறுங்காலும் நெடு வளையுமாக நட்டிருப்பதாகக் கூறுவதிலிருந்து மறவர் வீரம் விளங்குவது காண்க.

2. **ஊசல்** :—மகளிர் ஊசலாடுவதாகப் பாடித் தலைவனது பெருமையைப் புலவர் வெளிப்படுத்தல். இதனால் நந்தி தெள்ளாற்றில் வென்றதும், அவன் மறு பெயரும், பல்லவர்க்குக் காடவர் என்ற பெயருண்மையும், பல்லவர் தலைநகரம் காஞ்சி என்பதும் புலப்படும்.

## 3. காளமேகப் புலவர்

கார்மேகம், அளவற்றும், தனக்கென்று வரைந்து வைத்துக்கொள்ளாமலும், கைம்மாறு கருதாமலும், இன்னார் இனியார் என்ற வேற்றுமையில்லாமல் உலக முழுவதற்கும், இன்றியமையாத மழையைப் பெய்து இன்புறுத்துவது போலவே காளமேகப் புலவரும், கி. பி 15-ம் நூற்றாண்டில் திருமலைநாயக்கன் காலத்து, மிகவிரைவினும், அளவற்றும், பலபொருள் பற்றியும், பலபேர்மீதும் இனிய, எளிய, நடையிற் கவி பாடவல்ல புலவராவர். திருவானைக் காவுலாத் தவிர முழு நூலாக இவர் செய்ததாக ஒன்றும் தெரியாவிடினும், பல இடங்களில் பல சமயங்களில் தனித் தனியாகப் பாடிய பல பாடல்கள் தனிப் பாடல் திரட்டில் சேர்க்கப் பெற்றுள்ளன. இரட்டுற மொழிதலாக (சிலேடையாக)ப் பாடுவதிலும் வசை பாடுவதிலும் இவர் சிறந்தவர். இவர் காலத்து இரட்டைப் புலவரும், அதி மதுரகவியும் சிறந்திருந்தனர். நமக்குப் பாடமாக வந்துள்ளது பாம்புக்கும் வாழைப்பழத்துக்கும் சிலேடையாகப் பாடியது.

## குறிப்புரை

மலையில் பாம்பும், மலை வாழைப்பழமும் சிறந்தன. அவை யிரண்டையும் சேர்த்துப் பாடி இன்புறுத்துகிறார் புலவர்.

**பாம்பு.** நஞ்சிருக்கும்=நஞ்சை உடைத்தாயிருக்கும். தோல் உரிக்கும்=அவ்வப்போது தனது சட்டையைக் கழற்றும். நாதர்முடி=இறைவனது திருமுடி. வெம்சினத்தில்=கொடிய சினத்தில். மீளாது=நஞ்சு இறங்காது.

**வாழைப்பழம்.** நஞ்சிருக்கும்=(கனிந்து) நைந்து இருக்கும். நைந்து என்பதற்கு நஞ்சு போலியாய் வந்தது. ஐந்து, அஞ்சு என்று வருவதுபோல. தோல்உரிக்கும்=வாழைப்பழத்தோல் உரிக்கப்படும். வெஞ்சினத்தில்=உணவாக ஆகுங்கால்; மீளாது=(பற்களால் அரைத்த பின் விழுங்கப்படுவதால்) திரும்ப வெளியேவராது. விஞ்சுமலர்=மிகுதியான பூக்கள்.

---

## 4. குமரகுருபர சுவாமிகள். மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.

பிள்ளைத்தமிழ் என்பது, தமிழில் உள்ள 96 வகைப் பிரபந்தங்கள் என்ற சொற்றொடர்நிலைச் செய்யுட்களில் ஒன்றாம். இது ஆண்பால் பெண்பால் ஆகிய இருபாலுக்குமுண்டு. ஒரு புலவன் தான் பாடப்புகுந்த தெய்வத்தையோ அல்லது தலைவரையோ குழந்தையாகக் கருதி தன் அன்புடைமை தோன்றப் பாடுவது. அவ்வாறு பாடுங்கால் குழந்தையின் செயல்களைக் குழந்தையின் வளர்ச்சிமுறைக்கேற்பப் பத்துப் பருவங்களாகப் பிரித்துப் பாடுவர். அவை யாவன:— காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பன. ஈற்றில் உள்ள மூன்றும் ஆண்பாலுக்குரியன. பெண்பாலுக்கு ஈற்றிலுள்ள மூன்று பருவங்களும், அம்மானை, நீராடல், ஊசல் என்று வரும். மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில், உமாதேவியார், மலையத்துவச பாண்டியனுக்குத் திருமகளாய்த் தோன்றி, தடாதகைப் பிராட்டியராய் வளர்ந்த வரலாற்றைச் சுற்றத்தார் முதலியோர் பாராட்டிப் பேணியதைப் புலவர் பாடுகிறார். நம் பாடப்பகுதி வருகைப் பருவத்து ஒன்பதாவது பாட்டாகும். இதை இயற்றிய குமரகுருபரர், மதுரைத் திருமலைநாயக்க மன்னன் காலத்து ஏறக்குறைய முந்நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் ஸ்ரீவைகுண்டம் என்று வழங்கும் கைலாசபுரத்தில் சைவ வேளாள மரபில் சண்முக சிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமியம்மைக்கும் சைவமும் தமிழும் தழைக்கப் பிள்ளையாய்த் தோன்றினர். இளமையிலேயே திருச்செந்தூர் முருகக்கடவுளினருள் பெற்றுத் தருமபுர ஆதீனத்தில் நான்காவது குருமூர்த்தியாகிய மாசிலாமணி தேசிகரால் ஞான உபதேசம் செய்யப் பெற்றார். காசியிலும் சிதம்பரத்திலும் வசித்தார். அவர் பெயரால் அவர் காசியில் கட்டிய மடம் இன்றும் இருக்கிறது. இவர் இயற்றிய வேறு நூல்களிற் சில:— மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம், சிதம்பரச் செய்யுட்கோவை, பண்டார மும்மணிக் கோவை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், நீதிநெறி விளக்கம் முதலியன.

### குறிப்புரை

துறைத்தீந்தமிழ்=பல அகப்புறத் துறைகளை உடைய இனிய தமிழ். அகந்தை=நான் எனது எனும் ஆணவம். (அகப்புறப் பற்றுகள்). ஆணவமே எல்லாப் பெருங் கேடுகளுக்கும் முதற்காரணமாயிருப்பதனால் அதனைக் 'கிழங்கு' என்றார். தொழும்பர்=தொண்டர். பொருப்பு=மலை. எறிதரங்கம்=மோதுகின்ற அலை. ஈண்டு ஆகுபெயராய் அலையை உடைய கடலைக் குறித்தது. நிலத்தைச் (நிலங்களைச்) சூழ்ந்திருக்கும் கடல் அதற்கு ஆடைபோலிருக்கிறது. மதுகரம்=வண்டு. குழற்காடு=கூந்தல் தொகுதி (திரள்)

## 5. தேசிக விநாயகம் பிள்ளை. மலரும் மாலையும்.

‘மலரும் மாலையும்’ என்னும் கவிதைத்திரட்டு இக்காலத் தமிழ்ப் புலவர்களில் ஒருவராய்த் திகழும் புலவர், கவிமணி. தேசிக விநாயகம்பிள்ளையவர்களின் சிறந்த பாடல்களின் தொகுதியாகும். இதிலிருந்து எடுக்கப்பட்டதே நம் பாடமாகிய ‘செல்வமும் சிறுமையும்’ என்பது. இதில் செல்வச் சிறப்பில் முழுகியிருக்கும் சிறுமியரின் களிப்பையும், ஏழைச் சிறுமியரின் மனப் புழுக்கத்தையும் வாழ்க்கையில் நாம் நேரில் பார்ப்பது போலவே சொல் ஓவியமாகத் தீட்டியிருக்கிறார். பல நிறங்களும், மணமும், உருவும், எழிலும் கொண்ட பல மலர்களையும் ஒரு மாலையாகத் தொடுத்தால், பார்ப்பதற்கு அம்மாலை கண்கொள்ளாக் காட்சியாக, நம் கண்ணையும் கருத்தையும் கவருவதுபோல், பல்வகைப்பட்ட சுவைகளும், பொருளும் நிறைந்த பல்வகைப்பட்ட பாடல்களாகிய இந்நூலும் பாக்களால் ஆகிய பாமாலையாமென்க. பிள்ளையவர்கள் திருவிதாங்கூர் நாட்டிலுள்ள சுசீந்திரத்தை அடுத்த தேரூர் என்னும் சிற்றூரில் கி. பி. 1876-ம் ஆண்டிற் பிறந்தார். பெற்றோர் சிவதாணுப் பிள்ளை, ஆதிலக்ஷ்மியம்மாள். இவர்கள் சிலகாலம், பல பள்ளிக்கூடங்களில் ஆசிரியராகவும் பின் ஆசிரியர் பயிற்சிப் பள்ளிக்கூடங்களில் ஆசிரியராகவும் இருந்து இறுதியில் திருவனந்தபுரம் பெண்கள் கல்லூரியில் ஆசிரியராய் இருந்து 1931-ம் ஆண்டில் ஓய்வு பெற்றிருக்கின்றார்கள். இந்நூல் அஞ்சலி முதலிய பத்துப் பகுதிகளைக்கொண்டு படிப்போரின் செவியையும் சிந்தையையும் கவர்ந்து தமிழின்ப வெள்ளத்தில் ஆழ்த்திவிடும்.

---

# 6. சோமசுந்தர பாரதியார் மாரிவாயில்.

## விந்தியமலைச் சிறப்பு.

'மாரிவாயில்' என்பதற்கு, மேகத்தைத் தூதனுப்பல். என்பது பொருள். மாரி இங்கு மேகம் என்னும் பொருளது. மேகத்தைக் காதலர்கள் தூதனுப்புவதாகச் செய்யுள் செய்வது பண்டைப் புலவர் வழக்காகும். இவ்வகை நூல்களில் காளிதாசரது 'மேகசந்தேசம்' சிறப்புற்றது. 'மாரிவாயிலும்' பாண்டவருள் நடுப்பிறந்த பார்த்தனுக்கு, அவன் தமிழ் மனைவியான பாண்டியன் மகள் மாரியைத் தூதனுப்பியதாகக் கற்பித்துக் கூறுகிறது. பார்த்தன் தனது நீராடற் செலவில் (தீர்த்த யாத்திரை) தென் பாண்டி நாட்டில் பாண்டியன் மகளாகிய சித்திராங்கதையைக் கண்டு காதலித்து மணந்த பாரதக் கதையை வைத்துக்கொண்டு புதுவதாக எழுதப் பட்டுள்ள காவியம் இது. நமது பாடம் மேகம் தவழ்ந்து கடந்து வடக்கே செல்லும்போது எய்துறும் விந்திய மலைச் சிறப்பைக் கூறும் பகுதியாகும்.

சொல்நயம் பொருள்நயம் செறிந்து விளங்குமிக் காவியத்தை இயற்றிய நாவலர். பாரதியாரவர்கள் இலக்கிய இலக்கண அறிவின் ஆழத்திலும் அகலத்திலும் மிகச் சிறந்தாராய், இலக்கியச்சுவை நயத்திலும், இலக்கிய ஆராய்ச்சியிலும், சொற்பொழிவாற்றலிலும் மிக நுண்மாண் நுழைபுலம் வாய்ந்தாராவர். முதலில் சிறந்த வழக்கறிஞரா யிருந்தாலும், தமிழ்க்கல்வியையும் ஆராய்ச்சியையுமே தமது பொழுதுபோக்காகக் கொண்ட இவரை, இராமநாதபுர,-எட்டையபுர, செட்டிநாட்டு, மன்னர்களும் போற்றிப் புரந்தனர். பின்னர் இவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து இப்பொழுது ஓய்வு பெற்றுப் பசுமலையில் இருந்து வருகிறார்கள். இவர்களுடைய ஆராய்ச்சித் திறத்துக்கும், தமிழ்வளத்துக்கும், இவர் எழுதிய தொல்காப்பிய உரை, திருவள்ளுவர், தசரதன் குறையும் கைகேயி நிறைவும், சேர வேந்தர் தாயவழக்கு முதலியன போதிய சான்றாகும்.

## குறிப்புரை

(1) விந்தியமலை, கோதாவரி பாய்கின்ற தென்னிலப் பகுதியை வடக்கே கங்கை நிலப்பகுதியின்றும் பிரித்துக் குறுக்கே கிடக்கும் இயல்பை இப்பாட்டு விளக்குகிறது. வளாகம்=வரைப்பு, இவ்வளாகம் என்பது இவ்வாசிரியர் 'தென்கங்கை' என்று சிறப்பிக்கும் கோதாவரி ஆறுபாயும் நிலப்பகுதியை. கலங்குபு=கலங்கும்படி. 'செய்பு' என்னும் வாய்பாட்டு எச்சம். 'செய' என்னும் வாய்பாட்டுப் பொருளில் வந்தது. மாசுணம்=பெரும்பாம்பு. முன் பாற்கடலைக் கடைந்த களைப்பைக் கந்

கைக் கோட்டத்தில் கங்கைப் பொழிகளில் நீக்கிக் கொள்ளக் கருதிக் குறுக்கே படுத்துக் கிடப்பது போன்றிருந்தது விந்தியம். தற்குறிப்பேற்ற வணி.

(2) அறத் தொல்லை நாகரிகம்=மிகப் பழைய நாகரிகம். வடபால் நிலவும் மொழிவழக்கு, தொழிலறம், குலத்தியல், முதலியவை தென்பால் வந்து கலக்காதவாறு விந்தம் காத்துக்கொண்டிருக்கிறது.

(3) மஞ்சு=மேகம். மிண்டி=நெருங்கி. கன்னி=(கன்னியா) குமரி. குமரித்துறையில் கன்னிக்கடவுளைவழிபட்டுத் தன்காதலன் தீதிலனாய்த் திரும்பிவந்து தன்னோடு வாழவேண்டும் என்று வரங்கிடக்கு மிடத்தில்தான் மேகத்தைப் பார்த்துத் தூது விடுக்கின்றுளாதலின் குமரித் துறையைக் குறிப்பிடுகிறார் இங்கு. இருமலைத் தொடர்=கிழக்கு, மேற்குத் தொடர்ச்சி மலைகள். குடகுணக்கு=மேற்கும் கிழக்கும். இருமலைத்தொடர்களும் விந்த மலைத் திசையிருந்து தெற்காய் ஓடிக் குமரியருகே கூடுவதைப் புலவர், விந்தமலை யரசன் தன் காதற்குரிய தென்னில மகளை இரு மலைத் தொடர்களாகிய கரங்களால் தழுவிக் கொண்டதாகத் தன் குறிப்பை ஏற்றிக் கூறும் அணிபயிலுவது காண்க.

# 7. நாமக்கல் கவிஞர். இராமலிங்கம் பிள்ளை.

இக்காலத் தமிழ் மறு மலர்ச்சிப் புலவர் பெருமக்கள் வரிசையில் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையவர்கள் சிறந்த இடத்தைப் பெறுவராவர். இவர் நாட்டிற்கும் மொழிக்கும் செய்திருக்கும் தொண்டுகளை ஏட்டில் எடுத்துக்கூற இயலாது. சொல்லியும் முடியாது. தூக்கத்திற் கிடந்த தமிழ் மக்களைத் தட்டி எழுப்பி ஊக்கத்தையும் உள்ளக் கிளர்ச்சியினையும் தரவல்லன இவர்பாடல்கள். தமிழன் இதயம், சங்கொலி, அவனும், அவளும் போன்ற கவிதைகளின் சொல்லாழமும் பொருட் செறிவும், காவியச்சுவைகளும் படிப்போரின் சிந்தைக்கும் செவிக்கும் நல்விருந்தாகும். குல, சமய, அரசியற் பூசல்களை விரட்டியடிக்கும் சங்கொலியாயும், முழு அடிமையாக விருப்பினும் உரிமை உணர்ச்சியை ஊட்ட வல்ல போர் முரசாகவும் இவற்றைக் கொள்ளலாகும். தனது வரலாற்றையும் புலவர் தானே எழுதியிருக்கிறார். நமக்குப் பாடமாக வந்திருப்பது ‘தமிழன் இதயத்தில்’ இளந்தமிழருக்கு ஆசிரியர் அறிவுறுத்தும் பகுதியாகும்.

---

# 8. பாரதிதாசன் பாடல்.

கவிப்பா அமுதத்தோடு இசையின் கறியும் சேர்ந்து சிந்தைக்கும் செவிக்கும் நல்விருந்தாகும் கவி இன்ப வெள்ளம் பெருக்கெடுத்தோடும் மாறு கவிதைகள் இயற்றும் இக்காலப் புலவர் வரிசையில் வைத்தெண்ணும் சிறந்த புலவராகிய 'பாரதிதாசன்', உலக ஒற்றுமை முதற்கொண்டு, இல்லறமாண்புவரை உள்ள கேள்விகள், சிக்கல்களையெல்லாம் அறுத்துச் சீர்படுத்தி வரும் கவிதைகளைத் தமிழ் மக்களுக்கு வழங்கி வருகின்றார். இக்காலத் தமிழ் மறுமலர்ச்சியில் இவருக்கு ஒரு தனிப்பெரும் இடம் உண்டு. புதுச்சேரியில் 1891-ம் ஆண்டு ஏப்ரல் 17-ம் நாள் பிறந்த இவருடைய இயற்பெயர் சுப்புரெத்தினம் என்பது. தந்தையார் கனகசபை முதலியார். இவர் இளமையிலே நடிப்புத்திறம் வாய்ந்தவராயிருந்தார். இயல், இசை, நாடகமாகிய முத்தமிழிலும் துறைபோகிய உத்தமப்புலவராகிய இவரைப்போல் பேறு பெற்றவர்களைக் காண்டல் மிகவும் அரிது. இவர் பாடல்கள் தவிர, அழகின் சிரிப்பு, எதிர்பாரா முத்தம், இருண்ட வீடு, குடும்ப விளக்கு, பாண்டியன் பரிசு முதலிய பல கவிதைகளை இயற்றியிருக்கின்றார். நமக்குப் பாடமாயுள்ளவை, இவர் பாடிய அழகின் சிரிப்பிலிருந்து எடுக்கப் பெற்றனவாகும்.




TB
0-,6(S)
N47

